

தருமபுர ஆதீன குருமுதல்வர்

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

குருபாதம்

மன்மத ஆண்டு, வைகாசித் திங்கள்
இருபத்தெட்டாம் நாள் நிகழும்

ஆதி குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

# குருபூஜை

நினைவு வெளியீடு.



திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்

25-ஆவது குரு மகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

வெளியீடு எண். 347.

உ

குருபாதம்

# திருக்கேதார யாத்திரை

குருஞானசம்பந்தப் பெருமான் திருவடித் தாமரைகளில் சூட்டப்பெற்றது.

தருமபுர ஆதீனம்

25-ஆவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**

அருளாணையின் வண்ணம் வெளியிடப்பெற்றது




1955

தருமபுர ஆதீனம்.

வெளியிடுவோர் :

வித்துவான்

ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

தலைவர், தருமபுர ஆதீன மடாலய, தேவாலய

சமயப்பிரசார நிலையம், சென்னை.

**பதிப்பகம்**

ஞானசம்பந்தம் பதிப்பகம்,

தருமபுரம்.

உ

குருபாதம்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் இளவரசு

## ஸ்ரீலஸ்ரீ மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

வழங்கிய

# முன்னுரை

பூவுலகில் யாத்திரை மனித சமுதாயத்துக்குப் பழமை யானதாகும். மானிடப்பிறவி எடுப்பதற்கு முன்னதாகவே ஒவ்வொரு ஆன்மாவும் பிறவியாகியயாத்திரையைத் தொடங்கு கிறது. அது புல்லாகிப் பூடாகிப் புழுவாய்ப் மரமாகிப் பல் மிருகமாகிப் பறவையாய் பாம்பாகிக் கல்லாய் மனிதராகிற யாத்திரையாகும். அந்தச் சீவயாத்திரையைத்தான் சிவம் பெருக்கும் திருவாசகத்தில் சிவபுராணம் அருளுகிறது. அவ் வாறு யாத்திரை செய்து மனிதப்பிறப்பை அடைந்த உயிர், அதன்மேலும் யாத்திரை செய்து அருளுணர்வுபெற்றுத் 'தேவ ராக' மாறுகிறது. 'தீயதீர எண்ணுவார்கள் சிந்தையுடாய தேவரே' என்கிறது திருமுறை. இவ்வாறு மனித உயிர் யாத்திரை செய்து, மூர்த்தி தலம் தீர்த்தம் தொழுதற்கேற்ற ஞானதானங்களாக நாவலந் தீவில் உள்ளவை பல. அவற்றுள் திருக்கேதார யாத்திரையும் ஒன்று.

திருக்கேதாரம் இமயமலையில் ஒரு பகுதி. மந்தாகினிக் கரையிலே மாதேவன் வீற்றிருக்கும் பெருந் திருக்கோயில். அங்குச் சென்று அப்பெருமானை ஒவ்வொருவரும் தரிசிக்க வேண்டும். அந்தக் கயிலாய பரம்பரையில் வந்த ஞானதீன மாகிய திருத்தருமபுரத்து 25-வது குருஞானசம்பந்தப் பெருமா னுகை வீற்றிருக்கும் குருமுதல்வர் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளுக்கும் தரிசிக்க வேண்டும் என்ற அவ்வெண்ணம் உண்டாயிற்று. ஆம்; திருவருள் உணர்த்தத் திருக்கேதாரத்தைத் தரிசிக்கத் திருவுளங் கொண் டார்கள். கேதாரச் சிந்தனை என்கின்ற ஞானவிளக்கு, கொழுந்து

விட்டெரிந்தது. அவ்விளக்கினுக்குத் தூண்டுகோலாக அமைந் தவர்கள் அப் பரம்பரையில் வந்த குமரகுருபர சுவாமிகளின் 20-வது பிற்றோன்றலாக அருளாட்சி புரிந்து வருபவர்கள், பனசை ஸ்ரீ காசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணாந்திதம்பிரான் சுவாமிகள் ஆவார்கள். அவர்களுடன் யாத்திரை தொடங்கிற்று. திருவருளால் இனிதே நிறைவேறிற்று. அந்த யாத்திரையின் விளைவாக உலகம் உய்ய இத்தல யாத்திரைநூல் என்ற ஞான ஒளி உலகெங்கும் பரவுகிறது. இது தமிழ்நாடுசெய்த தவம்.

எல்லோரும் இந்த இலட்சிய யாத்திரை செய்து ஞான வெற்றி அடைய வேண்டும் என்பது நம் அவா. குரு லிங்க சங்கமப் பேறுகள் அடைந்து அந்த ஞானனுபவத்தை அனுபவிக்க வேண்டும். யாத்திரை ஒருபடிப்பிலே; அதிலும் குருமூர்த்திகள் செய்த இந்த யாத்திரை உலகுக்கே ஒரு தெய்விக விளக்கம்.

இலட்சியவெற்றி! எல்லோரும் காணச் செந்திலாண்டவன் திருவருள் முன்னிற்க.

> "வரமாவ தெல்லாம் வட கயிலை மன்னும்
> பரமா! உன் பாதாரவிந்தம்."
>
> —தந்தோர்.

உ

குருபாதம்

சென்னை மாநில அரசினர் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர்,

பல்கலைச் செல்வர்,

## திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள்

M. A., B. L., M. O. L.,

அளித்த

# அணிந்துரை

'இமையம் முதல் குமரி வரை உள்ள நிலப்பரப்பே உலகம்' எனச்சிறப்பாகக் கொண்டாடினர் பழந்தமிழர். கரிகாலன் இமையத்தில் புலியைப் பொறித்தான். சோழ கணவாய் என்றோர் இடம் இமையமலைப் பகுதியில் இருப்பது சோழன் வந்த வழியை இன்றும் காட்டி நிற்கின்றதோ என வியப்பாரும் உண்டு. சேரன் செங்குட்டுவன் கனகவிசயரை வென்று கண்ணகியின் திருமேனி அமைக்க இமயத்தினின்றும் கல் கொண்டு வந்தான். கங்கைகொண்ட சோழன் வடநாட்டுப் போர்ச் செலவு இன்று உலகறிந்த வரலாறாகி உள்ளது. கஜினி மாமூது சோமநாதர் கோயிலைச் சூறையாடிச் சிதைத்தது போல் பின் நேராது தடுக்கத்தான் இவன் இவ்வாறு சென்றானோ என்னவோ தெரியவில்லை. கோரிமாமூது பின்னே படை எடுத்து வென்ற கன்னோசி நாட்டை மூன்றாவது குலோத் துங்கன் காலம் வரை சோழரே அரசாண்டு வந்தனர் எனக் கல்வெட்டும் கதை சொல்கிறது. சுந்தர பாண்டியனும் வடநாடு வென்றதாகத் தன் பெருமை பேசுகிறான். இவ்வாறு தென்னாட்டரசர் இந்திய ஒற்றுமையைக் காக்க வருவதனை எண்ணித்தான் அலாவுதீன் தன் படைத்தலைவனும் மாலிக் காபூரைத் தென்னாட்டின்மேல் படையெடுத்துச் செல்ல அனுப் பினானோ ? இருள் மூடிக்கிடக்கும் தமிழர் வரலாற்றில் இப் பகுதிகள் பின்னே விளங்கித் தமிழன் பெருமையை உல கெங்கும் பேசும் நாள் விடியத்தான் போகிறது.

இவையெல்லாம் மறநெறி வளர்ந்த வரலாறு. இதனினும் சிறந்தது ஈர அன்பினர் வீரமே. கூடும் அன்பினிற் கும்பிடலே அன்றி வீடும் வேண்டா விறலினை யாரே புகழ முடியும்? உலகம் நம் தாய்; அருளின் வெள்ளம்; நாம் வளர வளரும் தொட்டில். இந்த அன்னை நம்மைக் காக்கும் தவக்கோலம் கொண்டு குமரியாக நிற்கின்றாள் தென்முனையில். இவளுக்குத் தாயாகி ஓங்குவது வட எல்லையில் உள்ள இமையமலை. நம் அன்னையாம் அருளும், அருள் நெறியும், தவநெறியும் தவழ்ந்து விளையாடுவது அந்த மலைச்சாரலில் தான். அவளை மணக்கத் தென்முகங் கொண்டு தவம் செய்கிற தனிமுதல்வன் ஓங்கும் திருக்கயிலையும் அங்கே காட்சியளிக்கிறது. ஆண்டவனும் தென்முகம் நோக்கி இன்பக் கூத்தாடிக் குமரிவரை மணி மன்றம், பொன்மன்றம், வெள்ளி மன்றம், செப்பு மன்றம், ஓவிய மன்றம் என்பவற்றில் காட்சி தந்தருளுகின்றான். இந்திய நாட்டு ஒற்றுமை இவ்வாறு எங்கள் அம்மையப்பரின் ஒற்றுமை யாகின்றது. வட இமையத்துப் பத்ரியில் தவம் செய்து காட்டிய திருமாலும் மதுரையிற் பிறந்தும் அயோத்தியில் பிறந்தும் யமுனைத்துறையில் விளையாடியும் கோதாவரிக்கரை யில் சீதையோடு நடந்தும் குமரிவரை வந்ததோடு தமிழ் வழங்கும் நாட்டையே நோக்கிக் கிடந்து திருவரங்கத்தில் பள்ளிகொண்டான் அன்றோ ? இந்திய ஒற்றுமை தெய்விக அருள் ஒற்றுமையே ஆம்.

இந்த அருட்கடலில் கப்பலோட்டி நம்மைக்கொண்டு செல்வோரே அடியார். இராமேசுவரம் முதல் பத்ரிவரை சென்று பாடி ஆண்டவன் அருள் அமுத நிலையங்களை இன்பம் தம் பாட்டில்காட்டி நிற்பவர் திருமங்கை மன்னர். இராமாநுசர் இவர் வழியே அன்புக் கொள்கையை இந்தியா முழுவதும் பரப்பினர்.

கயிலைக்கும் குமரிக்கும் பாலம் அமைத்தவர் பலர். காரைக்கால் அம்மையார் தலையால் நடந்து சென்றனர். திரு மூலர் கயிலை மலையிலிருந்து பொதிய மலைவரை புரண்ட அருள் வெள்ளமாகும். அவ்வெள்ளம் ஆவடுதுறையில் சுழித்தெழுந்து அமுதம் கொழித்து, மூவாயிரம் தெய்வப்பாவாம் கிண்ணங் களில் நாம் உண்டுய்யத் தேக்கிவைத்தது. திருநாவுக்கரை யரும் திருக்கயிலை நாடிச்சென்றார். அவரருளிய திருக்கயிலைத்

திருத்தாண்டகம் நமக்கோர் எய்ப்பினில் வைப்பு. ஞான சம்பந்தரும் சுந்தரரும் கண்ட கேதாரக் காட்சியை நாம் மறவாதபடிப் பாடி வைத்து உதவினர். கண்ணால் காணமற் போனாலும் வாயாலேனும் 'கேதாரமெனீரே' என்று வேண்டித் கொள்ளும் நுட்பத்தினை என்னென்பது! அநேகதங்காவதமும், இந்திர நீலப்பருப்பதமும், திருக்கேதாரம் போகும் வழியில் அமைந்த சிவ நிலையங்கள்; இவை ஞானசம்பந்தர் பாக்களில் நிலைத்திருப்பன. சம்பந்தர் ஞானப்பாலுண்ட வரலாற்றில் ஈடு பட்டுத் தமிழ்க்குழவியாய் வளர்ந்த சங்கரர், இந்தியா முழுவதும் சென்று **"எவ்லாம் சூனியம் அன்று எல்லாம் கடவுள்"** என்ற கயிலைக் காட்சிக் கொள்கையை நிலை நாட்டினர். "மாதர்ப் பிறைக் கண்ணியானை" என்ற திருப்பதிகம் எங்கும் அம்மையப்பனும் கடவுளைக் காண்பதுவே காண்பரிய கயிலைக் காட்சி என வற்புறுத்தவில்லையா? கயிலையில் இருந்தும் சத்தியஞான தரிசினிகள் கண்ட உண்மையைப் பரஞ்சோதி யார் மெய்கண்டார்க்கருளிச் சந்தான பரம்பரையை இன்று வரை வளர்த்துவரச் செய்தார் அன்றே. தமிழ்நாடு நிலைகுலைந்த காலத்துத் தமிழினையும், சைவத்தினையும், கோயிலையும் காக்க வந்தவை திருமடங்களே ஆம். சிதைந்துவரத் தொடங்கிய கயிலைக்குமரிப் பாலத்தினை இத்திருமடங்கள் புதுப்பிக்க முயன்றன. தருமபுரத்து அருட்பெருந் திரு மாசிலாமணி தேசிகரின் அருள்பெற்ற குமரகுருபரர் தமிழும் சைவமும் தழைத்துப் பரவ வடநாடு சென்று காசிமடம் கட்டிய வரலாற் றின் நுட்பம் எதிர்காலத்தில்தான் இனிது விளங்கும். துளசி தாசர் அதற்கு முன்னரே இராமேசுவரம் வரை வந்து கம்பன் கதையை அறிந்து சீதையும் இராமனும் வில் முறிப்பதற்கு முன்னரே காதலால் ஒன்றுகியதனைப் பாடியுள்ளார். அன்பர் கள் வடக்கிலிருந்து தெற்கும், தெற்கிலிருந்து வடக்கும் போய் வருவது பழங்கதையே. ஆனாலும் வடக்கே தமிழ்க்கென சைவத்திற்கெனத் திருமடம் நிறுவிய பெருமை குருஞான சம்பந்த குருமூர்த்தியின் சந்தானத்தையே சாரும்.

இன்று இந்தியா உரிமை பெற்றுளிர்கிறது. பழைய பாலம் உயிர்பெற வேண்டும். காசிமடத்துக் குமரகுருபரர் பரம்பரையில் அருள் வெள்ளத்தினைக் காக்க ஸ்ரீலஸ்ரீ அருள்நந்தி அடிகள் தோன்றியுள்ளார்கள். பட்டினி நீங்கினாலன்றி மனிதன் மனிதனுகான் என உணர்ந்து அன்னதானத்திற்கெனப் பல

கட்டளைகள், அறிவொளி வளர்த்தாலன்றிச் சிவ ஒளி வளராதெனப் பல பள்ளிகள், தமிழே சிவம் என உணர்த்தும் தமிழ்க் கல்லூரி, தமிழ்ப் பரிசுத் திட்டம், சிவம் வளரும் நிலையங்கள், பரிசுகள், சைவத் தமிழ்ப் பெரியோர் நினைவுகள் - இவ்வாறு அடிகளார் அருள் உள்ளத்தின் வழியே பாய்ந்து 33 லட்சம் வெண்பொற்காசுகள் என்றும் அழியா நிலையை எய்தி உள்ளன. வடநாடும் தமிழினையும் சைவத்தினையும் உணர்ந்தாலன்றிப் பழைய பாலம் நிலையாதெனத் தெளிந்து இந்தியில் தமிழ் நூல்களைச் சிவ நூல்களை மொழி பெயர்த்தருளுகிறார்கள். இந்திய அரசு தமிழரசு - சைவ அரசு; மறப்படையின் வெற்றி அன்று இது; அருள் வெள்ளத்தின் அன்புப் புரட்சியே இது. அருள்நெறி நின்ற காந்தியடிகள் செய்த புரட்சி அன்றோ? காந்தியடிகளுக்குத் தென் ஆப்பிரிக்காவில் தமிழர் நினைப்பூட்டியது இது. இந்தியாவில் தமிழர் முனையும், தமிழர் தொண்டும் துணை செய்ய ஓங்கிய புரட்சியாதலின் இதனைத் தமிழ்ப் புரட்சி எனலாம். இந்தப் பழைய அன்பரசு தமிழ் நாட்டில் போல வட நாட்டிலும் நிலைத்திருக்க வேண்டும் என்றன்றோ குமரகுருபரர் காசிமடம் கண்டார். அதன் உண்மையைத் தெளிந்து அங்கும் தமிழரசு நடாத்த ஸ்ரீலஸ்ரீ அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் அடிக்கடிச் செல்கிறார்கள். கேதாரக் கட்டமும் தேவாரமும் திருக்கேதாரத்தை நினைவூட்டக் கேதாரத்திற்குப் பலமுறை சென்று பழைய பாலத்தினைப் புதுக்கியருளுகிறார்கள். பிறரும் வடநாடு சென்று இந்தத் தமிழ் அருள் நெறியைப் பரப்பும் வாயில்களாய் அமையக் கட்டளைகளை நிறுவுகிறார்கள். வடநாட்டுப் பல்கலைக் கழகங்களில் சைவ சித்தாந்தத் திருப்பள்ளியெழுச்சி பாடுவதுபோலச் சொற்பொழிவுகள் செய்ய வழி செய்தளிக்கிறார்கள். குருமடமாம் தருமபுரமும் இதில் ஈடுபட ஆண்டவனை வேண்டுகிறார்கள். தேவாரத்தை வேண்டுகிறார்கள். தேவாரத்தை தூது விடுகிறார்கள். தருமை ஆதீன ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களும் திருக்கேதாரம் செல்கிறது. தங்கள் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் எதிர்காலத் தொண்டினை உணர்கிறது. பலரும் சென்று அக்காட்சியைக் காணவேண்டும், கண்டதனைப் பலருக்கும் கூற வேண்டும், அருமை என்ற எண்ணம் ஒழியவேண்டும். இவ்வாறெல்லாம் திருவுளம் கருதுகிறது; ஈதொரு தீர்க்க தரிசனம். புகைப் படங்களில் தருமை

ஆதீன ஞானத் தலைவரும், ஸ்ரீலஸ்ரீ காசி மடத்துத் தலைவரும் இமையமலை மக்கள்போலவே காட்சி யளிப்பதும், அவ் வுடையும், அவ்வுணவும் சுவைப்பதும் இந்திய ஒற்றுமையைத் தேவாரச் சைவத் தமிழ் வழியே நிலைநாட்டுவதாகும். என்ன பொருளாழம் உடைய காட்சி இது.

இதன் பயனாகத் திருக்கேதார யாத்திரையைப் பற்றிய இந்த நூல் வெளிவருகிறது. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களும் கேதாரம் எளியோம் மனம் புக, இன்பம் கொழிக்கக் கேதார யாத்திரையின் பெருமையை எடுத்துரைக்கிறது. இந்த நூலும் வெறெங்கும் என் மனம் செல்லாதபடி அக்கருத்தில் ஈர்த் தென்னை இருத்துகிறது. கவர்ச்சியான நடை - சிறு சிறு சொற் ருெடர்கள் - புராணக் கதைகள் - மக்கள் கருத்து - அடிகளின் தொண்டு - ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களின் விளக்கம் இவற் றிடை தோன்றும் இயற்கைக் காட்சி - சிவப்பொலிவு - அருட் பாடல் சிறு கல்லிலும் சித்திரம்-கல்லும்பாடும் கவிதை-ஆற்றின் அருளுபதேசம் - மலைவாழ் மக்களின் கள்ளமிலாப் புன்சிரிப்பு அவர்கள் ஆண்டவன் புரவலவராய் ஆடும் கூத்து - கேதாரத் துக்குச் செல்லும் திருகூட்டத்திடையே "ஒன்றே குலமும், ஒருவனே தேவனும்" எனத் தோன்றும் பொதுமை - இப்படிச் செல்லுகிறது இந்த நூல். இதனை எழுதி உதவிய திரு. அ. கல்யாணசுந்திர தேசிகரவர்களுக்கு என்ன கைம்மாறு செய்வது! புகைப் படங்களும் அச்சுப்பொறியும் விஞ்ஞானம் மெய்ஞ்ஞானத்திற்கு எப்படி உதவக்கூடும் என்பதனைத் தெள்ளத் தெளிய விளக்குகின்றன.

யாத்திரையைப்பற்றிய இலக்கியத்திற்கே இந்த நூல் ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. ஆல்ப்ஸ் மலையில் போவோர் போல இமையமலையில் போவோர் பலர். அப்படிப் போவோரும் பிறநாட்டாரே. இமையமலையில் உச்சியைக் கண்டவன் இந்தியன் என்று கூறிக்கொள்ளும் பெருமை நமக்கே இருந்தா லும் மலையேறும் கலை இங்கு மேனாட்டில் போல வளரவில்லை. தமிழன் அக்கலையைப்பற்றி எண்ணத்தானும் இல்லை என்றே கூறவேண்டும். இந்த நூல் அந்தக் குறையை ஒருவேளைப் போக்கினாலும் போக்கும்.

பொற்காலம் என்ற இந்த நூல் இந்த நாளைக் கூறுகின்றது. ஆம். பொற்காலம் பிறந்துள்ளது. குமரியோடு கயிலை இணைந்திருக்கும் காட்சியைத் தமிழர் காணும் பொற்காலம் இது. தமிழ்த் தருமை தமிழை வடநாடும் உணரச்செய்ய வரும் பொற்காலம் இது.

செந்தமிழ்க் கல்லூரி கண்டு செந்தமிழ்க்கோர் அரியாசனம் அமைத்த தருமை-ஆகமக்கல்லூரி கண்டு சிவ வழிபாட்டினை நிலைநாட்டிய தருமை - கீழைக்கலைக் கல்லூரியில் வடமொழிக்கும், வேதத்திற்கும் சிறப்பிடம் தந்து இந்தியப் பண்பாட்டு ஒற்றுமையை வளர்த்திடும் தருமை - தேவாரக் கல்லூரியும், தேவார இசைத்தட்டும்தந்து தேவாரத்தையும் தமிழிசையையும் வளர்த்திடும் தருமை - பிரசாரம் என்ற சொல்லையே தூய்மைப் படுத்திச் சைவத்தமிழ்ப் பண்பாடாக்கிய தருமை - தமிழ் நூல்களையும், சைவ நூல்களையும் விஞ்ஞான மெய்ஞ்ஞான நூல்களையும் வெளியிட்டுதவிய தருமை - தமிழ்ப் புலவர்களைப் பாராட்டி வளர்த்திடும் தருமை-ஏழை மக்களுக்கெனக் குழைந்துருகிய தருமை, இன்று வடநாடும் தென்னாடும் ஒன்றுபடச் சைவத் தமிழ் மணம் கொழித்து உலகெலாம் வீச நிற்கும் தருமையாகப் பொலிந்தெழுவதே பொற்காலம்.

இதனை என்றென்றும் வாழ்வித்தருளுவார் கேதாரநாதர். வாழ்க கேதாரம்! வாழ்க அருள்நந்தி! வாழ்க குமரகுருபரர்! வாழ்க தருமை! வாழ்க அருட்பெருந்திரு சுப்பிரமணிய தேசிகர்! வாழ்க குருஞானசம்பந்தர்!



திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம்

**காசிவாசி ஸ்ரீலஸ்ரீ அருணந்தித் தம்பிரான் சுவாமிகள்**

# பதிப்புரை

" அண்ணல் ஆலவாய் நண்ணினன் தனை
எண்ணியே தொழத் திண்ணம் இன்பமே."

திருக்கேதாரம் என்ற உடனேயே ஐம்புலன்களும் அடங்குகின்றன. இச்செயலை, சென்றுவந்தவர்கள் நன்கு அறிவார்கள். செல்லாமலே - திருக்காளத்தியிலிருந்தே தெரிந்தார் திருஞானசம்பந்தர். ஐம்புலச்சேட்டை அடங்கியவழியே பெரியோர் வழிபாடும், பெருமான் வழிபாடும் நிகழும். இதனைத் "தொண்ரஞ்சுகளிறும் அடக்கி" என்ற தேவாரத்தால் சீகாழிப் பிள்ளையார் செப்புகின்றார். இவ்வின்ப அனுபவத்தை நான்கு ஆண்டுகளாகக் கண்டு களித்தவர்கள், திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள். இவர்கள் தாம்பெற்ற பேரின்ப அனுபவத்தை எண்ணுந்தொறும், எண்ணுந்தொறும் தமது குருமூர்த்திகளையும் இடைவிடாது சிந்திப்பார்கள். சிந்தனை முற்றியது; செயலாற்றத்தொடங்கியது. நேரில் தரிசிக்கும்போதெல்லாம் திருக்கேதாரச் சிறப்பினை ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களிடம் தெரிவித்தார்கள். திருக்கேதாரத் தேவாரத்தைக் காதலாகிக் கசிந்த உணர்வோடு சிந்தித்த ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கட்கு இது பெரும் வாய்ப்பாயிற்று.

குரு மகாசந்நிதானம் 11-4-55ல் கேதார யாத்திரைக்குப் புறப்பட்டார்கள்; 'நான் பெறும் இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற இலக்கணத்திற்கு இலக்கியமாக இயங்குபவர்களன்றோ நம் குருமணி! அடியேன்போன்ற எளியவர் பலரும் யாத்திரையில் இடம் பெற்றோம். அதனால் உலகில் யாரும் பெறாத பேறுபெற்றோம்; பெற்றது யார் பெறுவார்? என இறுமாந்தோம். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களின் கருணை மேலும் பெருகியது. உடன் வந்த ஆதீனத் திருக்கோயில் அலுவலக மேற்பார்வையாளர் திரு. **அ. கல்யாணசுந்தர தேசிகர்** அவர்களைக் கொண்டு இவ் யாத்திரை அநுபவத்தைப் பல்லோரும் அறிந்து பயன்பெறும் வண்ணம் ஒரு

நூலாக எழுத அருளாணை பிறப்பித்தார்கள். அவர்களும் ஆணைவழி நின்று விரைவில் இந்நூலை இனிய தமிழிலே - எளிய நடையிலே எழுதிமுடித்தார்கள். இந்நூல் வெளிவருவதற்குப் பல்லாற்றானும் உடனிருந்து உதவிபுரிந்தவர் தருமை ஆதீனக் கீழைக் கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் வித்துவான், திரு. சொ. சிங்காரவேலனாரவர். இந்நூலிற்குச் சிறந்த முறையில் அணிந்துரை நல்கியவர் பல்கலைச்செல்வர், திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனாரவர். இம் மூவர்க்கும் திருவருளும், குருவருளும் என்றும் நிலவச் செந்தமிழ்ச் சொக்கன் திருவடி சிந்திக்கின்றேன்.

இப்பெரும் யாத்திரையை உடனிருந்து வெற்றிகரமாக நடத்திவைத்த ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகளவர்கட்கும், இந்நூலுக்கு முதன்மையுறு முன்னுரை வழங்கிய திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் இளவரசு வித்துவான், ஸ்ரீலஸ்ரீ மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகளவர்கட்கும் நன்றி மிக்க வணக்கம்.

பேரின்பம் நுகரவல்ல இவ்யாத்திரையில் கடையனேனையும் கருணையினால் கலந்தாண்டுகொண்டதோடு அமையாது இந்நூலை வெளியிட்டுத் தமிழுலகிற்கு ஆக்கும் புண்ணியப் பேற்றையும் எளியேற்கு அருளிய ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தின் திருவடிக்கு எழுமையும் தொடர்ந்த வணக்கமும் வாழ்த்தும் செலுத்துவதன்றி என்னகைம்மாறு செய்யவல்லேன். தருமை ஆதீனத்தை நிறுவிய ஆதி முதல்வர் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை விழா அணிமலராக இந்நூல் வெளிவருகிறது. அன்பர்கள் பெற்றுப் பயன் எய்துவார்களாக.

வாழ்க மகாசந்நிதானம் ! வளர்க தருமையாதீனம் !!

தருமபுரம்,
11—6—55.

ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தின் உத்தரவுப்படி,
**வித்துவான், சோமசுந்தரத் தம்பிரான்,**
சென்னை, தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையத் தலைவர்.

உ
சிவமயம்

# தோத்திரங்கள்

## திருக்கேதாரம்

ண் - செவ்வழி] [திருஞானசம்பந்தர்

திருச்சிற்றம்பலம்

தொண்டரஞ்சு களிறும் மடக்கிச் சுரும்பார்மலர்
இண்டை கட்டி வழிபாடு செய்யுமிடமென்பரால்
வண்டுபாட மயிலால மான்கன்று துள்ளவரிக்
கெண்டைபாயச் சுனைநீல மொட்டலருங் கேதாரமே. 1

பாதம் விண்ணோர் பலரும் பரவிப்பணிந்தேத்தவே
வேதம் நான்கும் பதினெட்டொடாறும் விரித்தார்க்கிடம்
தாதுவிண்ட மதுவுண்டு மிண்டிவரு வண்டினம்
கீதம்பாட மடமந்தி கேட்டுகளும் கேதாரமே. 2

முந்திவந்து புரோதாயம் மூழ்கி முனிகள்பலர்
எந்தை பெம்மானென நின்றிறைஞ்சும் இடம் என்பரால்
மந்திபாயச் சரேலச் சொரிந்தும் முரிந்துக்கபூக்
கெந்தநாறக் கிளருஞ்சடை யெந்தை கேதாரமே. 3

உள்ள மிக்கார் குதிரைம் முகத்தார் ஒருகாலர்கள்
எள்கலில்லா இமையோர்கள் சேரும் மிடமென்பரால்
பிள்ளை துள்ளிக் கிளைபயில்வ கேட்டுப்பிரியாது போய்க்
கிள்ளை யேனற்கதிர் கொணர்ந்து வாய்ப்பெய்யுங் கேதாரமே. 4

ஊழியூழி யுணர்வார்கள் வேதத்தின் ஒண்பொருள்களால்
வாழியெந்தையென வந்திறைஞ்சும் மிடமென்பரால்
மேழிதாங்கி யுழுவார்கள் போலவ் விரைதேரிய
கேழல்பூழ்தி கிளைக்க மணிசிந்தும் கேதாரமே. 5

நீறுபூசி நிலத்துண்டு நீர்மூழ்கி நீள்வரை தன்மேல்
தேறு சிந்தையுடையார்கள் சேரும் இடம் என்பரால்
ஏறிமாவின் கனியும் பலா வின்னிருஞ் சுளைகளும்
கீறிநாளும் முசுக்கிளையொடுண்டுகளும் கேதாரமே. 6

மடந்தைபாகத் தடக்கினான் மறையோர்க ளமரர் தொழத்
தொடர்ந்த நம்மேல் வினைதீர்க்க நின்றார்க் கிடமென்பரால்
உடைந்த காற்றுக் குயர்வேங்கை பூத்துதிரக் கல்லறைகண்மேல்
கிடந்த வேங்கை சினமா முகஞ்செய்யுங் கேதாரமே.

அரவமுந்நீர் அணியிலங்கைக்கோனை யருவரைதனால்
வெருவவூன்றி விரலாலடர்த்தார்க் கிடமென்பரால்
குரவங்கோங்கம் குளிர்பிண்டிஞாழல் சுரபுன்னைமேல்
கிரமமாக வரிவண்டு பண்செய்யுங் கேதாரமே. 8

ஆழ்ந்துகாணார் உயர்ந்தெய்த கில்லார் அலமந்தவர்
தாழ்ந்துதந்தம் முடிசாய நின்றார்க் கிடமென்பரால்
வீழ்ந்துசெற்று நிழற்கிரங்கும் வேழத்தின் வெண்மருப்பினைக்
கிழ்ந்துசிங்கங் குருகுண்ண முத்துதிருங் கேதாரமே. 9

கடுக்கள்தின்று கழிமீன் கவர்வார்கண் மாசுடம்பினர்
இடுக்கண் உய்ப்பார் அவரெய்த வொண்ணா விடமென்பரால்
அடுக்கநின்றவ் வறவுரை கேட்டாங் கவர்வினைகளைக்
கெடுக்கநின்ற பெருமானுறைகின்ற கேதாரமே. 10

வாய்ந்தசெந்நெல் விளைகழனி மல்கும் வயற்காழியான்
ஏய்ந்தநீர்க் கோட்டிமையோ ருறைகின்ற கேதாரத்தை
ஆய்ந்துசொன்ன அருந்தமிழ்கள் பத்தும் இசைவல்லவர்
வேந்தராகி உலகுஆண்டு வீடுகதி பெறுவரே. 11

திருச்சிற்றம்பலம்.

—இரண்டாம் திருமுறை.

## திரு அனேகதங்காவதம்

பண் - இந்தளம்] [திருஞானசம்பந்தர்

திருச்சிற்றம்பலம்

நீடன் மேவுநிமிர் புன்சடை மேலொர் நிலாமுளை
சூடன் மேவுமறை யின்முறை யாலொர் சுலாவழல்
ஆடன் மேவுமவர் மேயவ னேகதங் காவதம்
பாடன் மேவுமனத் தார்வினை பற்றறுப் பார்களே. 1

சூல முண்டுமழு வுண்டவர் தொல்படை சூழ்கடல்
ஆல முண்டபெரு மான்ற னனேகதங் காவதம்
நீல முண்டதடங் கண்ணுமை பாக நிலாயதோர்
கோல முண்டள வில்லை குலாவிய கொள்கையே. 2

செம்பி னாருமதின் மூன்றெரி யச்சின வாயதோர்
அம்பி னாலெய்தருள் வில்லி யனேகதங் காவதம்
கொம்பி னேரிடை யாளொடுங் கூடிக்கொல் லேறுடை
நம்ப னாமநவி லாதன நாவென லாகுமே. 3

தந்தத் திந்தத்தட மென்றரு வித்திரள் பாய்ந்துபோய்ச்
சிந்த வெந்தகதி ரோனொடு மாசறு திங்களார்
அந்த மில்லவளை வில்லவ னனேகதங் காவதம்
எந்தை வெந்தபொடி நீறணி வார்க்கிட மாவதே. 4

பிறையு மாசில்கதி ரோனறி யாமைப் பெயர்ந்துபோய்
உறையுங் கோயில் பசும்பொன் னணியா ரசும்பார்புனல்
அறையு மோசை பறைபோலு மனேகதங் காவதம்
இறையெம் மீச னெம்மா னிடமாக வுகந்ததே. 5

தேனை யேறுநறு மாமலர் கொண்டடி சேர்த்துவீர்
ஆனை யேறுமணி சார லனேகதங் காவதம்
வானை யேறுநெறி சென்றுண ருந்தனை வல்லிரேல்
ஆனை யேறுமுடி யானருள் செய்வதும் வானையே. 6

வெருவி வேழமிரி யக்கதிர் முத்தொடு வெண்பளிங்
குருவி வீழவயி ரங்கொழி யாவகி லுந்திவெள்
அருவி பாயுமணி சாரல னேகதங் காவதம்
மருவி வாழும்பெரு மான்கழல் சேர்வது வாய்மையே. 7

ஈர மேதுமில னாகி யெழுந்த விராவணன்
வீர மேதுமில னாக விளைத்த விலங்கலான்
ஆரம் பாம்ப தணிவான்ற னனேகதங் காவதம்
வாரமாகிநினை வார்வினை யாயின மாயுமே. 8

கண்ணான் வண்ணமல ரானொடுங் கூடியோர்க் கையமாய்
எண்ணும் வண்ணமறி யாமையெ ழுந்ததோ ராரழல்
அண்ண லண்ணுமணி சாரல னேகதங் காவதம்
நண்ணும் வண்ணமுடை யார்வினை யாயின நாசமே. 9

மாப தம்மறி யாதவர் சாவகர் சாக்கியர்
ஏப தம்பட நின்றிறு மாந்துழல் வார்கடாம்
ஆப தம்மறி விருளி ராகில வேகதங்
காப தம்மமர்ந் தான்கழல் சேர்தல் கருமமே. 10

தொல்லை யூழிப்பெயர் தோன்றிய தோணிபு ரத்திறை
நல்ல கேள்வித்தமிழ் ஞானசம் பந்தநல் லார்கண்முன்
அல்ல றீரவுரை செய்தவை வேகதங் காயதம்
சொல்ல நல்லவடை யும்மடை யாசுடு துன்பமே. 11

திருச்சிற்றம்பலம்.

இரண்டாம் திருமுறை.

# திரு இந்திரநீலப்பர்ப்பதம்

பண் - இந்தளம்] [திருஞானசம்பந்தர்

திருச்சிற்றம்பலம்

குலவு பாரிடம் போற்ற வீற்றிருந்
திலகு மான்மழு வேந்து மங்கையன்
நிலவு மிந்திர நீலப் பர்ப்பதத்
துலவி னானடி யுள்க நல்குமே. 1

குறைவி லார்மதி சூடி யாடல்வண்
டறையு மாமலர்க் கொன்றை சென்னிசேர்
இறைவ னிந்திர நீலப் பர்ப்பதத்
துறைவி னானையே யோதி யுய்ம்மினே. 2

என்பொ னென்மணி யென்ன வேத்துவார்
நம்ப னான்மறை பாடு நாவினான்
இன்ப னிந்திர நீலப் பர்ப்பதத்
தன்பன் பாதமே யடைந்து வாழ்மினே. 3

நாச மாம்வினை நன்மை தான்வரும்
தேச மார்புக ழாய செம்மையெம்
ஈச னிந்திர நீலப் பர்ப்பதம்
கூசி வாழ்த்துதுங் குணம தாகவே. 4

மருவு மான்மட மாதொரு பாகமாய்ப்
பரவு வார்வினை தீர்த்த பண்பினன்
இரவ னிந்திர நீலப் பர்ப்பதத்
தருவி சூடிடு மடிகள் வண்ணமே. 5

வெண்ணி லாமதி சூடும் வேணியன்
எண்ணி லார்மதி லெய்த வில்லினன்
அண்ண லிந்திர நீலப் பர்ப்பதத்
துண்ணி லாவுறு மொருவ னல்லனே. 6

கொடிய வேற்றினர் கூற்று தைத்தவர்
பொடிகொண் மேனியிற் பூண்ட பாம்பினர்
அடிக ளிந்திர நீலப் பர்ப்பதம்
உடைய வாண ருகந்த கொள்கையே. 7

எடுத்த வல்லரக் கன்க ரம்புயம்
அடர்த்த தோர்விர லான வனையாட்
படுத்த னிந்திர நீலப் பர்ப்பதம்
முடித்த லம்முறை முயலு மின்பமே. 8

பூவி னானொடு மாலும் போற்றுறும்
தேவ னிந்திர நீலப் பர்ப்பதம்
பாவி யாதெழு வாரைத் தம்வினை
நோவி யாவொருங் கொல்லுங் கூற்றமே. 9

கட்டர் குண்டமண் டேரர் சீரிலர்
விட்ட ரிந்திர நீலப் பர்ப்பதம்
எட்ட னோரினை யாத தென்கொலோ
சிட்ட தாயுறை யாதி சீர்களே. 10

கந்த மார்பொழில் சூழ்ந்த காழியான்
இந்தி ரன்றொழு நீலப் பர்ப்பதத்
தந்த மில்லியை யேத்து ஞானசம்
பந்தன் பாடல்கொண் டோதி வாழ்மினே. 11

திருச்சிற்றம்பலம்.

—இரண்டாம் திருமுறை.

# திருக்கேதாரம்

பண் - நட்டபாடை] [சுந்தரர்

திருச்சிற்றம்பலம்

வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய்செய்த பறிதான்
தாழா(து) அறஞ் செய்ம்மின்தடங் கண்ணான்மலரோனும்
கீழ்மேலுற நின்றான்திருக் கேதாரமெனீரே. 1

பறியேசுமந் துழல்வீர்பறி நரிகீறுவ தறியீர்
குறிகூவிய கூற்றங்கொளு நாளால்அறம் உளவே
அறிவானிலும் அறிவான்ந(ல்)ல நறுநீரொடு சோறு
கிறிபேசிநின் றிடுவார்தொழு கேதார மெனீரே. 2

கொம்பைப்பிடித் தொருக்காலர்க ளிருக்கான்மலர் தூவி
நம்பன்நமை யாள்வானென்று நடுநாளையும் பகலும்
கம்பக்களிற் றினமாய் நின்று சுனைநீர்களைத் தூவிச்
செம்பொற்பொடி சிந்துந்திருக் கேதாரமெ னீரே. 3

உழக்கேஉண்டு படைத்(து) ஈட்டிவைத் திழப்பார்களுஞ் சிலர்கள்
வழக்கேயெனிற் பிழைக்கே மென்பர் மதிமாந்திய மாந்தர்
சழக்கேபறி நிறைப்பாரொடு தவமாவது செயன்மின்
கிழக்கேசல மிடுவார்தொழு கேதாரமெ னீரே. 4

வாளோடிய தடங்கண்ணியர் வலையில்லழுந் தாதே
நாளோடிய நமனார்தமர் நணுகாமுனம் நணுகி
ஆளாயுய்ம்மின் அடிகட்கிடம் அதுவேயெனில் இதுவே
கீளோடர வசைத்தானிடங் கேதாரமெ னீரே. 5

தளிசாலைகள் தலமாவது தம்மைப்பெறி லன்றே
குளியீருளங் குருக்கேத்திரங் கோதாவிரி குமரி
தெளியீருளஞ் சீபர்ப்பதந் தெற்குடைக் காகக்
கிளிவாழையொண் கனிகீறியுண் கேதாரமெ னீரே. 6

பண்ணின்தமி ழிசைபாடலின் பழவேய்முழ வதிரக்
கண்ணின்ஒளி கனகச்சுனை வயிரம்மவை சொரிய
மண்ணின்றன மதவேழங்கள் மணிவாரிக்கொண் டெறியக்
கிண்ணென்றிசை முரலுந்திருக் கேதாரமெ னீரே. 7

முளைக்கைப்பிடி முகமன்சொலி முதுவேய்களை யிறுத்துத்
துளைக்கைகளிற் றினமாய்நின்று சுனைநீர்களைத் தூவி
வளைக்கைப்பொழி மழைகூர்தர மயில்மான்பிணை நிலத்தைக்
கிளைக்கமணி சிந்துந்திருக் கேதாரமெ னீரே. 8

பொறியேசுமந் துழல்வீர்பொறி அவமாவதும் அறியீர்
மறிமாந்திய வழியேசென்று குழிவீழ்வதும் வினையால்
கறிசூழ்கட லிலங்கைக்கிறை மலங்கவரை யடர்த்துக்
கெறிபேறுசெய் திருந்தானிடங் கேதாரமெ னீரே. 9

நாவின்மிசை அரையன்னொடு தமிழ்ஞானசம் பந்தன்
யாவர்சிவன் அடியார்களுக் கடியானடித் தொண்டன்
தேவன்திருக் கேதாரத்தை ஊரன்னுரை செய்த
பாடின்தமிழ் வல்லார்பர லோகத்திருப் பாரே. 10

திருச்சிற்றம்பலம்

—ஏழாம் திருமுறை.

## திருமூல நாயனார் புராணம்.

மன்னுதிருக் கேதாரம் வழிபட்டு மாமுனிவர்
பன்னுபுகழ்ப் பசுபதிநே பாளத்தைப் பணிந்தேத்தித்
துன்னுசடைச் சங்கரனார் ஏற்றதூ நீர்க்கங்கை
அன்னமலி அகன்றுறைநீர் அருங்கரையின் மருங்கணைந்தார்.

கங்கைநீர்த் துறையாடிக் கருத்துறைநீள் கடலேற்றும்
அங்கணர்தாம் மகிழ்ந்தருளும் அவிமுத்தம் பணிந்தேத்தி
மங்குல்வளர் வரைவிந்த மன்னுபருப் பதமிறைஞ்சித்
திங்களணி சடையார்திருக் காளத்தி மலைசேர்ந்தார்.

## ஏயர்கோன்கலிக்காம நாயனார் புராணம்

வடமா திரத்துப் பருப்பதமும் திருக்கேதார மலையும் முதல்
இடமா அரனார் தாமுவந்த எல்லாம் இங்கே இருந்திறைஞ்சி
நடமா டியசே வடியாரை நண்ணி னார்போல் உள்நிறைந்து
திடமாங் கருத்தில் திருப்பதிகம் பாடிக்காதல் சிறந்திருந்தார்.

## திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் புராணம்

அங்கண்வட திசைமேலும் குடக்கின் மேலும்
அருந்தமிழின் வழக்கங்கு நிகழா தாகத்
திங்கள்புனை முடியார்தந் தானந் தோறுஞ்
சென்றுதமிழ் இசைபாடுஞ் செய்கை போல
மங்கையுடன் வானவர்கள் போற்றி சைப்ப
விற்றிருந்தார் வடகயிலை வணங்கிப் பாடிச்
செங்கமல மலர்வாவித் திருக்கேதாரம்
தொழுதுதிருப் பதிகஇசை திருந்தப் பாடி.

கூற்றுதைத்தார் மகிழ்ந்தகோ கரணம் பாடிக்
குலவுதிருப் பருப்பதத்தின் கொள்கை பாடி
ஏற்றின்மிசை வருவார்இந் திரன்றன் நீலப்
பருப்பதமும் பாடிமற் றிறையவர் தானம்
போற்றியசொன் மலர்மாலை பிறவும் பாடிப்
புகலியர்தம் பெருந்தகையார் புனித மாகும்
நீற்றின்அணி கோலத்துத் தொண்டர் சூழ
நெடிதுமகிழ்ந் தப்பதியின் நிலவு கின்றார்.

### பிரயாகை

சறுவசக மும்பெற்ற சங்கரி வலம்புரிச்
சங்கமாய் வந்ததீர்த்தம்
சகலமறை யாகமபு ராணசாத் திரமிருந்
தானுவந் தோதுதீர்த்தம்
குறுமுனிவன் முதலான முனிவரர்கள் கோடிபேர்
கொண்டாடி யாடுதீர்த்தம்
குளிர்மகர மாதத்தில் மனிதரும் தேவரும்
கூடியே மூழ்குதீர்த்தம்
நிறையுலகர் வலிய வேகாயங் கொடுத்தவர்
நினைந்தபொருள் வாங்குதீர்த்தம்
நினைவரிய பாதகர்கள் மூழ்கிடி லவர்களையும்
நின்மலர்க ளாக்கு தீர்த்தம்
திரிவேணி நிறையும்பிர யாகைநகர் முருகனே
சிறுதே ருருட்டியருளே
சிவனுடன் வாழ்பவர்கள் கேட்டவர மருள்முருக
சிறுதே ருருட்டியருளே.

## கயை

அறந்தவிரோர் பெரியகெய வசுரனது முடியின்மேல்
அம்பிகா நாதனுமையாள்
ஐங்கரன் அண்ணல்நீ யரியாதி பதினெண்மர்
அருளுடன் பாதம்வைத்து
நிறைந்துநல மீதென்ன நின்றதன் னெல்லையைமெய்
நீங்கினோர் கோத்திரத்தில்
நின்றவர்கள் மூவேழு தலைமுறையுள் ளோர்பிறர்
நினைத்துவந் தடிமிதித்தால்
இறந்தோர்கள் நாலேழு கோடியென்னும் நரகத்
திருந்தாலும் மண்ணவரில் விண்ணவரில்
இறப்போடு பிறப்புற் றிருந்தாலும் முத்திமலை
யேறவே யேணிவைக்கும்
சிறந்தபற் குனிநதி நிறைந்தகெயை வாழ்முருக
சிறுதே ருருட்டியருளே
செத்தவர்கள் பிறவாத முத்திதரு குமரனே
சிறுதே ருருட்டியருளே.

## கேதாரம்

அறம்பொருள்க ளின்பம்வீ டருணந்தி யாருநர
ராதியோர் மேவுகயிலை
யங்கிரிக் குத்தெற்கி லக்கமே யிருபதுடன்
ஐயாயி ரம்படியெனும்
நிறைந்தமலை யுண்டவையுள் முதன்மலையி தாதலால்
நின்னோக்க வானில்வைத்து
நீண்மாந்திர சிங்கா தனத்தம்மை யுடன்மேவு
நிருமலன் வெள்ளிவெற்பில்
பிறந்திறந் துழலாம லானந்த அமுதுண்டு
பெருவாழ்வு பெற்றிருக்கப்
பேராசை யுற்றோர்ச ரீரத்து டன்வரப்
பெரியவருள் முத்திவாய்தல்
திறந்திருக் குஞ்சிவன் கேதாரம் வாழ்முருக
சிறுதே ருருட்டியருளே
தேகம்விட் டுன்சந்நி திக்கடிய னோன்வரச்
சிறுதே ருருட்டியருளே.

---

| பக்கம் | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 1 | அளாவிற்கும் | அளாவிநிற்கும் |
| 15 | அபிரகாம் | அபிரகம் |
| 17 | ஹரிக்குபேடி | ஹரிக்குபௌடி |
| 26 | திருவிசைப்பா | திருப்பல்லாண்டு |
| 29 | துங்கநாத் 69 மைல் | 19 மைல் |
| 50 | கல்கத்தாவில் பிளாட்பாரங்கள் | கல்கத்தாவில் 11 பிளாட்பாரங்கள் |
| 76 | வியாசர்சட்டி | பியாஸிசட்டி (பாராபூராவிலும் உள்ளவை) |
| 90 | உயிர்வெளி | உயிர்வளி |
| 102 | பிர்ம்மகபாலம் | பிர்ம்மகமலம் (இது ஒருவகைத் தாமரை) |

குருபாதம்

# உள்ளுறை

**யாத்திரா கோஷ்டி :**

ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள்
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள்
ஸ்ரீமத் வித்துவான் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள்

**தருமையாதீனம் :**

திரு. டி. துரைசாமிப் பிள்ளை (ஆதீனத் திருமடத்து அலுவலர்)
திரு. எம். மீனாட்சிசுந்தரம் பிள்ளை (புகைப்படம் பிடிப்போர்)
திரு. கல்யாணசுந்தரம் பிள்ளை (பணிவிடை)
திருக்கருகாவூர்த் தொண்டர் திரு. சிவஞானம்

**ஸ்ரீ காசிமடம் :**

திரு. வி. கல்யாணசுந்தரம் பிள்ளை (ஸ்ரீ குமரசாமி மடம் அலுவலர்)
திரு. கேதார் (ஸ்ரீ காசிமடம் அலுவலர்)
திரு. கேதாரம் (ஸ்ரீ காசிமடம் ஓதுவார்)
திரு. சிவகாசி (பணிவிடை)
திரு. இராமநாத் (சமையல்)
அடியேனும்.

**அட்டைப் படம் :**

கேதாரத் திருக்கோயிலில் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமும்,
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளும்.

உ
குருபாதம்

# பட அட்டவணை

கேதாரயாத்திரை : (அடிவாரத்தில்)



ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமும், ஸ்ரீலஸ்ரீ காசிவாசிசுவாமிகளும்.



வழிபாடுமுடிந்து சிவாலயத்துள்
ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமும், ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளும்

உ

குருபாதம்

# திருக்கேதார யாத்திரை

## உத்தரகண்டம்

### மனிதமனம் :

உறுமிக்கொண்டு ஓடிவரும் காட்டாறுகள், வேகமாகப் பாய்ந்து வரும் மலையருவிகள், மலை உச்சியிலிருந்து குதித்துப் பொங்கி விழும் நீர்வீழ்ச்சிகள், விண்ணை அளாவிற்கும் பனிமலைச் சிகரங்கள், மலையடுக்குகள், கடக்க முடியாதே என்று கருத்தில் கவலையை உண்டாக்கும் கணவாய்கள், கொடியவெப்பம், கடுங்குளிர், கோரக்காற்று, பெருமழை, பனி, இவை இயற்கை அன்னையின் கோரதாண்டவம் என்று மனித மனம் இம்மாபெரும் காட்சிகளைக் கண்டு மலைக்கிறது ! அஞ்சுகிறது ! ஆனால் இவற்றை வெற்றிகொண்டு வாகைசூடி விடுகிறார்கள் ஞானிகள் தம்முடைய செயல்திறத்தால். செயற்கரிய அச்செயல் செய்து அழியாப் பேறு அடைந்துவிடுகிறார்கள். அவ்வாறு எழுந்துநிற்கும் இயற்கையைக் கண்டு இதயம் கலங்குவதால் என்ன உண்டாகிறது ? அச்சமே விளைகிறது. ஆனால் அரும் பெரும் மாணிக்கங்கள், மனித வாழ்விலே கிடைத்தற்கரிய கருவூலங்கள் பெறமுடியாமற் போய்விடுகின்றன. முழுச் செயல் திறத்தோடு அயராது உழைத்து, அவற்றை வெற்றி கொண்டு அரும்பயனை அடையும் அவர்களைத்தான் உண்மையில் "பெரியர்" என்று சொல்லவேண்டும்; ஆம்; அப்படித்தான் கூறுவார் வள்ளுவரும்.

### அழைப்பு :

செயற்கரிய செயல் செய்தவர்கள் பெரியவர்கள். இயற்கையை இயற்கையாகக் காணாமல் - புறக் காட்சிகளில் சிற்றின்பக் காட்சிகளை மட்டும் காணாமல், பேரின்பத்தை - கடவுட் காட்சியைக் கண்டார்கள்; கண்டு அநுபவித்தார்கள். கருணையும் சுரந்தது. தாம் கண்டதை - தாம் அநுபவித்ததை மற்றவரும் காணவேண்டுமே, அநுபவிக்கவேண்டுமே என்பதுதான் அக்கருணை. "வாருங்கள் ! வந்து முந்துமினே !" என்கிறார்கள். "மூல பண்டாரம் வழங்குகின்றான் வந்து முந்துமினே'

என்று அழைக்கிறார்கள். அங்கே பரம்பொருளின் பேரருள் நிறைந்திருப்பதை, காட்சியினை, வற்றாத ஊற்றாக ஊறிவருவதைக் கண்டார்கள். அந்தக் காலத்தில் மட்டும் அல்ல, இப்பொழுதும் காண்கிறார்கள். நம்மை அழைக்கிறார்கள்.

ஒரு பெரியவர் (Goethe) 'முயற்சி இல்லாத – கலக்கம் இல்லாத உணர்வுடையவர்கள் இயற்கையை – கடவுளையும் பயங்கரமான ஒரு கோரக் காட்சியாக, மலைப்பூட்டும் பண்டமாகக் காண்கிறார்கள்; ஆனால் உறுதியும் ஊக்கமும் செயல்திறனும் உடையவர்களுக்குத் தன்னிடமுள்ள மறை பொருள்களான உண்மைகளையும், அதனால் உண்டாகின்ற இன்பநலங்களையும் காட்டுகின்றது அந்த இயற்கை' என்கிறார்.

இத்தகைய இன்ப நலங்களை அனுபவிக்கவும், அனுபவிக்க அழைக்கவும் அப்பெரியார்கள் உத்தரகண்டத்திலே இன்றைக்கும் வாழ்கின்றார்கள். உத்தரகண்டம் என்பது இமயப் பகுதியை. இந்தியப் பெருநாட்டின் வடக்கு எல்லையை. நமது நாட்டின் கலாசாரப் பண்பாட்டின் பழைய மலை வரம்பைத்தான் அப்படிச் சொல்லுகிறோம். உலகிலேயே உயர்ந்த சிகரங்களை உடைய அந்தப் பெருமலை நம்முடையது என்ற பெருமை நமக்கிருக்கிறது.

"மன்னும் இமயமலை எங்கள் மலையே
மாநிலமீது இதுபோல் பிறிதிலையே"

என்றார் பாரதியாரும். சங்க இலக்கியங்களும் இமயத்தையும், இமய மலையில் வாழ்கின்ற தாபதர்களின் தவமேன்மையையும்பற்றி அழகிய தமிழ்ப் பாக்களால் ஆங்காங்குப் பாடுகின்றன. இமயத்திலுள்ள ஒரு தெய்விகத் தன்மையையும் சங்ககாலத்துத் தமிழர்கள் கண்டார்கள். அங்குள்ள கல்லுக்கும் தெய்விகம் இருப்பதை உணர்ந்தார்கள். கல்லெடுத்து வந்தார்கள் தெய்வச் சிலை செய்ய. அதற்காகப் பெரும் பாடும் பட்டார்கள். மன்னர்களை எதிர்த்துப் போரிடவும் செய்தார்கள். இது வரலாறு.

"வெள்ளிப்பனி மலையின் மீதுலாவுவோம்"

என்று பாரதியாரும் நம்மை அழைக்கிறார். உலாவுதல் என்பது வெறும் வேடிக்கையான புறக் காட்சி அளவிலே நிறுத்துவதற்கல்ல. 'ஞானரத'த்தைச் செலுத்திய பெரியார் அவர்! இது இப்பொழுது. பண்டு ஆசாரியர்களும் இமயம் சார்ந்தார்கள், கயிலை சார்ந்தார்கள். அவர்களுக்கு அழைப்பும் வந்தது. அங்கே மூலப்பொருளைக் கண்டார்கள். 'சேர வாரும் செகத்தீரே' என்ற அழைப்பு இன்றும் அங்கே காத்திருக்கிறது. இது புனைந்துரையல்ல, கண்டு அனுபவித்த உண்மை.

## இமயம் :

இமயம் இறைவனின் இன்பப் படைப்பு. ஆம் ! காணுமிடமெல்லாம் கருத்தைப் பறிகொடுக்கும் நிலையில் இருக்கின்றன. மனித மனத்தை ஆட்கொள்ளும் மாயவித்தையை இமயம் செய்கின்றது. அடர்ந்தோங்கிய காடுகளைக் காணலாம். நீரூற்றுகளைக் காணலாம். ஓடிவரும் காட்டாறுகளைக் காணலாம். நெடிது வளர்ந்து நிற்கும் பனிச் சிகரங்களைப் பார்க்கலாம். பனி மேகங்கள் கவ்விக்கொள்ளும் காட்சியையும் காணலாம். அம்மட்டுமோ ? பூத்து நிற்கும் பூஞ்சோலைகள், பல வண்ணங்களில் அமைந்துகிடக்கும் கற்கள், அப்பப்பா ! சிந்தையைக் கொள்ளைகொள்ளும் இயற்கை அன்னையின் அற்புதக் காட்சிகள். இவை அந்தப் பனி மலைகள் கதிரவனின் உதய ஒளியிலே ஒரு வண்ணமும், மதியத்திலே ஒரு வண்ணமும், மாலை மறை கதிரிலே ஓர் வண்ணமும், இருளிலே ஒரு வண்ணமும், சந்திர ஒளியிலே ஒரு வண்ணமுமாக மனத்தை மயக்குகின்றன. இவற்றையும் கண்டார்கள் நம் பெரியோர்கள். அந்த அடர்ந்த காடுகளை - பரம்பொருளின் கற்றைச் செஞ்சடையாகக் கண்டார்கள். செங்கதிரோனின் கிரணங்களில் செந்நிறம் பெற்று விளங்கும் அந்தப் பனி மலையை - 'செம்மேனி அம்மானாக விளங்கும் பெருமான் திருமேனி' யாகக் கண்டார்கள். அதற்குமேலே பனி மலைச் சிகரங்களைப் பெருமானின் முடியாகக் கண்டார்கள். வானிலே கூனல் பிறை வரும் போது எம்பெருமான் சடாமகுடத்தில் வைத்த பிள்ளைமதி அவர்கள் நினைப்பில் முந்தியது. பனி மலைகளினின்று பாய்ந்தோடிவரும் ஆறுகளைக் கங்கையாகக் கண்டார்கள். பக்கத்திலே பசுமையான தோற்றத்தைச் சத்தியாகக் கண்டார்கள். சுருங்கச் சொன்னால், சத்தியும் சிவமுமாக, உமா மகேசுவரனாக நம் சாத்திரம் கூறுகிற பரசிவத்தை அகக்கண்ணிலே கண்டார்கள். பரவசமானார்கள். பரந்து விரிந்த பாருலகத்தை விட்டு அப்பரம் பொருளோடு ஒன்றுபட்டார்கள். இத்தகைய தெய்விகத் திருக்காட்சியைத்தான் இமயம் நல்குகிறது. உள்ளம் சிலிர்க்க, உரோமங்கள் புளகாங்கிதம் அடைய, சிந்தையில் சீவபோதம் நீங்கிச் சிவபோதம் துளும்பப் பரமானந்தம் எய்தும் நிலைமையை அங்கே உணர்கிறோம்; அதுதான் இமயம் தரும் பேரின்பம். வெள்ளிப் பனி மலையின் மீது உலாவியதால் வரும் விழுப்பயன்.

## ஞான வெற்றி :

வெற்றி என்பது ஒரு இலட்சியக் கோரிக்கை. அதற்குச் சாதனங்கள் தேவை. பெரும்பாலும் வீரர்கள்தான் வெற்றியை விரும்புவார்கள். வெற்றியின் பயன் ஒரு நாடு பிடிப்பது. அதற்குச் சாதனம் படை. படைதிரட்டுவான்; வெற்றி காண்பான்; நாடு அவனுடையதாகும். இது வரலாறு.

மாணிக்கவாசகர் படை திரட்டுகிறார். படை, சுத்த படையாக இருக்கவேண்டுமே; பார்ப்போம். [illegible] படைக் கருவிகளையும் கூட்டுகிறார். வாள், பறை, குடை, கவசம் ஆகியவைகளை அணியச்சொல்கிறார். படை அணிவகுப்பும் செய்கிறார். ஆணை முறையும் சொல்கிறார். வாள் ஞானவாள். பறை நாதப்பறை. குடை மதிவெண் குடை. கவசம் நீறு. அணிவகுப்பில் தூசிப்படை, தொண்டர்கள். பக்கப் படை பக்தர்கள். பேரணி [illegible]. [illegible]. கடைக் கூழை திண்டிறற்சித்தர்கள். [illegible] அண்டர் நாடு. எதை விலக்க? மாயப்படை வாராமே; அல்லற்படை வாராமே. வெற்றி ஞான வெற்றி.

## புறப்பாடு :

இப்பொழுதும் படை புறப்படுகிறது. தொண்டர் படை, பக்தர்கள் படை, ஞான யோகியர் படை. [illegible]. எழும் ஒலி சிவ நாத ஒலி. பயன் மங்களம். [illegible] — (போலோ)

‘ கேதார்நாத் பாபாகி ஜே ’
‘ பத்ரி விசால்ஜிகி ஜே ’
‘ பாரதமாதாகி ஜே ’
‘ கங்கா மாயிகி ஜே ’
‘ ஜெயமங்கள் ஜெயமங்கள் ’

இது இந்தி. தமிழிலே,

‘ கேதாரநாதர் வெல்க ’
‘ பத்ரிநாதர் வெல்க ’
‘ (நாம் வாழும்) பாரதகண்டம் வெல்க ’
‘ கங்கை அன்னை வெல்க ’
‘ மங்கலம் பொங்குக, பொங்குக ’

இந்த முழக்கத்திலே என்ன இருக்கிறது? [illegible] பாரத பூமி நமக்கு நிலம். பத்ரிநாதர் ஒரு வழிகாட்டி. பயன் [illegible] இவ்வாறு ஆணென்றும் பெண்ணென்றும் இல்லாமல், குழந்தைகள் என்றும் கிழவர்களென்றும் இல்லாமல், ஆண்டிகள் என்றும் அரசர்கள் என்றும் இல்லாமல், சாதி இன வேறுபாடுகள் இல்லாமல் புறப்பட்டுக் கொண்டு, எல்லோரும் ஓரினமாகச் செல்லுகிறது அந்தப் படை. இந்த மந்திரம் தளர்ந்தவர்க்கு உணர்வு கொடுப்பது; நல்லன யாவும் சேர்ப்பதும் இந்த மந்திரம். அங்கே அன்பு பெருகுகிறது; [illegible]

கேதாரயாத்திரை ;



படை புறப்படுகிறது



படை முன்னேறுகிறது

பக்தி வெள்ளம் பெருக்கெடுக்கிறது. அந்த வேகம் செயலற்றவர்களையும் இழுத்துச் செல்கிறது. உற்சாகத்தோடு வழி நடக்கிறது தொண்டர்படை. அங்கே நாதமுழக்கம் இருக்கிறது. பறை கொட்டு முழக்கம் இருக்கிறது. ஆட்டம் இருக்கிறது. பக்தி வேகம் இருக்கிறது. சமயச் சின்னங்களாகிய கவசங்கள் இருக்கின்றன. வெற்றிக் குறிக்கோள் இருக்கிறது. அது கேதாரநாதர். இவையல்லாமல், தற்காலத் தேவைகளான மேற்சோடு, கம்பளிப் போர்வை, கைத்தடி, தலையில் முண்டாசு, தோளிலே ஒரு மூட்டை இவ்விதமாகக் காட்சி தருகிறது; இது புறக்காட்சி. அங்கே பக்தியைக் காணலாம்; உண்மையைக் காணலாம்; சகோதர சகோதரித்து வத்தைக் காணலாம்; சமத்துவத்தைக் காணலாம். ஆகவே அங்கே நாம் விரும்பும் பற்று அற்ற சுதந்திரம் பெற்ற ஒரு பெரும் சமுதாயத்தைக் காண முடியும்.

## *வழி எப்படி?*

ஒரு பொருளை அடைய வேண்டுமென்றால் வழி தெரியவேண்டும். வழி தெளிவாகத் தெரிந்தால்தான் அடையவேண்டிய இடத்தை விரைந்து நலம்பெற அடைய முடியும். உலகியல் சாதனங்களுக்கும் வழி வகுக்கப் பெற்றிருக்கின்றன. சமயக் குறிக்கோளிலேயும் வழிகள் வகுக்கப் பெற்றிருக்கின்றன. அவற்றிற்கும் சாதனம் உண்டு; சாதனையும் உண்டு. பெறும் பலனும் உண்டு. கண்டுவைத்தவர்கள் நம் அநுபவ ஞானிகள். வழி பலவாயினும் குறிக்கோள் ஒன்று. அடையும் பயனும் அதுவே. உலகியலிலே யாத்திரை ஒரு சாதனம். அதன்மூலம் அநுபவ அறிவு உண்டாகும். யாத்திரை செய்யும்போது பல நாகரிகம் படைத்தவர்களை - பல்வேறு நாட்டவர்களை - பல்வேறு குணம் படைத்தவர்களை - பல்வேறு பண்பாடுடையவர்களைக் காண்கிறோம். உறவாடுகிறோம். அறிவு விரிவடைகிறது. நாமும் பண்படுகிறோம். தட்பவெப்ப நிலைகளிலே பழகுவதால் உடல் உரம் பெறுகிறது. இரத்த ஓட்டம் பெருகுகிறது. மனமகிழ்ச்சி உண்டாகிறது. ஆயுள் வளர்கிறது. இது கண்கூடு.

சமய வழியிலே பல தலங்களைத் தரிசிக்கிறோம். பல தீர்த்தங்களிலே நீராடுகிறோம். பல பக்தர்களோடு உறவாடுகிறோம். பெரியோர்கள் தரிசனம் கிடைக்கிறது. மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கி னோர்க்கு வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கிறது. எங்கே, எப்போது, யாரால், கண்டோமா? சாத்திரம் சொல்லுகிறது ஆலயமும், அரனடியார் கூட்டத்தில் சேர்க்கையும், சாதனமும் முழு ஞானிகளுக்கும் வேண்டும் என்று. நாம் எம்மாத்திரம்?

நம்மை உருவாக்கும் யாத்திரைகளில் பெரிது உத்தரகண்ட யாத் திரை. செல்லும் வழிகளோ இக்காலத்திலே மிகவும் மலிவான

செலவிலே இலேசாகச் செல்லத்தக்கனவாக அமைந்துள்ளன. யாத்ரிகள் பெருகி வருகின்றனர். சுருங்கிய காலத்திலே பெரிய யாத்திரைகளைச் செய்து முடித்துவிட முடியும்; சாதனங்கள் இருக்கின்றன.

## *நான்கு வழிகள் :*

சென்னை புறப்படுமிடம். கல்கத்தா வழியாகக் காசி சென்று கங்கையில் நீராடி விசுவநாதர் தரிசனம் முடித்துக்கொண்டு ஹரத் துவாரம் வழியாக மேலே செல்லலாம். இது ஒன்று. நேரே டில்லி வழியாக ஹரத்துவாரம் அடைந்து மேலே செல்லலாம். பிரதட்சிண மாகப் பம்பாய் வழியாக ஹரத்துவாரம் சென்று மேலே செல்லலாம். இவை இருப்புப்பாதை வழிகள். மற்றொன்று வானவழி.

## *ஹரத்துவாரத்திலிருந்து :*

இனி, ஹரத்துவாரத்திலிருந்து உந்தூர்தி மூலம் ரிஷிகேசம் அடையவேண்டும். நல்ல இருவழிப்பாட்டை. ரிஷிகேசத்திலிருந்து கீர்த்தி நகர், ஸ்ரீநகர் (டெஹ்ரி கார்வால் - தலைநகரம்) வழியாக உருத்திரப் பிரயாகைக்கு உந்தூர்தி. இது ஒருவழிப்பாட்டை. மலையிலே, ஆற்றோரத் திலே, பெருங்கணவாய்கள் வழியாக நல்ல காட்சிகளினூடே செல்வது. இருபுறமும் பெருங்காடு; அடர்ந்தகாடு; உயர்ந்த மரங்கள், உயர்ந்த ஜாதி மரங்கள், மலையிலே படிப்படியாக உயர்ந்து உயர்ந்து செல்லும் கோதுமை வயல்கள், நீரூற்றுகள், மலை அருவிகள், ஆற்றுச் சோலைகள், இயற்கை வளங்கள், பூஞ்சோலைகள், மேலும் கீழுமாக ஏறி இறங்கிச் செல்லும் பாட்டை.

## *கால்நடை :*

உருத்திரப்பிரயாகையிலிருந்து கால்நடை. அதுவும் ஆற்றுக்கணவாய் வழி. அங்கேயும் மேலே கூறிய காட்சிகள். அயர்வு நீங்கச் சாட்டிகள். சிகரங்கள் நம்மைக் கைகாட்டி அழைத்துச் செல்லும். பனி மலை வழியிலே ஒரு அழகிய வெந்நீர் ஊற்று. களைப்பு நீக்கிக்கொண்டபின் கண்கொள்ளாக் காட்சி; கேதாரதரிசனம்.

இது அல்லாமல் ஹரத்துவாரம் செல்லும் இருப்புப்பாதையிலே 'நாஜிபாபேட்' என்னும் சந்திப்பிலிருந்து 'கோட்த்வாரா' வழியாக ஸ்ரீநகர் உருத்திரப்பிரயாகைக்கு நேரே உந்தூர்தி மூலம் வரும்வழியும் உண்டு. முதலில்சொன்ன வழியிலே கீர்த்திநகருக்கும் ஸ்ரீநகருக்கும் இடையே 'அலகநந்தா' ஆற்றின் பாலத்தைக் கால்நடையாகக் கடக்க வேண்டும். நான்கு பர்லாங் தொலைவு.

உந்தூர்தி வழியிலே நடுவில் தேவப்பிரயாகை இருக்கின்றது. தேவப் பிரயாகை ரிஷிகேசத்திலிருந்து நாற்பத்திரண்டு மைல் தொலைவு. அங்கே பாகீரதியும், அலகநந்தாவும் சேருகின்றன. அதற்கு இப்பால் அந்நதி கங்கையெனப் பெயர் பெறுகிறது. கங்கோத்ரி, யமுனோத்ரி போக விரும்புவோர் தேவப் பிரயாகையிலிருந்து பாகீரதி நதிக்கரையிலே கால் நடையாகச் செல்லவேண்டும். நேரே பத்ரி செல்லுவோர் உருத்திரப் பிரயாகையில் உந்தூர்தியில் இறங்காமல் 'பீபல்கோட்டி' (Pipalkoti) வரை உந்தூர்தியில் சென்று பிறகு கால்நடையாகப் பத்ரி செல்லவேண்டும். கேதார தரிசனம்செய்து பத்ரி செல்வதுதான் யாத்திரை பூர்த்தி என்று கொள்ளப்படுகிறது, அவ்விதம் செல்லுவோர் நாலாச் சட்டியிலிருந்து ஊக்கிமடம் துங்கநாத் வழியாக முப்பத்தாறுமைல் 'சமோலி' அடைந்து பதினான்குமைல் உந்தூர்தியில் 'பீபல்கோட்டி' சென்று ஸ்ரீசங்கர மடங்களில் ஒன்றான ஜோஷிமடம், விஷ்ணுப் பிரயாகை, பாண்டுகேசுவரம் வழியாகப் பத்ரி சென்று மறுபடி உந்தூர்தியில் ஹரத்துவாரம் திரும்பலாம். பொதுவாக, ஹரித்துவாரம் வழியில் நல்ல பெருந்தலங்களும் தீர்த்தங்களும் அமைந்திருப்பதால் யாத்திரைக்குச் சிறந்தது; பெரும்பாலோர் செல்லும் வழியும் இதுவே. இந்த யாத்திரைக்கு வடநாட்டில் உள்ளவர்கள் பெரும்பாலோரும் செல்கிறார்கள். பெரும் சாதனையாகவும் நினைக்கிறார்கள்.

## பாடல் பெற்ற தலங்கள் :

மூவர் முதலிகளால் பாடல்பெற்ற தலங்களிலே அநேகதங்காவதம், இந்திரநீலப்பருப்பதம், கேதாரம் ஆக மூன்று தலங்களின் தரிசனம் கிடைக்க வாய்ப்பு இருக்கிறது. கௌரிகுண்டம் அநேகதங்காவதம்; கேதாரத்திற்குக் கீழ் எல்லை இந்திரநீலப்பருப்பதம்.

## சாதனங்கள் :

ரிஷிகேசம்வரை புகைவண்டிகளிலோ, உந்தூர்திகளிலோ வசதிக்குத் தக்கவாறு போகலாம். மேலே தனி உந்தூர்தி வைத்திருப்பவர்கள் சாதாரணமாகப் போகமுடியாது. அதற்கு உத்தரப் பிரதேச அரசாங்கத்தினுடைய அனுமதி வேண்டியிருக்கும். உருத்திரப் பிரயாகை வரை உந்தூர்திமூலம் செல்லலாம். அதற்குமேலே கண்டி, தண்டி அல்லது கோடா மூலமாகப் போகவேண்டும்.

**கண்டி :** மூங்கிலால் உறுதியாகச் செய்யப்பெற்ற கூடை. நூற்கயிறு கொண்டு அதனைப் பிணைத்து நடுவிலே நாடாவைக்கொண்டு கட்டியிருப்பார்கள். கயிற்றைக் கூடையில் மாட்டி நாடாப் பட்டையைத் தன்னுடைய நெற்றியில் சேர்த்துத் தூக்கிச் செல்லுகிறான் கூலி.

கேதாரயாத்திரை :



தண்டி

கேதாரயாத்திரை :



கண்டி

கேதாரயாத்திரை :

தழைத்துவரும் இளமை.

கேதாரயாத்திரை :



தளர்ந்துவிட்ட முதுமை.

**தண்டி :** சாய்வு நாற்காலியிலே ஒரு மனிதன் உட்கார்ந்து செல்வது போல மரத்தால் இலேசாக அமைக்கப்பெற்றிருக்கும். முன் கொம்பிலே இருவரும் பின் கொம்பிலே இருவருமாகத் தாங்கிச்செல்வது.

**கோடா :** குதிரை. குதிரைச் சவாரிசெய்யத் தெரியாதவர்களையும் அதிலே உட்காரவைத்துக் குதிரைக்காரன் குதிரையைத் தட்டி அழைத்துப்போகிறான்.

பண்டங்கள் ஏற்றிச் செல்வதற்கு எருமைக்கடா, கழுதை, குதிரை, சடை ஆடு இவைகள் உபயோகப்படுகின்றன. பொதுவாக அங்கே குதிரையும் சடை ஆடும் பண்டங்கள் ஏற்றி மலையின்மேலே இருந்து வருவதற்கும் மேலே ஏற்றிப் போவதற்கும் பெரிதும் பயன்படுகின்றன.

**உடை :** நமக்குக் குளிர் தடுக்கக் கம்பளிச் சட்டை, கையுறை, காலுறை, மேற்சோடு, தலையிலே முண்டாசு, கையில் ஒரு தடிக்கொம்பு இவை வேண்டும். இந்தச் சாதனங்கள் ஹரித்துவாரிலே கிடைக்கும். படுக்கையும் கையில் இருக்கவேண்டும். கைக்குடை, கைவிசிறி அவசியம் தேவை.

## மலைநாட்டு மக்கள் வாழ்க்கை

**பண்பாடுகள் :** அறத்தின் அடிப்படையிலே மனித சமுதாயம் வாழக் கற்றுக்கொண்டுவிட்டதென்று சொன்னால், பூசல் ஏது? பொறாமை ஏது? போட்டி ஏது? ஆரவாரம் ஏது? அறத்தைப்பற்றி மனித சமுதாயம் கொஞ்சமும் எண்ணத் தொடங்காமல் மறக்கும்போதுதான் மனித மனத்தை மாசு கவ்விக்கொள்கிறது. இமயத்திலே வாழ்கின்ற மக்கள் நற்குணங்களின் நாயகமாக இருக்கிறார்கள். இயற்கையாகவே அறம் அவர்கள்பால் குடிகொண்டிருக்கிறது. திருட்டு இமய மக்களுக்குத் தெரியாது. பொய் அந்தமக்களிடம் புகுந்ததில்லை. சூது அவர்களிடம் அடைவதில்லை. கள்ளங்கபடில்லாத மாசற்ற உள்ளம். சூதும் வாதும் ஏதும் இல்லாத நல்ல வாழ்வு. பிறரைப்பார்த்துப் பொறாமைப்பட்டு அவரது பொருளைப் பறிக்கும் கெட்ட மனப்பான்மை அங்கு இல்லை. ஆம்! புனிதமான மலை — ஆண்டவன் அருட்காட்சியை விளக்கும் புண்ணியமானவையாயல், அங்கே இந்தத்தீக்குணங்கள் இருக்கமுடியும்? அவையெல்லாம் ஆரவாரம் நிறைந்த புற உலகத்தோடு நின்றுவிடுகின்றன.

இன்னொன்று; தெய்வ பக்தி. இமயத்து வாழும் மக்கள் இறை உணர்ச்சி மிக்கவர்கள். வழிபாடு பக்தி மார்க்கத்தை அடிப்பற்றியது. உணர்ச்சிமிக்க பஜனைகளும், பாடலும், ஆடலும் அவர்களிடத்து உள்ளன. இவையே அவர்கள் வழிபாட்டின் அம்சம். நம்மைக் கண்டவுடனே

அங்குள்ள சிறுவர் சிறுமியர்கள் நல்ல அழகிய இனிய குரலிலே, பத்ரி கேதார இறைவனுடைய திருநாமங்களைச் சொல்லி மங்களம் பாடுகிருர்கள்; தோத்திரப் பாடல்கள் பாடுகிருர்கள்; நாட்டியமும் ஆடுகிருர்கள். அவர்களுடைய உடை, அணி இவற்றைக் கண்டாலே ஏழ்மை உள்ளவர்களாகக் காட்சி அளிக்கிருர்கள். இது புறக் காட்சி. அங்கே பேராசைக்கு இடமில்லாததனாலே தேவையும் அதிகம் இல்லை.

## தொழில் வளம் :

நல்ல உழவர்கள் அவர்கள்; பாட்டாளி மக்களெல்லாம் - ஆணும் பெண்ணும். மலை உச்சிவரை கோதுமை பயிரிடுகிருர்கள். சில இடங்களிலே நெல்லும் உண்டு. நல்ல காய்கறிகள் பயிரிடப்படுகின்றன. வேண்டியதுபோக மற்றவற்றை அவர்கள் விற்றுப் பணமாக்குகிருர்கள். கோதுமை முதலிய உணவு தானியங்களை நீர்ச்சக்தி கொண்டு மாவாக்குகிருர்கள் செலவே இல்லாத நிலையிலே. உணவுத் திட்டம் மிகவும் சிக்கனமானது. நல்ல கறவை மாடுகள் (பசு, எருமை) உண்டு. சடை ஆடுகள் உண்டு. ஆண்கள் மண்ணை உழுது பண்படுத்திக் கொடுத்துவிடுகிருர்கள். பெண்கள் பலனைக் காத்து, எருவிட்டுக் களை எடுத்து, அறுத்துத் தானியமாக வீட்டில் சேர்த்து வைக்கிருர்கள். அந்தப் பொறுப்பு பெண்களுடையது. ஆண்கள் வயல் வேலை செய்த நேரம் போகக் கூலிவேலை செய்கிருர்கள். வாணிகம் செய்கிருர்கள். ஆட்டு மந்தைகளை ஓட்டிச் சென்று, சரக்கேற்றிக் கடைகளுக்கு விற்கவும் வாங்கவும் எடுத்துச் செல்கிருர்கள். சடை ஆடுகளிலிருந்து ஆண்டுக்கு மூன்று நான்கு முறை கம்பளி எடுக்கிருர்கள். ஆடு ஒன்று சுமார் 12 ரூபாயிலிருந்து 15 ரூபாய்வரையும் கம்பளி கொடுக்கிறது. நீண்டு வளர்ந்த கம்பளி மயிர் உள்ள நிலையிலே ஆட்டுத்தோல் பதப்படுத்தப் பட்டு ஆசனமாகவும் உபயோகிக்கப்படுகிறது. கம்பளியைப் பதப் படுத்தித் தக்களியால் நூல் நூற்கிருர்கள். கம்பளி நெசவும் உண்டு. முரட்டுக் கம்பளியும் நெய்கிருர்கள். மிக நேர்த்தியான 'பஸ்மினு' என்ற சால்வைத் தரத்துள்ள போர்வையும் அங்கு உண்டு. அந்த பெருமைதரக்கூடிய பழமொழி ஒன்று வழங்கு. 'பாசுமதி அரிசியும் பஸ்மினுர் போர்வையும்' என்பது அந்தப் பழமொழி. மிகச் சிறந்த பொருள்களாகக் கருதக் கூடியவை இவை. யாத்திரை செல்லும் செல்வந்தர்கள் இவையிரண்டையும் வாங்கிச் சென்று மிகப் பெருமை யாகப் பேசிக் கொள்வார்கள்.

தச்சுத்தொழில், கொல்லத் தொழிலாளர்களும் இருக்கிருர்கள். பால் பண்ணையும் இருக்கிறது. பால் மிகத் தடிப்பானதாக இருக்கிறது. மிகத் தடிப்பான ஆடையும் காய்ச்சினுல் கிடைக்கிறது. தயிரும் பல இடங் களிலும் கிடைக்கிறது. குதிரைகள் அங்கு ஏராளம். கழுதை பொதிகள்.

சடைநாய்கள் மிக அதிகமாக உள்ளன. ஆட்டுமந்தைக் காவலுக்கும் ஊர்க் காவலுக்கும் அவற்றைப் பயன்படுத்துகிறார்கள். பார்க்கப் பயங்கரமாகக் கரடியைப்போலக் காட்சியளிக்கின்றன அவை. சடையோடுகூடிய அவற்றின் தோலையும் பதப்படுத்தி ஆசனமாகவும் பயன்படுத்திக் கொள்கிறார்கள். விலைக்கும் விற்கப்படுகிறது. மேலே கூறியபடி ஆடுகளும், குதிரைகளும், கழுதைகளும் பண்டங்களை மலையிலிருந்து கீழே கொண்டுவரவும், கீழிருந்து மக்கள் உபயோகத்துக்குத் தேவையான பொருள்களை மேலே கொண்டு போகவும் பயன்படுத்தப்படுகின்றன.

## சுமை எங்கே?

கனமான பொருள்களைத் தலையிலே ஏற்றிச் செல்லத் தெரியவில்லை. கயிற்றினால் பிணித்து முதுகில்தான் சுமந்து வருகிறார்கள். மிகக் கனமான சாமான்களைக் கயிற்றினால் பிணித்து, நாடாமூலம் நெற்றியில் இணைத்துச் சுமந்து செல்கிறார்கள். மலை வழியிலே அவர்கள் நாடு நகரங்களிலே உள்ள சிறந்த சாலைகளிலே செல்வதுபோல அநாயாசமாகச்செல்கிறார்கள்.

## திருமணம்:

திருமணம் ஒரு முக்கியமான பெருஞ்சடங்கு. அவர்களிலே க்ஷத்திரியர்களும், பிராமணர்களும், வைசியர்களும், சூத்திரர்கள் என்ற தீண்டாதாரும் உண்டு. தாரை, தம்பட்டம், தாளம், முழவு, புல்லாங்குழல் அவர்களிடம் அதிகமாகக் காணப்படும் இசைக் கருவிகள். ஒவ்வொருவரும் வாழ்க்கையிலே மிகப் பெருமையாக நடத்தி மகிழுவது திருமணச் சடங்கு. நம்மவரைப்போல அவர்களும் அவர்களுடைய தகுதியிலே திருமணத்துக்காகப் பெருஞ்செலவு செய்கிறார்கள்.

தாரை, தம்பட்டம், தாளம் முழங்குகின்றன. சிறுபெண்கள் தங்களை அலங்கரித்துக்கொண்டு தாளத்துக்குத் தக்கபடி ஆடுகிறார்கள்: பாடுகிறார்கள். இந்தக் காட்சி மிக இனிமையாக இருக்கிறது.

“கைவழி நயனம் செல்லக் கண்வழி மனமும் செல்ல ஐயநுண்ணிடையார் ஆடும் ஆடல்” என்ற கம்பன் வாக்கும் அங்கு நினைவுக்கு வருகிறது. மணமகன் வீட்டார் கால்நடையாக ஆணும் பெண்ணும் பெண் எடுக்கக் குழுமிச் செல்கிறார்கள்.

## திருமணத்தில் தீச்சட்டி:

கூட்டத்துக்கு முன்னணியில் நெருப்புச்சட்டி எடுத்துச் செல்கிறான் ஒருவன். திருமணத்திலே தீச்சட்டியா என்று திகைக்கிறீர்களா? தேச வழக்கம் அது. பின்னே இசைக் கருவிகள் முழங்குகின்றன. அதற்கடுத்து

ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களின் உள்ளத்தில் பல ஆண்டுகளுக்கு முன்பே திருக்கேதாரத்தைப்பற்றிய தெய்வசிந்தனை தெளிவாகத் தோன்றி வளர்ந்து வரலாயிற்று. அந்த எண்ணத்தின் வளர்ச்சிதான் இந்த யாத்திரைக்கு அடிகோலியது. இந்தச் சிந்தனையை அடிக்கடி பலரிடமும் சொல்லி ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்கள் மகிழ்வதும் உண்டு.

## தூண்டுகோல் :

திருக்கேதாரத்துக்கு அடிக்கடி சென்று, கேதாரநாதரின் பாதார விந்தத்தில், மீதூரும் காதலால் மீளமீள வணங்கிக் காசியிலும் கேதார கட்டத்திலுமாக வாழ்வின் பலநாட்களையும், கழித்து வருகிற அருள் வாழ்வு வாழ்பவர்கள் திருப்பனந்தாள், காசிமடத்துத் தலைவர் ஸ்ரீமத் அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்.

"நாளோடிய நமனார்தமர் நணுகாமுனம் நணுகி
ஆளாய்உய்ம்மின் அடிகட்கிடம் அதுவேஎனில் இதுவே
கிளோடு அரவுஅசைத்தானிடம் கேதாரம் எனீரே"

என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் உலக மக்களுக்கு உரைப்பதை உளங் கொண்டார்கள் திருப்பனந்தாள் ஸ்ரீமத் காசிவாசி சுவாமிகள் அவர்கள். திருக்கேதார யாத்திரை வாழ்வில் ஓர் இலட்சிய வெற்றியாக இருக்க வேண்டுமென்பது அவர்கள் திருவுள்ளம். அவர்கள் யாத்திரை சென்று திருக்கேதாரப் பெருமான் முன் உருகி நின்றபோது உள்ளத்தில் ஒன்று தோன்றியது. தருமபுரத்துத் தங்குருநாத ராகிய ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களையும் இத்துணைச் சிறப்புடைய இத்தெய்விகச் சந்நிதிவந்து தரிசிக்கச் செய்யவேண்டும் என்று. உடன்வந்திருந்த ஓதுவாமூர்த்திக்கு அங்கேயே ஒரு உத்தரவு பிறப்பித்தார்கள். 'தருமபுரம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களைச் சென்று தரிசிக்கவேண்டும். தரிசித்துத் "தொண்டரஞ்சு களிறடக்கி" என்ற திருமுறைப் பதிகத்தைப் பாடி நிற்கவேண்டும். எப்பொழுது எங்கே எந்தநிலையில் கண்டாலும் அப்படியே. மறுபடிதான் மற்ற செய்தி களைக் கூறுவதெல்லாம்' என்று. அதுமட்டுமோ? 'கேதாரம்' என்றே அவர்க்குச் சிறப்புப் பெயரும் சூட்டிவிட்டார்கள்.

திருக்கேதார யாத்திரை முடிந்ததும் ஓதுவாமூர்த்திகள் பிரசாதங் களோடு வந்தார். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் திருவடிகளில் விழுந்து வணங்கிப் பின் கரங்குவித்து நின்று திருக்கேதாரத் திருப்பதி கத்தை ஓதினர். பின்னரே செய்திகளைக் கூறினர். பின்னர் பல முறை அவர் தருமைக்கு வந்தபோதெல்லாம் இப்பதிகத்தையே ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களின் திருமுன்பு பாடுவார். அடியேங்களுக்கெல்லாம்

ஒரே வியப்பு. ‘வேறு பதிகமே ஓதாதவாறு ஒரேபதிகத்தை யாண்டு எங்குக் கண்டாலும் ஓதுவதன் உள்ளுறை என்னவாயிருக்கும் ?’ என்று ஓடி ஓடித் தேடும் எங்கள் உள்ளம். ஆனுல் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களோ பதிகத்தின் நாத ஒலி செவியிற் பாயத் தொடங்கியவுடனேயே கண்களை மூடிச் சிந்தனையில் இருந்துவிடுவார்கள்; ‘திருக்கேதாரநாதன் திருவடி நீழல் சென்று தரிசித்துவருதல் என்று வருமோ ?’ என்பதுதான் அந்த சிந்தனையின் பயனுக இருந்திருக்க வேண்டும்.

காசிவாசி ஸ்ரீமத் சுவாமிகளவர்கள் யாத்திரையை முடித்துக்கொண்டு தருமபுரத்துக்குக் குருநாதரைத்தரிசிக்க வந்திருந்தார்கள். திருக்கேதாரத்து மகிமைகளையும், யாத்திரை போகும் வழியையும், முடிவில் ஏற்படும் முடிவிலா இன்பத்தையும் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களிடத்தில் விண்ணப்பித்தார்கள். மகாசந்நிதானம் அவர்களுக்குப் பல்லாண்டுகளாக இருந்த திருக்கேதாரச் சிந்தனை இன்னும் தீவிரமாகியது. வெள்ளிப்பனிமலையின் மீது விளங்கும் செம்மேனி அம்மானை என்று காண்பது என்ற ஞான வேட்கையும் ஒருகாலைக்கொருகால் பெருகி வரலாயிற்று.

இதற்கிடையில், ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் ஆட்சியில் ஆங்காங்கு நடத்திவரும் குடமுழுக்கு விழாக்களைப் போல் தருமபுர ஆதீனத்திற்குச் சொந்தமான திருநின்றியூர் ஸ்ரீ லட்சுமிபுரீசுவரசுவாமி ஆலயத்துக்கும் குடமுழுக்கு விழா நிகழ்த்தத் திட்டமிடப்பெற்றது. வேலைகள் விரைந்து நடந்தன. 7—4—1955 வியாழக்கிழமை அன்று குடமுழுக்கு விழா. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளியிருந்தார்கள். விழாவன்று திருப்பனந்தாள் ஸ்ரீமத் காசிவாசி சுவாமிகளும் இளவரசரோடு தரிசனத்திற்கு வந்து சேர்ந்தார்கள். கோயிலிலே சந்திப்பு. ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களைத் தரிசித்த திருப்பனந்தாள் கேதார ஓதுவா மூர்த்திகள் வழக்கம்போல் திருக்கேதாரத் திருப்பதிகத்தைப் பண்ணிசையோடு பாடினுர். ஆனுல், இந்த முறை பாடும்போது ஓதுவாமூர்த்திகளின் குரலில் ஒரு புதுநயம் இருந்தது. பதிகச் சொற்றொடர்களில் உருக்கம் மிகுதியாக இருந்தது. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் திருவுளத்தில் பல்லாண்டுகளாக முறுகி வளர்ந்த கேதார யாத்திரை தொடங்கப்போகிற தூய்மையின் விளைவே அது என்பதைப் பின்னர் உணர முடிந்தது. அங்கேயே ஸ்ரீமத் காசிவாசி சுவாமிகள் அவர்களிடம் இவ்வாண்டு கேதாரத்திற்கு எழுந்தருளுவதாக ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில் உத்தரவாயிற்று. ஸ்ரீமத் காசிவாசி சுவாமிகள் அவர்களுக்கு எல்லையற்ற மகிழ்ச்சி. காசியிலிருந்து திருப்பனந்தாளைச் சேர்ந்த குமாரசாமி மடத்து ஏஜண்ட் திரு. கல்யாணசுந்தரம்பிள்ளை அவர்களும் வந்திருந்தார். இதுவும் ஒரு எதிர்பாராத நிகழ்ச்சியே. ஸ்ரீ காசிமடத்துத் தலைவர், ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில்

எழுந்தருளுவதைக் குறிப்பிட்டு உரிய முறையில் வரவேற்க ஆணையிட்டார்கள். திரு. பிள்ளையும் உடனே புறப்பட்டார்.

குடமுழுக்கு விழாவுக்குப்பின் யாத்திரைக்குவேண்டிய ஆயத்தங்கள் விரைந்து நிகழ ஆரம்பித்தன. யாத்திரை முடிய குறைந்தது ஆறுவாரமாவது வேண்டும். மே முதல்வாரத்திலிருந்து அக்டோபர் முடிய அதற்குள்ளேயே பனி விலகிக் கதிரவன் வெயிலில் திருக்கேதாரம் திகழ்ந்து விளங்குவது. ஆதலால் யாத்திரைக்கு முன் செய்யவேண்டிய ஆக்கவேலைகளில் அதிவிரைவு இருந்தது. இவ்வாறு ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானமவர்களின் திருக்கேதார யாத்திரை என்ற ஞான விளக்குச் சுடர்விட்டெரியத் திருப்பனந்தாள் ஸ்ரீமத் காசிவாசி சுவாமிகள் அவர்களின் விண்ணப்பமும் வேண்டுகோளுமே தூண்டுகோலாக இருந்தன.

## யாத்திரைக் கால்கோள் :

11—4—'55 திங்கட்கிழமை மாலையில் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில் யாத்திரை தொடக்கநாள் குறிப்பிடப்பெற்றது. விரைவிலே இச்செய்தி அன்பர்கள் பலருக்கும் எட்டியது. குருமூர்த்தங்களுக்கெல்லாம் வழிபாடுகள் நிகழ்ந்தன. ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி ஆலயம், ஸ்ரீ தருமபுரீசுவரசுவாமி ஆலயம் மற்றும் ஆதீனத் தொடர்புள்ள பல ஆலயங்களிலும் சிறப்பு வழிபாடுகள் நிகழ்த்தப்பெற்றன. யாத்திரை வெற்றிகரமாக முடிய வேண்டுமென்று எல்லோரும் பிரார்த்தித்தனர்.

## சோமவாரத்தன்று :

திங்கட்கிழமை காலையிலேயே ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக்கு சிறப்பான வழிபாடுகள் நிகழ்ந்தன. அன்பர்கள் வந்து கூடிக்கொண்டே இருந்தார்கள். மாகேசுவரபூசை சிறப்பாக நடைபெற்றது. மாலையிலே, ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் ஆதி குருமூர்த்தமாகிய ஸ்ரீ ஞான புரீசுவரசுவாமியை வழிபட்டார்கள். சரியாக இரவு ஏழுமணிக்கெல்லாம் புறப்படுவதென்று திட்டம்.

அன்பர்கள் எல்லோர் உள்ளத்திலும் ஒரு நெகிழ்ச்சி. பிரிவுணர்ச்சி எல்லோரையும் ஒரு உலுக்கு உலுக்கிவிட்டது. கண்ணீர் பொழிய எல்லோரும் உந்தூர்தியின்பின் ' அரஹர ' முழக்கம் செய்தது மிக உருக்கமாக இருந்தது. இன்னும் ஒன்றரைமாதம் குருநாதரைப் பிரிந்திருக்க வேண்டுமே என்று அடியார்கள் மனத்துயர். அன்பர்கள் எண்ணத் தளர்ச்சி எல்லாம் எழுதியோ சொல்லியோ முடிக்க முடியாது. எல்லாமாக மறக்கமுடியாத நிகழ்ச்சியாக இருந்தது ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் புறப்பாடு.

## சொக்கநாதர் திருமுன்பு :

" பின்னமற நின்ற பிரான் " —உமாபதிசிவம்.

மாலை ஆறரைமணி. ஸ்ரீ சொக்கநாதப் பெருமான் திருமுன்பு வந்து கண்மூடி நின்றார்கள் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள். அன்பர்களின் கூட்டம். அடியார்களின் இணக்கம். ஆதீனக் கீழைக்கலைக் கல்லூரி முதலிய கல்வி நிலையங்களின் ஆசிரியப் பெருமக்களும், மாணவர்களும் நிறைந்துநின்றார்கள். மாயூரம் முதலிய நகரங்களிலிருந்து வந்திருந்த அன்பர்களின் குழாம். ஆதீன நிருவாகத்துறையைச் சேர்ந்த எல்லோரு மாக ஆதீன அலுவலர்களின் தொகுதி. இப்படியிருந்தது அந்தக்கூட்டம். ஓதுவாமூர்த்திகள் திருமுறை ஓதினார்; பஞ்சபுராணம் சொல்லிக் கொண்டே வந்தார். திருவிசைப்பா சொல்லும்போது மிகமிக உருக்கமாக இருந்தது. கற்றவர்கள் விழுங்குகின்ற கற்பகக்கனியாக உள்ளான் நம் பெருமான். அதுமட்டுமா? கருணைக்கடலாகவும் இருக்கிறான். கடல் என்றதும் கரைக்கு அடங்கிய ஒன்றுதானே என்று கருதவேண்டாம். அது கரையில்லாத அகண்டமான கருணையங்கடல். மெய்ஞ்ஞானப் படிப்புள்ளவர்களே அவனை அறிவார்கள். மெய்ஞ்ஞானப் படிப்பின்றி வெறும் பொய்ஞ்ஞானப் படிப்பாம் புத்தகப் படிப்பால் மட்டும் அவனை அறியமுடியாது. அவன் செவ்வண்ணத்தனாய் - செம்மேனியனாய் மாணிக்கத்தாலான மலையாக மன்னிநிற்கிறான். மலையாக உள்ளானே என்று மலைத்துவிடுமே மனம்; மலைக்கவேண்டாம். தன்னை மதிப்பவர்கள் மனத்துள் எல்லாம் உண்மை ஒளி வளர்க்கும் மணிவிளக்காக இருக் கிறான். அவன் வெறும் படைபலத்தால் வையத்தை ஆட்டிய திரிபுராதி களை எரித்த எம் சிவபெருமான்; அரசன்; திருவீழிமிழலையில் இருந்து அருளரசுபுரிகிறான். அவனைக் கண்டுகண்டு உள்ளம் குளிரவேண்டும்; கண்கள் குளிரவேண்டும்' இப்படி இசைக்கிறது அந்தத் திருஇசைப்பா. மாணிக்கமலையைக் கண்டுதானே மனங்குளிரப் போகிறார்கள் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்கள்! எனவே இது மிகவும் பொருத்தமாக இருந்தது. விழுந்து வணங்கி மெய்ம்மறந்த ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களுக்கு நேரமாயிற்றே புறப்பட வேண்டுமே என்ற கவலை. ஆலவாய்ச்சொக்க நாதரைப் பிரியவேண்டுமே என்ற சிறுசோர்வு. 'பிரிவு என்பது எப்படி? பெருமானைத்தான் உள்ளத்தில் பின்னமறப் பிணைத்துவிட்டோமே' என்ற சமாதான உணர்ச்சி; அடியேங்களுக்கெல்லாம் திருக்கைவழக்கம் வரிசையறிந்து நிகழ்ந்தது. முடிந்தபின் ஆன்மார்த்த மூர்த்தியிடம் பிரியா விடைபெற்று முகப்புக்கு எழுந்தருளினார்கள். முகப்பில் நின்றுகொண் டிருந்தது உந்தூர்தி. மாலை 7 மணிக்கெல்லாம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத் தொடு தருமபுரத்தை விட்டுப் புறப்பட்டது.

## அன்றிரவு :

உந்தூர்தி சென்னை போகும் பெருஞ் சாலையிலே விரைந்துசென்றது; தென் பெண்ணையாற்றங்கரையிலே நின்றது. இரவு உணவு அங்கே முடித்துக் கொள்ளப்பட்டது. உண்ணுதற் கமைந்த இடம் ஒரு பரந்த பெரிய மணற் பரப்பு. தென்பெண்ணையாறு; முழு நிலவு; அமைதியான சூழ்நிலை; மெல்லவீசும் மந்தமாருதம்; சூழ்நிலை மிக மிக இனிமையாக இருந்தது. உணவின் ஒவ்வொரு கவளமும் ஒவ்வொரு சிந்தனையை ஒவ்வொருவருக்கும் தூண்டியது. காட்சியினுடைய அருமையிற் தோய்ந்தனர் சிலர்; மந்தமாருதத்தின் இனிமையை வியந்தனர் சிலர்; இயற்கையின் எழிலைச் சுவைத்தனர் சிலர்; இப்படி இருந்தது எங்கள் கோஷ்டி. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தின் சிந்தனையையும் தூண்டியது அந்தக் காட்சி; ஆனால் அந்தச் சிந்தனை சிவ சிந்தனையாக வெளிவந்தது.

## சிவசிந்தனை :

அப்பர் பெருமான் காட்சியளித்தார். அவர் திருவாய்மலர்ந்தருளிய தேவாரம் ஒன்றும் அந்த இயற்கைக் காட்சிக்கு ஒரு அளவுகோலாக நின்றது. அதுவே அந்த சிவசிந்தனை. அது சொல்கிறது.

எங்கள் பெருமான் இணையடி நீழல் மிகவும் இன்பம் பயப்பது. அந்த இன்பம் தெவிட்டாத இன்பம். அனுபவம் சொல்லால் விளக்கமுடியாத ஒன்று. ஆனாலும் மக்களாகிய உங்களுக்கு உலகியலிலே வைத்தும் கொஞ்சம் சொல்லித் தருகிறோம். எங்கே! உங்கள் அநுபவப்படியே சிந்தித்துப் பாருங்கள். ஒரு நல்ல சங்கீத கோஷ்டி. குற்ற மற்ற வீணையி னுடைய நாத ஒலி எழும்புகிறது. காலமோ இளவேனிற்காலம். தென்றல் வீசுகிறது. மாலை மதியமும் காட்சியளிக்கிறது. இடமோ தாமரை பூத்த தடாகக் கரை; அங்கே தாமரையிலே தேன் சொரிகிறது. மகரந்தம் நாறுகிறது. இவை வண்டுகளை அழைக்கின்றன. அந்தக் களிவண்டுகள் சும்மாவா வருகின்றன? இசை பாடிக்கொண்டே வருகின்றன. அந்த ரீங்காரமும் வீணையின் நாத ஒலியும் ஒன்றோடொன்று போட்டி போடு கின்றன. எங்கே, "இந்தக் கதம்பக் காட்சியைச் சுவைத்துப் பாருங்கள். ஏதோ ஓரளவு எந்தை இணையடி நீழலின் இன்பத்தை உங்களுக்கு எடுத்துச் சொன்னதாக இருக்கும்."

இப்படி ஓடியது அந்தச்சிந்தனை. எங்களுக்கொரு நாடகக்காட்சியாகத் தோன்றிநின்றது. சற்றுநேரம் இவ்விதமாகவே பேசிக்கழித்தோம். சென்னை சேரவேண்டுமே; இரவு ஏறிக்கொண்டே வருகிறதே; புறப்படுவோம் என்று அந்தக் காட்சி இன்பத்துக்கும் பேச்சு இன்பத்துக்கும் முற்றுப்புள்ளி வைத்துப் புறப்பட்டன எங்கள் உந்தூர்திகள். சென்னையை அடையும் போது நள்ளிரவு.

கேதாரயாத்திரை (சென்னை)



ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில் புறப்பாடு

கேதாரயாத்திரை (சென்னை)



ஏற்றிச்சென்ற ரயில்

கேதாரயாத்திரை (கல்கத்தா)



ஹௌராபாலம்

## இரயில் பிரயாணம் :

மறுநாள் மங்கலவாரம்; வேலூர் முத்துக்குமரனுக்கு உகந்த நன்னாள். வேலூர் இறைபணி மன்றத்திலிருந்து சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனுக்கு உந்தூர்தி விரைந்தது. இரவு மணி 8-10க்குத் தொண்டர்களுடைய முழக்கத்தினிடையே இரயிலும் புறப்பட்டது. 'நமப் பார்வதி பதயே' 'தென்னாடுடைய சிவனே போற்றி எந்நாட்டவர்க்கும் இறைவாபோற்றி' முதலிய சிவ ஒலிகள் இரயில் மேடை கடந்துசெல்லும் வரை ஒலித்துக் கொண்டேயிருந்தன. இரவுநேரம்; பயண அயர்ச்சி; நல்ல நிம்மதியான தூக்கம்.

## சூரியோதயம் :

நெடுப்ரோலு வந்ததுமே சூரியோதயம் செம்மேனி அம்மானைக எங்களுக்குக் காட்சியளித்தது. பெருமானுடைய கருணைத் திறத்தையும் எங்களுக்கு நினைப்பூட்டியது. சூரியன் புற இருளைப்போக்கி நம்முடைய புலக் கண்ணுக்கு ஒளி விளக்கம் காட்டுவதுபோலப் பெருமான் ஆன்மாக்கள் மாட்டுள்ள பெருங் கருணையால் உள்ளிருள்நீக்கி ஞானஒளிவிளக்கம் காட்டுகிறான். இதுவே உபதேசம். சிந்தனை இவ்விதமாக ஓடியது. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் திருமஞ்சனமாயிற்று. இரயிலிலேயே வழிபாடுகளும் நடைபெற்றன.

## விஜயவாடா வந்தோம் :

காலை மணி 6-45-க்குக் கிருஷ்ணா நதியைக் கடந்து விஜயவாடா வந்தடைந்தது எங்கள் இரயில். இங்கே கிருஷ்ணாநதி மிகப் பெரிய தோற்றத்திலே காட்சியளிக்கிறது. அங்கே ஒரு அணைக்கட்டு கட்டப் பட்டிருக்கிறது. இரயிலடியை ஒட்டிப் பெரிய தண்ணீர் தூய்மைச்சாலை அமைந்திருக்கிறது. பொதுவாகவே கிருஷ்ணாதீரம் மிகவும் செழிப்பு வாய்ந்தது. விஜயவாடாவுக்கு இப்புறத்திலே கிருஷ்ணாவிலிருந்து பல கிளைக் கால்வாய்கள் கொண்டுவரப்பட்டிருக்கின்றன.

இரயிலடிக்குப் பக்கத்தில் ஒரு மலைக்காட்சி. அதிலே கனக துர்க்கை அம்பிகையின் கோயிலை இரயிலிலிருந்தே தரிசித்துக்கொண்டோம். சிமிட்டித் தொழிற்சாலை இரயிலடிக்கு மிக அருகிலே அமைந்திருக்கிறது. ஆந்திரநாட்டின் மிகப்பெரிய நகரம். வானொலிநிலையமும் உண்டு. தொழிற் சாலைகளும் மிக அதிகமாக உள்ளன.

## மாநாடு கூடியது :

காலைச் சிற்றுண்டி விஜயவாடாவிலே முடிந்தது. இரயிலும் நகர்ந்தது. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் எங்களோடு வந்த திருக்கருகாவூர் சிவஞானம் என்னும் தொண்டரை அழைத்தார்கள். 'இப்போது இங்கே ஒரு மாநாடு கூடியிருக்கிறது. நடக்கட்டும் ஒரு சிறு சொற்பொழிவு' என்று பணித்தார்கள். அந்த முதல் வகுப்புப் பெட்டியின் பகுதியிலே ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் உட்பட நாங்கள் மூன்று நான்கு பேர்களே இருந்தோம். தொடங்கிவிட்டார் தொண்டர். ஒரு பெரிய மகத்தான கூட்டத்தை நோக்கிப் பேசுவதுபோல 'மகா ஜனங்களே' என்று அழைத்தார். பேசுகிறார்:-

## நெஞ்சுக்கு அறிவுரை :

நெஞ்சே! நீ நிலைபெறுமாறு எண்ணுதியேல் நித்தலும் திருக் கோயிலுக்குப் பொழுது புலர்வதற்குமுன் செல்! அங்கே திருத்தொண்டு உன்னாலியன்றதைச்செய்! அலகிடு! மெழுக்குமிடு! பூ எடு! மாலைதொடு! பெருமான் புகழ்பாடு! தலையாரக்கும்பிடு! உணர்ச்சி வேகத்திலே கூத்தும் ஆடு! ஆடும்போது, சங்கரா சயபோற்றி போற்றி என்று சொல்! அலை புனல்சேர் செஞ்சடை எம்ஆதி என்று அகமுருகிச்சொல்! அந்த இறைவன் ஆரூரன் என்று கூறு! சொல்லிச் சொல்லி அலறு! உனக்கு நிலையான தன்மை உண்டாகும். நிலைபெறவேண்டிய ஆசை இருந்தால் மறவாதே என்றார். இது அப்பர் பெருமானின் திருவாக்கு. (அப்படியே நமது தொண்டரும் உளம் உருகச் சொன்னார்.)

## தொழிற்படுத்த வேண்டும் :

நம்மைப் படைத்த ஆண்டவன் நமக்கு எல்லாவசதிகளையும் கொடுத் திருக்கிறான். உலகில் இயங்குவதற்கு உற்ற வசதிகள் ஒன்றும் குறை வில்லை நமக்கு. கருவி கரணங்களைக் கொடுத்திருக்கிறான். ஆனால் கருவி கரணங்களை நாம் தொழிற்படுத்தவேண்டும். அவற்றின் வழியே நாம் செல்லக்கூடாது. பெரியோர்கள் கருவி கரணங்களைத் தொழிற் படுத்துவார்கள்! அப்பரடிகள் தலையை, வாயை, மூக்கை, கண்ணை, செவியைத் தொழிற்படுத்துகிறார் பாருங்கள்!.

## அங்கங்களுக்கு ஆணை :

'ஐந்து பொறிகளாகிய உங்களுக்கு நான் உத்தரவிடுகிறேன். நான் யார் தெரியுமா? தேடிக் கண்டு கொண்டவன். எதை? பரம்பொருளை; எப்படிப்பட்ட பரம்பொருள்? மாலும் நான்முகனும் தேடிக் காணமுடியாத தேவன்! பெருமான்! அவனை எங்கே கண்டேன்? என் உள்ளே கண்டு

கொண்டேன்! அவன் என்னுள்ளே இருக்கிறன். ஐயகோ! பாவம் குற்றுலத்துறைகின்ற அந்தப் பெருங்கூத்தன் அவனல்லாது உனக்கு உன் உயிர் கொண்டு போகப்படும்போது உற்றுர் வேறு ஆருளர்? ஆகவே தலையே நீ வணங்கு கண்காள் காண்மின்கள்! செவிகாள் அவன் புகழைக் கேண்மின்கள்! மூக்கே நீ முரலாய்! வாயே பிரான்தன்னையே நீ வாழ்த்து! நெஞ்சே! மங்கை மணுளனை நீ நினையாய்! கைகளே பரமனை மலர்தூவித் தொழுவீர்! அரன்கோயில் வலம்வந்து, மலர்தூவி வழிபடாத இந்த ஆக்கையாற் பயன் என்ன? ஆகையால் நீ இவற்றைச்செய்! கால்களே! திருக்கோயிலை வலம் வாருங்கள்! இவ்வளவும் செய்து பயன் என்ன என்று எண்ணுகிறீர்களா? இவைகளை நீங்கள் செய்துவிட்டால் ஈசனுடைய சிவகணங்களோடு ஒன்றுக வைத்து எண்ணப்படுவோம் திருவடியின்கீழ்ச் சென்று இருந்து இறுமாந்தும் வீற்றிருப்போம். ஆகையால் தொழிற்படுங்கள், பணித்தபடி! என்பது அந்த ஆணை'. இவ்வாறு சென்றது சொற்பொழிவு. முடிவிலே 'தொண்டரஞ்சு' என்ற கேதாரத் திருப்பதிகச் சிந்தனையோடு இந்தச் சொற்பொழிவு முடிவுற்றது.

## வயிற்றுணவு:

அவப்பொழுதில்லாமல் இரயில் பயணத்தால் உண்டாகும் அயர்ச்சி தெரியாமல் இடையிடையே செவிக்குணவில்லாதபோது வயிற்றுணவும் பெற்றுக்கொண்டு சிந்தனையெல்லாம் சிவசிந்தனையாக - பேச்செல்லாம் கேதாரயாத்திரையின் பெருந்திட்டமாகப் பகலும் இரயிலும் ஓடிக்கொண் டிருந்தன.

## இராஜமகேந்திரம்:

இங்கே ஆந்திரக் காகிதத் தொழிற்சாலை அரசாங்கத்தால் வைத்து நடத்தப்படுகிறது. சுற்றிலும் கரும்பு பயிரிடப்படுகிறது. செழிப்பான நிலம்; கோதாவிரியின் கரையிலே அமைந்திருக்கிறது. இப்புறத்திலே கோதாவிரி ஸ்டேஷன் இருக்கிறது. ஒரு பெரிய ஜில்லாவின் தலைநகரம்.

## ஓங்கோல்:

மேலே ஓங்கோல் வந்தது. மாடுகளுக்குப் பெயர்பெற்ற ஊர் அது. கோதாவிரிப் பிரதேசம் செழிப்பானது. நெல்லும் கரும்பும் செழிப்பான பயிர்கள். அப்பக்கத்து மக்கள் அதிகமாகச் சிகப்புச் சாய வேட்டிகளை உடுத்துகிருர்கள். தலையிலே முண்டாசு உண்டு. கனமான பொருள்களைக் காவடிக்கட்டித் தூக்குகிருர்கள்.

## தூணி :

இங்கே மரத்தால் மிக அழகான பொம்மைகள் செய்து விற்பனைக்கு வருகின்றன. விலை மலிவு.

## குடம் நழுவியது :

இரயில் புறப்படும் சமயம் எங்களில் ஒருவர் தண்ணீர் எடுக்கச் சென்றார். முதலிலே ஒரு குடத்தைக் கொண்டுவந்து இரயிற் பெட்டியின் கதவோரத்தில் வைத்துவிட்டு மற்றொரு குடம் தண்ணீர் கொணரச் சென்றார், இரயிலும் புறப்பட்டுவிட்டது. கையிலுள்ள குடத்தோடு ஓடி வந்து ஏறினார். ஆனால் முதலில் வைக்கப்பட்டுள்ள குடம் இரயில் புறப் பட்ட வேகத்தால் பெட்டியின் கதவு மூடித்திறக்கவே வெளியில் தள்ளப் பட்டுவிட்டது. இவர் இரயிலிலே தொத்தி ஏறினார். குடம் போனதற்கு மனம் வருந்தினார். நாங்கள் அவரைத் தேற்றினோம், ஆனாலும் அறிவுரை சொன்னோம். குடம் போனதற்கு நீ வருந்தாதே; இரயில் புறப்படும்போது நாமல்லவா எச்சரிக்கையாக இருக்கவேண்டும்? இரயில் புறப்படும்போது ஓடிவந்து ஏறினாயே நீ விழுந்திருந்தால்.........''. அதற்குப்பிறகு வந்திருந்த எங்கள் கோஷ்டியினர் எல்லோரும் முழுக் கவனத்துடன் வந்தார்கள். *

## வால்டேர் வந்தோம் :

மாலை 4-30 க்கு வால்டேர் சந்திப்புக்கு வந்துசேர்ந்தோம். அதனோடு தென் பிராந்திய இரயில்வே முடிவடைகிறது. அதற்குமேலே கிழக்குப் பிராந்திய இரயில்வே தொடங்குகிறது. அங்கே மாலைச் சிற்றுண்டியை முடித்துக்கொண்டோம். ஊர் விசாரணை தொடங்கியது. ஊர் பெரிய ஊர். ஆந்திரப் பல்கலைக்கழகம் இருக்கிறது. தரை, ஆகாயம், கப்பற் படைத் தளங்கள் இருக்கின்றன. அங்கிருந்து ...சிறிது தொலைவிலே விசாகப் பட்டினம் என்னும் துறைமுகப்பட்டினம் இருக்கிறது. அங்கே இந்தியாவிலே முதன் முதலாகப் பெரிய கப்பல்கட்டும் தளம் அமையப் பெற்றிருக்கிறது. பெரிய சமுத்திரங்களிலும் வெளிநாடுகளுக்கும் செல்லக் கூடிய கப்பல்கள் கட்டப்படுகின்றன. இவ்வாறு அந்தப் பிரதேசம் தொழில் வளத்தாலும், மண் வளத்தாலும், அறிவு வளத்தாலும், படை வளத்தாலும் சிறந்து நிற்கிறது. இது நமது தென்னாட்டுக்கு ஒரு பேரணி. ஆந்திரா நமது சகோதரிதானே !

*இந்தக் குடத்தைப் பிறகு இரயில் அதிகாரிகள் எடுத்துவைத்திருந்து எங்களுக்குத் திரும்ப அனுப்பிவைத்தனர்.

## சிம்மாசலம் :

அரைமணி நேரத்துக்கெல்லாம் சிம்மாசலம் வந்துவிட்டோம். இங்கு ஒரு பெரிய மலை இருக்கிறது. ஒரு அருவியும் உண்டு. 'இங்கு திரிபுராந்தக சிவாலயம் இருக்கிறது. ஆனால் நரசிம்மத்தின் ஆலயம் மிகப் பெரியது, அழகியது, கலைவளம் நிரம்பியது என்கிறார்கள். வேற்று நாட்டார் படையெடுப்பால் சிற்பங்கள் சிதைந்துள்ளனவாம். கோரமான மூர்த்தி; பெரிய உருவம். அதற்காக அதன்மேலே சந்தனக் காப்புச் சார்த்திச் சிவலிங்கத் திருமேனிபோல அமைத்திருக்கிறார்களாம். ஆண்டுக்கொருமுறை புதுச் சந்தனம் பூசுவார்களாம். அந்த நாளில்தான் நரசிம்மமூர்த்தியின் கோலம் தெரியவரும்; மற்ற நேரமெல்லாம் சிவலிங்க மாகவே காட்சியளிக்கிறது அது.

## விஜயநகரம் :

கதிரவன் மேற்கு மலைவாயில் விழும்நேரத்தில் விஜயநகரம் வந்தோம், விஜயநகரமென்றாலே ஒரு பெரிய பேரரசின் நினைப்புத்தான் வரும். அதுவும் கிருஷ்ணதேவராயருடைய வரலாற்றுப் புகழ்மிக்க ஆட்சி நம் கண்முன்னே நிற்கும்; கிருஷ்ணதேவராயர் மொழியால் தெலுங்கர். ஆனால் தமிழுக்கும் சிறந்த ஆதரவு காட்டியிருக்கிறார். பிறப்பிலே வைணவர்; ஆனால் சமரச நோக்குடையவர். சைவ வைணவ வேறுபாடு அவரிடம் கிடையாது. எல்லா ஆலயங்களையும் ஒருசேரக் கண்காணித்தார். பெரிய பெரிய ஆலயங்களையும், மண்டபங்களையும், கோபுரங்களையும் கட்டிவைத்தார். இராயர் கோபுரம் என்று தென்னிந்தியாவிலே பெருமை யாகச் சொல்லிக் கொள்வார்கள். இதனால், ஆலயத் திருப்பணியிலே அவர்க்கு அதிக ஆர்வம் உண்டென்பது தெரியவரும்.

ஒரு பெரிய பன்மொழிக் கவியரங்கம் அவர் சபையை அலங்கரித்தது. அவரே கவிபாடும் வல்லமை உடையவர். பண்பாடு மிக்கவர். ஆட்சி செம்மையான ஆட்சி. ரஸிகத்தன்மையும் அவரிடம் உண்டு. பல சங்கீதப் புலவர்கள், விகடர்கள் அவருடைய ஆட்சியின்கீழ் இருந்தார்கள். தெனாலிராமன் வாழ்ந்தது இவர் காலத்தில்தான். வீரத்திலும் சிறந்தவர். தென்னாடு முழுவதையும் தன்னுடைய கையின்கீழே கொண்டு வந்தவர். மகமத் அலியை எதிர்த்துப் போரிட்டவர். ஒரு பெரிய பேரரசை நிறுவி வைத்த பெருமை இவருக்கு உண்டு. இப்பொழுதும் அவர் வழிவந்த பெருமக்கள் இவ்வூரிலே இருந்துவருகிறார்கள். ஆங்கிலேயராட்சியிலே இவர்களுடைய ஆட்சி சிதைவுற்றாலும் சொத்துக்கள் ஏராளமாக இருந்தன. இந்த வழியிலே வந்த அரசர் ஒருவர் காசியினுடைய அருமை யறிந்து தன்னுடைய வாழ்நாளிலே பெரும்பகுதியும் காசியிலேயே வசித்துவந்தார்.

காசிவிசுவநாதருக்கு ஆராதனைகள் செய்விக்கப் பல கட்டளைகளையும் வைத்திருக்கிறார். அங்கேயும் இவருக்குச் சொத்துண்டு. இன்னும் பல தருமங்கள் ஸ்ரீகாசியில் நடைபெற்று வருவதாகத் தெரிகிறது. விஜயநகரம் அழகான பெரிய ஊர். பெரிய அழகான ஏரி ஒன்றும் ஊரருகே இருக்கின்றது.

## இரயிலடியில் வெடி :

இரயிலும் புறப்பட்டது. இரயிலடியிலே வெடிச் சத்தம் பெரிதாகக் கேட்டது. புறப்பட்ட வண்டி நின்றது. அச்சத்தோடு நாங்கள் பலர் வண்டியிலிருந்து கீழே இறங்கினோம். ஒரு பெட்டியினருகே பெருங் கூட்டம். என்னவென்று விசாரித்தோம். பிரமுகர் ஒருவர் அந்த வண்டியிலே புறப்படுகிறார்; கூட்டம் வழியனுப்புக் கூட்டம்; வெடி அவர் புறப்பாட்டுக்காகப் போடப்பெற்றது என்று தெரியவந்தது. மறுமுறையும் இரயில் நகர்ந்தது. வெளியில் இருள் சூழ்ந்திருந்தது. மாலை வழிபாடுகள் ஓடும் இரயிலிலேயே நடைபெற்றன. இவ்வாறு விஜயநகரத்தை நாங்கள் தாண்டும்போது விஜய ஆண்டின் கடைசி இரவைத் தொட்டு நின்றோம். பொழுது விடிந்தால் மன்மத.

## மன்மத பிறந்தது :

பூரிஜகந்நாதம், சில்காஏரி, புவனேசுவரம், மகாநதி எல்லாம் இரயிலிலே எங்களுக்குத் தெரியாமலே ஓடிவிட்டன. பொழுது புலர்ந்தது; கரக்பூர் என்னும் கல்கத்தாவின் எல்லை நகரம் இருபதுகல்லுக்கு அப்பால் இருப்பதாகத் தெரியவந்தது. வந்தது புதுவருஷம் மன்மத. வியாழன், குருவாரம். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தின் மௌன உபவாச தினம். ஓடும் இரயிலிலேயே திருமஞ்சனம் ஆயிற்று. வழிபாடுகளும் நடைபெற்றன. எங்களுக்குப் புத்தாடை அளித்தார்கள். திருக்கை வழக்கமும் நிகழ்ந்தது.

## எச்சரிக்கைவேண்டும் :

கரக்பூர் வந்தது. காலை மணி 8-30 இருக்கும். எங்களுக்குக் காப்பிப் பைத்தியம் பிடித்துக்கொண்டது. சிற்றுண்டிச்சாலையை நாடினோம். பெருங்கூட்டம்; அடித்துப் பிடித்து எங்களுக்கு வேண்டிய சிற்றுண்டிகளைக் காசுகொடுத்து வாங்குவதற்குள் பெரும்பாடாகி விட்டது. கால அளவு தெரிந்தவர்கள் முந்திக்கொண்டுவிட்டார்கள். கூட்டம் குறைந்தது. எங்களுக்கு மகிழ்ச்சியும் ஏற்பட்டது. காபி கிடைத்தது; சுவைத்து உட்கொள்ளத் தொடங்கினோம். மணியடித்தான். வண்டியும் புறப்பட்டது.

அரைகுறையாக ஓடினோம். கிடைத்த பெட்டியிலே தொத்திக் கொண்டோம். நாங்கள் இருந்த வண்டியிலிருந்தவர்களுக்கு நாங்கள் ஏறியது தெரியவில்லை. எட்டி எட்டிப் பார்த்தார்கள். மனம் வருந்தியிருக்க வேண்டும். நாங்களும் எட்டிப் பார்த்தோம். சைகையாலே ஏறி விட்டதைக் குறிப்பாகக் காட்டினோம். அங்கிருந்து அந்த வண்டி 72 கல் தொலைவு நில்லாமல் ஓடவேண்டும். எங்களைப் பயம் கவ்விக்கொண்டது. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களை விட்டுவந்தோமே; மௌன தினமாயிற்றே; அவர்கள் திருவுள்ளமும் கனியுமே என்று அனைவரும் சிந்திக்கத் தொடங்கினோம். ஆண்டவன் எங்களுக்கு அருள் செய்தான். எதிர் வண்டி ஒன்று வந்தது. இருவழிப்பாட்டையாக இருந்த போதிலும் ஒரு சிறு ஸ்டேஷனில் வண்டி நின்றது. இறங்கினோம்; ஓடினோம்; எங்கள் பெட்டியில் தாவி ஏறிக்கொண்டோம். இது ஒரு படிப்பினை. எல்லோர் மனமும் சமாதானப்பட்டது. காலமறிந்து செய்யும் செயலுக்குத்தான் மதிப்பு உண்டு; என்பதை ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் திருநோக்கு எங்களுக்கு எடுத்துச் சொல்வதுபோல் இருந்தது. உணர்ந்தோம்.

## வங்கத்தில் தஞ்சைக் காட்சி:

வங்காளத்தைக் கண்டதுமே சோழநாட்டிலே தஞ்சை மாவட்டத்திலே காவிரி தீரந்தான் எங்களுக்கு நினைவு வந்தது. எங்கும் வாய்க்காலும் வரப்பும்; மூங்கிலும் வாழையும்; தென்னையும் தாழையும்; குடிசை வீட்டமைப்பும் காணும் நாகரிகமும்; ஆறுகளும் - குளங்களும்; எல்லாம் அப்படியே எங்கள் ஊரை வங்கத்திலே கொண்டுவைத்தது போன்ற காட்சி. எங்களுக்கு மாத்திரமா இது? கோதாவரி தீரத்தைக் கவியுருவமாக்கும் கம்பன் அங்கே சோழநாட்டின் வளத்தைக் கண்டான். வடக்கே படையெடுக்கும் குலோத்துங்கன் அங்கே வண்தமிழ் நாட்டைக் கண்டான். இது எங்குச்சென்றாலும் தன் நாட்டையே, நாகரிகத்தையே, காணும் தமிழனின் மனப்பாங்கு.

## யாத்திரை எதற்கு?

யாத்திரையைப்பற்றி எங்கள் சிந்தனை ஓடிற்று. பெரிய புண்ணியமான யாத்திரையை இந்தடவை மேற்கொண்டிருந்தோம். எல்லோருடைய மனத்திலுமே அந்தப் பெருமை தெரியலாயிற்று. புது வருஷம் வந்ததே? நல்ல சிந்தனை என்ன செய்தோம் என்று நினைத்தேன்? ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில் ஏதோ ஒன்று எழுதிக்கொண்டிருந்தார்கள். கரக்பூர் வந்ததும் அதனை என்னிடம் கொடுத்துப் படித்துப்பார்க்கச் சொன்னார்கள் "உலகானுபவம்" அதிலே இருந்தது. உலகானுபவம் யாத்திரையின் மூலம் எவ்விதம் கிடைக்கிறது. யாத்திரை வேறு எவ்வெவ் விதத்திலே

நம்மைப் பண்படுத்துகிறது. அதனைச் செவ்வனே எவ்விதம் முடிக்கலாம். என்ற பல விஷயங்கள் அதிலே அடங்கியிருந்தன. அதனையும் படித்துப் பாருங்கள்:-

## *உலகானுபவம் :*

வைதிகம் என்றால் இலௌகிகத்தின் முதிர்ச்சி என்பர் அறிஞர். அது போல யாத்திரை என்பது உலகானுபவம் - உலகப்படிப்பு எனலாம். இதன்மூலம் கல்வி ,கேள்வி, காட்சி என்ற பல படியாலும் உணர்ந்து தெரிந்துகொள்ள ஒரு வாய்ப்பு ஏற்படுகிறது. உலகமே ஒரு சர்வகலாசாலை போன்றது. கலாசாலைகளில் ஒரு சமயத்தில் ஒரு விஷயம்தான் கற்றுக் கொள்ள வாய்ப்பிருக்கும். யாத்திரையின் மூலமோ பல விஷயங்களை ஏக காலத்தில் அறிந்துகொள்ள வாய்ப்புண்டு. சர்வகலாசாலையில், படித்த பெரிய அறிவாளிகள் - பண்டிதர்கள் - இருந்து போதிப்பார்கள். ஆனால் யாத்திரையிலோ படிப்பறிவே யில்லாத பாமரரிலிருந்து பெரிய படித்த மேதாவிகள் பலரும் நமக்கு அறிவு கொளுத்திகளாக அமைந்து விளங்கு கிறார்கள். ஒவ்வொருவருக்கும் மற்றவரிடம் காணமுடியாத அனுபவ அறிவு விளக்கம் தெரியவரும். இவ்விதமாகப் பலரிடமிருந்தும் அரிதில் கிடைக்கக் கூடிய அறிவு நலத்தை நாம் அடையமுடியும். அதுவும் நம் இந்திய தேசத்தில் இதற்கு வாய்ப்பு அதிகம். இமயத்திலிருந்து கன்னிவரை பல்வேறுபட்ட சமயாசாரங்கள், நாகரிகங்கள், பண்பாடுகள், பழக்க வழக்கங்கள், குண நல வேறுபாடுகள் உள்ளவர்களைப் பார்க்கிறோம். பழகுகிறோம். அதனால் எவ்வளவு பெரிய அறிவாளியாக இருந்தாலும் அறிவின் தேட்டத்தில் ஆர்வம் உடையவர்களுக்கு விஷயம் ஏதாவது கிடைத்துக்கொண்டே இருக்கும்; ஊற்றுக்கண்ணிலிருந்து தண்ணீர் வந்துகொண்டிருப்பதுபோல. ஆகவே யாத்திரையில் பலரையும் பார்க் கிறோம், பழகுகிறோம், கருத்துக்களைப் பரிமாறிக்கொள்ளுகிறோம். இதுவும் ஒரு கொள்வினை கொடுவினைதான். இதிலிருந்து படித்த விஷயங்களை அனுபவத்தில் வைத்துப் பார்க்கவும் வாய்ப்பேற்படுகிறது. ஆகவே மக்கள் ஒவ்வொருவரும் ஆயுளில் ஒருதடவையேனும் நீண்ட யாத்திரை செய்துவரவேண்டும். மேலும் பல தட்ப வெப்ப நிலைகளில் சென்று வருவதாலும் பல தீர்த்தங்களில் நீராடுவதாலும் நம்முடைய ஆரோக்கியம் வளரும். அதனால் ஆயுள் வளர்கிறது. எந்த நிலையிலும் எதையும் தாங்கக்கூடிய உடல் வலிமையும் மன வலிமையும் கொடுக்கிறது. உணர்ச்சி வேகம் பண்பாடெய்துகிறது. எதையும் ஆய்ந்து அமர்ந்து தெரிந்துகொள்ளும் பொறுமை ஏற்படுகிறது. யாத்திரை யினால் மனச்சாந்தி, சாந்தம், பொறுமை இவை உண்டாகின்றன. இவ்வித மாக நம்மை உருவாக்கிக்கொள்ள யாத்திரை அவசியம். குண நலமும் உண்மையும் தெய்வ நம்பிக்கையும், மக்களுக்குத் தொண்டு செய்வதில்

ஆர்வமும், ஏனைய பிறவும் கிடைக்கின்றன. பெரியோர்கள் தரிசனம் கிடைக்க வழி ஏற்படும். எல்லாம் செம்மையாகப் பெற்று வையத்தில் வாழ்வாங்கு வாழலாம். பொதுவாக யாத்திரையினால் நமக்குத் தெய்வத் திருவருள் பூரணமாகக் கிடைக்கும். பேரின்பமும் கிடைக்கும் என்று தவஞானிகள் கண்டுசொல்லி வைத்திருக்கிறார்கள். மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையாகத் தொடங்கினோர்க்குச் சற்குருவும் வாய்க்கும் என்று தாயுமானவ அடிகள் சொல்லியிருப்பதையும் இங்கு நினைவில் கொண்டு வருதல் நலம்.

யாத்திரை இருவகையாலும் மேற்கொள்ளுதல் உண்டு. வேடிக்கை யாகவும் பொழுதுபோக்காகவும் கருதிப்போதல் ஒரு வகை. க்ஷேத்திர யாத்திரை, தீர்த்த யாத்திரை, மூர்த்தி தரிசனம் கருதிச் சேறல் மற்றொரு வகை. இரண்டிலும் நமக்கு அநுபவ அறிவு பெற வாய்ப்புண்டு. ஒரு குறிப்பிட்ட பலனை இச்சித்து யாத்திரை செய்வதைவிட நிஷ்காமியமாகச் செய்வது மிக மேலானது. ஏன் என்றால் இறைவன் நம்முடைய செயல் ஒவ்வொன்றையும் பார்த்துக்கொண்டிருக்கிறான். அவனுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. அவன் செய்விக்க நாம் செய்கிறோம். இங்குக் காமியத்திற்கு இடமில்லை. காமியம் எழுவது மலச் சேட்டையினால். காமியத்தழுந்தியவர் கள் அதனால் வரும் சிறு நன்மைகளையும் பெருந்தீமைகளையும் அனுபவிக்க வேண்டும். ஆகவே இச்சை கூடாதென்பதென்க. இதனை மணிவாசகர் "வேண்டத் தக்க தறிவோய் நீ வேண்ட முழுதும் தருவோய் நீ......... வேண்டும் பரிசு ஒன்றுண்டென்னில் அதுவும் உன்றன் விருப்பன்றே" என்ற திருவாசகத்தில் குறித்துள்ளது ஊன்றி நோக்குதற்குரியது. வள்ளுவரும் "பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு" என அறிவிக்கிறார். 'நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே' என்பதாகச் செயலற்றுத் திருவருள் உணர்வோடு யாத்திரையில் ஈடுபடுவோமானால் அவனருளால் அனைத்துங் கைகூடும். இன்பம் செல்வம் எல்லாமும் அவனேயாகலின் நம் தகுதிக் கேற்ப ஆசை தீரக் கொடுப்பான். மூலபண்டாரம் வழங்குவான். நம்மையாளும் ஈசன் நினையாத முன்வந்து நிறுத்துவான். இறுதியாக அழியாத இன்பத்தை அளிப்பான்.

இவ்வளவு வளத்தையும் நல்கும் யாத்திரையை மேற்கொள்ளும் பொழுது காலத்தை வீணே கழிக்காமல் திருமுறையை ஓதலும், பிறரை ஓதச்செய்தலும், கேட்டலும், பிறரைக் கேட்பித்தலும் மிக மிக நல்லன. அப்பொழுதுதான் யாத்திரை பாரமில்லாமல் தெளிவாக எளிதாக இருப் பதைக் காணலாம். மக்கள் ஒவ்வொருவரும் தமது ஆயுட் காலத்தில் ஒரு முறையேனும் யாத்திரைசென்று திருவருள் நலம் பெற்று வையத்துள் வாழ்வாங்கு வாழ்வார்களாக.

நமது ஆசாரியப் பெருமக்கள் அக்காலத்திலே தலங்கள்தோறும் சென்றுசென்று பெருமானைப்பாடி வழிபட்ட உண்மைகள் எங்களுக்குப் பெரிதும் புலப்பட்டன. ‘ ஒரு பெரிய கூட்டுப் பிரார்த்தனை ’ என்று நான் சொன்னேன். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமும், முறுவலித்தார்கள். ‘ அப்பெரு மக்கள் சென்றவழியே ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமும் அடியேனைப்போன்ற பலரையும் அழைத்துக்கொண்டு இவ்வளவு பெரிய யாத்திரைபோகும் உண்மையைப்பற்றிப் பேசினோம். அது ஒரு முடிவில்லாதபேச்சு.

## கல்கத்தா வந்தது :

இங்கே நாங்கள் இறங்கினோம். காசிக்கு வேறுவண்டி மாற்ற வேண்டும். அவ்வண்டி இரவு மணி 8-15 க்குப் புறப்படும். அதுவரை தங்கும் விடுதியிலே (Retiring Room) தங்கினோம். கடும் வெயில். குளிர்ந்ததண்ணீரும் வெந்நீராயிற்று. வெப்பம் உச்சநிலையில் இருந்தது. இப்பொழுது நடுப்பகல். மாலை வந்தது. 3 மணி. கொதித்த சூடு அமர்ந்தது. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களும் திருமஞ்சனமாடி, வெளியே புறப்பட்டார்கள். பேலூர் சென்று இராமகிருஷ்ண மடாலயம், அங்குள்ள ஆலயங்கள் யாவற்றையும் பார்த்துவிட்டுக் கல்கத்தா நகரின் அதிஷ்டா தெய்வமான காளிக்கட்டத்துக் காளியைத் தரிசிக்கச் சென்றோம். சென்ற வழியெல்லாம் நகரப் பெருவணிகநிலயங்களும், பண்டகசாலைகளும், உலக வங்கிகளும், (Banks), சோலைகளும், உயரமான கட்டிடங்களும் மலிந்த தெருக்கள். காளிதரிசனம் முடிந்தது. மீண்டும் இரயிலுக்கு வந்தோம்.

## ஊர் விசாரணை :

கல்கத்தாவைப்பற்றி நினையாமல் இருக்கமுடியுமா? கல்கத்தா உலகப் பெருநகரங்களில் ஒன்று. ஹூக்ளி நதிக்கரையின் கீழ்கரையே கல்கத்தாப் பெருநகரம். ஜனத்தொகை அதிகம். கப்பல் ஏற்றுமதி இறக்குமதிக் கிடங்குகள் உள்ளன. நகருக்குள் கப்பல்கள் வரவும் போகவும் வசதியாக உள்ளது ஹூக்ளிநதி. ஒரு பெரிய இருப்புப்பாலம் இருக்கிறது. அந்தப் பாலம் வலுவானது. வனப்பு வாய்ந்தது. பார்க்கத் தகுந்தது. கல்கத்தா இரயிலடியில் பிளாட்பாரங்கள் இருக்கின்றன. அன்னை காளியின் அருள்தான் இன்று கல்கத்தாவைக் கண்கவர் வனப்பு வாய்ந்ததாகச் செய்திருக்கிறது.

காளிகட்டம் என்ற சிறு ஊர்தான் இன்று கல்கத்தாவாக விளங்கி நிற்கிறது. நல்ல வணிகவளம், ஞானவளத்திலும் தனக்கு ஒப்பின்றி விளங்குவது இந்நகரம். உலக சர்வதேச அரங்கில் ஒப்புயர்வற்று

கேதாரயாத்திரை: (கல்கத்தாவில்)



பேலூர் ஸ்ரீ இராமகிருஷ்ண மடாலயம்



ஸ்ரீ காளிகோவில் தரிசனம்

கேதாரயாத்திரை: (ஸ்ரீகாசியில்



குமாரசுவாமி மடத்தில் வரவேற்பு - கொலுக்காட்சி



ஸ்ரீ குமாரசுவாமி மடத்தில் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமும் யாத்திரா கோஷ்டியும்.

விளங்கிய சமயவீரர் விவேகாநந்தரையும், கீதாஞ்சலி மூலம் நோபல் பரிசுபெற்ற பேரறிஞர் இரவீந்திரநாத தாகூரையும், தேசிய ராணுவப்படை அமைத்த தீரர் சுபாஷ் சந்திரபோஸையும், விஞ்ஞான நல்லாராய்ச்சி மேதையான ஜகதீச சந்திரபோஸையும், சித்தரஞ்சன்தாஸ் போன்ற தேசிய வாதிகளையும் பெற்றுக் கொடுத்துப் பெருமிதம்கொண்டது வங்காளத்துள்ள இப் பெருநகரமே. வங்காளிகள் மொழிப்பற்று மிகுந்தவர்கள். நல்ல உழைப்பாளிகள். அறிவாளிகள். வங்காளிகளின் தேசப்பற்று வார்த்தை யளவில் அடங்காது. அவ்வளவு பற்றுள்ளவர்கள். தங்கள் தேசத்தில் சணல் தொழிற்சாலை, இஞ்சின் தொழிற்சாலை போன்ற எத்தனையோ தொழிற்சாலைகளால் தொழில்வளம் பெருக்கியிருக்கிறார்கள். டில்லிக்கு முன் இந்தியாவுக்குத் தலைநகரமாயிருந்தது. உலகப்பெரு வானவழிகளில் ஒன்றாகவும் இது அமைந்திருக்கிறது. தரைப்படை, கடற்படை வாகனங்கள் இங்கு உண்டு. வானவீதியிலே செல்லும் வெளிநாட்டு விமானங்களும் இங்கு வாராமற் போவதில்லை. அந்த அளவுக்கு இன்றியமையாத தளமாகவும் இருந்துவருகிறது இப் பெருநகரம். இப்படியெல்லாம் கல்கத்தாவைப் பற்றி ஓடியது எங்கள் சிந்தனை.

கல்கத்தாவில் டேராடூன் எக்ஸ்பிரசில் இரவு 8-10க்கு இரயிலேறினோம். வழியிலே அசன்சால் என்னும் தொழிற்பெருநகரமும் மற்றும் பலவும் இரவு நேரமாதலின் எங்களுக்குத் தெரியாமலே சென்றுவிட்டன. பொழுது விடிந்தது; கயாவை நெருங்கிக் கொண்டிருந்தது எங்கள் இரயிலும்.

## கயா :

அன்று வெள்ளிக்கிழமை. வழக்கம்போலத் திருமஞ்சனம். வழிபாடுகள் நடைபெற்றன. கயாவும் வந்தது. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் மௌனவிரதம் நிறைவேறியது. திருமுறைப்பாராயணம், திருமுறைச் சிந்தனை எல்லாம் வழியிலே நிறைவுற்றன. கயை பீஹார் மகாணத்தில் மாவட்டத் தலைநகரம். இந்துக்கள் பிண்டதர்ப்பணம் சிரார்த்தம் முதலியன செய்து பிதுரர்க்குக் கடன் கழிக்கும் பெருந்தலம். அதனோடு அங்கே சித்தார்த்தர் ஞானோதயம் உண்டாகிப் புத்தரானார். அந்தப் பகுதிக்குப் புத்தகயா எனப் பெயர் வழங்கப் பெறுகிறது. இந்துக்களைப் போலவே பௌத்தர்களும் ஏராளமாக இங்கு வருகிறார்கள்.

## டெஹ்ரி ஆன்சோனி :

சோணநதியெனப் பிரசித்திபெற்றது. இங்கு நதியின் அடித்தளத்திலிருந்து சோண விநாயகர் என்னும் சாளக்கிராமம் சுயம்புமூர்த்தி எடுக்கப் படுகிறது. நல்ல வாய்ப்பாக உள்ள மூர்த்தி கிடைத்துவிட்டால் இந்துக்கள் அதைப் பெரும்பாக்கியம் என்று சொல்லுகிறார்கள். ஆற்றின் குறுக்கே

அணைகட்டி, நீர்தேக்கி, ஜலமின்னுதாரம் உண்டாக்கி இருக்கிறார்கள் காகிதம், சிமிட்டு, பிஸ்கட், எருக்கள் முதலிய பல பொருள்களும் அங்கே தயாராகின்றன. நம் நாட்டு மக்கள் பலரும் அங்கே அலுவலில் இருக்கிறார்கள். 'சிமிட்டுத் தகடுகள்' செய்கிற தொழிற்சாலையிலே இரசாயன நிபுணராக இருக்கும், திரு. வி. ஆர். நடராசன் அவர்கள் இரயிலடியில் வந்து ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களைத் தரிசித்தார்.

## இலக்கியத்தில் கங்கை :

கங்கை ஓர் புண்ணிய நதி. தெய்விகத் திருநதி. தமிழ் மக்கள், தமிழ் நாடு என்றுமே கண்டு, அநுபவித்த திருநதி. 'குமரியொடு வட இமயத்து ஒருமொழி வைத்து உலகாண்ட சேரலாதன்' என்கிறது சிலப்பதிகாரத்து உரைப்பாட்டு. ஒரு மொழியால் (தமிழ் மொழி) பாரதநாடு முழுதுமே ஆண்டான் தமிழன் என்ற பெருமையும் இந்த இடத்தில் எங்களுக்கு நினைவு உண்டாயிற்று. வடஇமயம் வரைக்கும் ஆட்சிசெலுத்தினான் பழைய காலத் தமிழன். தமிழ்நாட்டு மூவேந்தர்களும் வட இந்தியாவைப் பிடித் தாண்டார்கள். கங்கை கொண்டார்கள். சோழநாட்டுப் பேரசன் 'கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி காவேரி' என்று பாடுகிறார் இளங் கோவடிகள். பாண்டிய மன்னனும் வடக்கே படையெடுத்தான். கங்கை யைக்கொண்டான். அந்தப் பெருமை நமக்கு என்றும் உண்டு. 'வட திசைக் கங்கையும் இமயமும் கொண்டு, தென்திசை யாண்ட தென்னவன்' என்று இனிக்கப் பாடுகிறார் இளங்கோவடிகள். சேரன் மட்டும் என்ன? இமயத்துக்குச் சென்றான், கல்லெடுத்தான். 'கங்கைப் பேரியாற்றுக் கடும்புனல் நீத்தத்தில் நீர்ப்படை செய்தான்'. இப்படியெல்லாம் இலக்கியங்களில் கங்கையைப்பற்றிய செய்திகளைக் காணலாம்.

## கங்கை தீர்த்தம் :

கங்கை புனிதத் தீர்த்தமாகக் கருதப்பட்டது அக்காலத் தமிழர்களா லேயே. 'கங்கைப் பேரியாற்றுக் கடும்புனல் நீத்தம், எங்கோ மகளை ஆட்டிய அந்நாள்' என்ற சிலப்பதிகார வரிகளுக்கு, 'தீர்த்தமாடியது ஒரு கதை' என்று எழுதுகிற அரும்பதவுரையைப் பார்க்கும்போது 'கங்கை தீர்த்தம்' என்ற குறிப்பைக் காணுகிறோம்.

'வெறிமலர்த் **தீர்த்தத்து** எறிபுனல் கங்கை' என்ற பிற்காலச்சோழர் கல்வெட்டுத் தொடரும் கங்கை புண்ணிய நீராடக்கூடிய தீர்த்தம் என்றே சொல்லுகிறது.

## ஆழநீர் :

கங்கையின் நீர் ஆழமான நீர்; தெளிவான நீர். இதனை 'ஆழநீர்க் கங்கை அம்பி கடாவிய' என்ற கம்பர் வாக்கினோடும், 'தெள்ளுநீர்க் கங்கை' என்ற இளங்கோ மொழியினோடும் ஒப்பிட்டது எங்கள் சிந்தனை.

## ஜீவநதி :

நல்ல கோடையிலும் கங்கையிலே தெளிந்த நீர் ஓடிக்கொண்டிருக்கிறது. ஆகவேதான் அது ஜீவநதி எனப்படுகிறது. இன்று நேற்று தொடங்கியல்ல - எத்தனையோ ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய். புறநானூற்றிலே குமணனைப் பெருஞ்சித்திரனுர் பாடுகிறுர். அப்போது இந்தக் கருத்தைப் புலவர் வெளியிடுகிறுர்;

" வளமழைமாறிய என்றூழ்க்காலை, மன்பதையெல்லாம் சென்றுணக் கங்கைக் கரைபொரு மலிநீர் நிறைந்து தோன்றியாங்கு "

என்பது அந்தச் சொல்லோவியம். எவ்வளவு அருமையாக அழகாக இந்தக் கருத்தை வெளியிடுகிறுர்!.

## 'வாரணவாசிப்பதம்' :

கங்கையைப் பற்றிய கருத்தோடு, ஒட்டிக் காசியும் ஓடி வரத்தான் செய்யும். காசியை வாரணவாசி என்பது தமிழ் வழக்கு. காசியில் இருப்போர் பிறர் வருத்தத்தையும் தன் வருத்தம் போற்கருதக்கூடியவர் என்கிறது கலித்தொகை என்ற சங்க இலக்கியம். 'வாரணவாசிப்பதம்' என்கிறது அக்கலிப்பாடல். திருக்கோவையாரிலே 'மலயத்து நின்றும்' என்கிற 34ம் பாடல் உரையிலே பேராசிரியர் 'மலயத்து வாழ்வார் பிறர்க்கு வருத்தம் செய்யாராகலின்' என்று எழுதுகிறுர். 'பிறர் வருத்தத்தையும் தன் வருத்தம்போற் போற்றுக்கால் அறிவு படைத்ததனுல் என்ன பயன் இருக்கிறது?' என்று திருவள்ளுவர் கேட்கிறுர். ஆகவே அந்தப் பண்பாட்டிலே ஊறிய பழம் பதிகளாகத் தெற்கே பொதியமும் வடக்கே கங்கையும் பண்டுமுதல் இருந்தன என்ற பெருமை நமக்கு என்றும் உண்டு.

## கங்கைகொண்டான் :

தமிழர்கள் வடக்கே சென்று கங்கையைக் கொண்டதை ஒரு பெரு வீரச்செயலாக நினைத்தனர். சோழன் இராசேந்திரன் வடக்கே கங்கை வரை படையெடுத்து வென்றுன். அதன் வெற்றிப் பெருமிதம் அவனை ஆட்கொண்டது. கங்கைகொண்ட சோழபுரம் என்ற ஊரைத் தென்னுட்டில் நிறுவினுன். கங்கைகொண்ட சோளேச்சரம் கட்டினுன்.

பாண்டியரில் 'கங்கைகொண்டான்' ஒருவனும் இருந்தான். அவன் பெயரால் இன்றும் ஒரு ஊர் இருக்கிறது. தஞ்சைச் சிவகங்கையைத் தெரியாதார் யார்? 'சோழகங்கை' ஏரியைத் தோண்டியவன் ஒரு சோழன். இவ்வாறு, பழைய காலமுதல் கங்கையோடு தொடர்புகொண்டு விளங்கு கிறது நம் தமிழகம்.

## கங்கைப் பாலம் :

கங்கையை இரயில் பாலத்தின் வழியாகக் கடந்தபோது எங்கள் எண்ண அலைகள் இப்படியெல்லாம் வீசின. கங்கையைக் கடக்க இப் போது பாலம் இருக்கிறது. ஆனால் செங்குட்டுவன் வந்தபோது நூற்றுவர்கன்னர் என்ற வடக்கேயிருந்த அரசர் மரங்களையும் படகுகளையும் கொணர்ந்து கரையேற்றியதைச் சிலப்பதிகாரம் சொல் கிறது. இராம இலட்சுமணர்களை 'ஆழநீர்க்கங்கை அம்பிகடாவிக்' கரை யேற்றிய குகனைப்பற்றிக் கங்கைப்படலத்தில் கம்பராமாயணம் கூறுகிறது. பாலத்தின் வழியே போகும்போது இப்படியும் ஒரு சிந்தனை கிளைவிட்டது. கங்கையைக் கடந்தோம்.

## காசிச் சிறப்பு :

காசி என்ற வடசொல்லுக்கு மகாபிரகாசம் (பேரொளி) என்று பொருள். அந்தப்பேரொளி பேரின்பத்தைக் கொடுக்கவல்லது. பேரின்பம் திருவடிப்பேரின்பம். ஆகவே காசி என்ற சொல் பேரின்பத்தைத் - திரு வடியைச் - சிவபெருமானைக் குறிப்பதாக அமைந்திருக்கிறது. ஊரமைப்பு யகாரவடிவம் என்று சொல்லப்படுகிறது. கங்கை சுற்றிச் செல்கிறது. பன்னிரண்டு ஜோதிர்லிங்கங்களில் இதுவும் ஒன்று.

## கருடனும் பல்லியும் :

காசியிலே கருடன் வட்டமிடுவதில்லை. பல்லியும் சொல்லுவதில்லை என்று சொல்லுகிறார்கள். நாங்கள் தங்கியிருந்த குமாரசுவாமி மடத்தில் பல்லிகள் இருந்தும் ஒலி இல்லை. அதற்கு ஒரு கதையும் சொல்லுகிறார் கள். இராமேசுவரத்தில் இராமர் சிவலிங்கப் பிரதிட்டைக்கு நல்ல சிவ லிங்கம் ஒன்று எடுத்துவரும்படி அநுமனுக்கு ஆணையிட்டார். தேடி வரும் போது காசி ஒரு பெரிய சிவாலயம். அங்கே ஏராளமான இலிங்க மூர்த் தங்கள் கிடைக்கும் என்று சொன்னார்கள். காசியை அடைந்தனர். சகுனங்களிலே மிகவும் மேலானதாகக் கருதப்படும் கருட தரிசனம் ஆயிற்று. பல்லியும் சொல்லிற்று. இந்த இரண்டும் தான்வந்த காரியத் துக்கு அனுகூலமாக இருக்கவே துணிந்து விசுவநாதரையே எடுத்துச் செல்லத் தீர்மானித்தான் அநுமன். பெருமானை வாலால் சுற்றிப் பெயர்த்

தெடுக்கவும் முற்பட்டான். பயிரவர் பாதுகாப்பில் உள்ளது காசி. பயிரவர்க்கு இச்செய்தி எட்டியது. பயிரவருக்கும் அனுமனுக்கும் பெரும் போர் மூண்டது. முடிவிலே அநுமன் தோற்றான். தன் தவறுணர்ந்தான்; மேலே சென்றான். இவ்வளவும் நடப்பதற்குப் பல்லியும் கருடனும் துணை செய்த செய்தி பயிரவர்க்கு எட்டிற்று. கோபங்கொண்ட பயிரவர் காசி எல்லையிலே கங்கையைத் தாண்டிக் கருடன் வரக்கூடாது; பல்லியும் ஊமையாகப் போகட்டும் என்று சபித்துவிட்டார். கருடனே காசி எல்லைக் குள் பறக்காது என்ற நம்பிக்கையோடுதான் குமரகுருபரருக்கும் கருடன் பறக்கும் எல்லையில் நிலம்தருவேன் என்று நவாப் தைரிய மாகக் கூறினான். ஆனால் அருள் பெற்றவர்க்கு எதுவும் செய்யமுடியும் என்பதை அவன் உணர்ந்தானில்லை; மற்றப் பகுதிகள் விளக்கம் தேவை யில்லை.

## திருமணம் எப்படி ?

திருமணங்கள் இரவில் நடைபெறுகின்றன. நடைமுறையில் பெரும் பாலும் நமக்குப் பழக்கமான முறைதான். பாணிக்கிரஹணம், மணமகள் நெற்றியிலே மணமகன் திலகமிடும் ' திலக் ' என்ற பழக்கமும் இருந்து வருகின்றன. எந்த வயதுவந்த பெண்ணுக்கும் ஆண்கள் யாரும் திலக மிட்டுவிட முடியாது. அது திருமணத்திலே முக்கியமான சடங்கு. ஆதலால் மணமகனைத் தவிர வேறுயாரும் செய்யக்கூடாது. திருமங்கலிய தாரணம் என்பது அங்குப் பழக்கத்தில் இல்லை. மற்ற வைதிகக் காரியங்கள் எல்லாம் அந்த ஊர்ப் பண்டிதர்கள் செய்து வைக்கிறார்கள். அவரவர் தகுதிக்கேற்ற ஆடம்பரமான ஊர்வலங்கள் உண்டு. வரவேற்பும் நடைபெறும். ஆனால் பெரும்பாலும் கங்கை நதிக்கரையிலே இது போன்ற காரியங்களுக்காக விடப்பட்டிருக்கும் பெரிய படகுகளை வாட கைக்கு எடுத்துக்கொண்டு மேல் தளத்திலே கூடாரம் அமைத்து, அலங் காரம் செய்து, மணமக்களை இருத்தி, ஆடல்பாடல், இன்னிசை முதலியன நிகழ்த்தப்பெறும். கல்யாணம் விசாரிக்கவருவோர் கீழ்த்தளத்தில் சிற்றுண்டி அருந்தி மேல்தளத்திலே நடைபெறும் இசை நிகழ்ச்சியிற் கலந்துகொண்டு சந்தன தாம்பூலம் பெற்றுப்போவர். நம் நாட்டிலேயும் கரம் பற்றுதல் உண்டு. ஆண்டாள் வாக்கிலும் "கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழி நான்" என்ற பகுதி இதனைச் சித்திரிக்கும்.

காசி ஸ்டேஷன் வந்தது. அதையும் கடந்து 'பனாரஸ் கண்டோன் மெண்ட்' ஸ்டேஷனில் இறங்கினோம். முற்பகல் 10-45 மணி. ஸ்ரீமத் காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் ஆணைப்படி ஏஜண்ட், திரு. கல்யாணசுந்தரம் பிள்ளை வந்திருந்தார்கள். ஏற்பாடுகள் சிறப்பாகச் செய்துவைக்கப் பெற்றிருந்தன. இரயிலடியில் காசியைச்சேர்ந்த தொழி லதிபர் திரு. முத்து வீரப்ப முதலியார் அவர்கள், பிர்மஸ்ரீ சூரியநாராயண

சாஸ்திரிகள் அவர்கள், மற்றும் பல அன்பர்கள் மாலை மரியாதைகளோடு வரவேற்றார்கள். வந்திருந்த அன்பர்களோடு ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்கள் அளவளாவிக் கொண்டிருந்தார்கள்.

## வரவேற்பு :

நடுப்பகல் 12-மணிக்குமேல் குமாரசாமி மடத்துக்கு ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானமவர்கள் எழுந்தருளியானார்கள். ஸ்ரீலஸ்ரீமகாசந்நிதானம் இருக்க வசதி செய்யப்பட்டிருந்தது சடையப்பமுனிவர் கட்டிய குருமடம். தெருக் கடைசியிலே பெரிய வரவேற்பு. எங்கும் தோரணங்கள்; ஆலவட்டங்கள்; வரவேற்புக் கொடிகள்; மேளம்; இப்படியெல்லாம் இருந்தது வரவேற்பு. கொலுவும் அமைக்கப்பெற்றிருந்தது; தருமபுர ஆதீனம் சென்னைப் பிரசார நிலையத் தலைவர் வித்துவான், ஸ்ரீமத் சோமசுந்தரத்தம்பிரான் சுவாமிகள் ஆதீன முறைப்படி வழிபாடு நிகழ்த்தினார்கள். பின்னர் ஒரு வரவேற்பு காசிமடத்தில் கல்யாணசுந்தரம் பிள்ளை அவர்களால் வாசித்துக்கொடுக்கப்பட்டது. காசி இந்துப் பல்கலைக்கழகம், சித்தாந்தப் பேராசிரியர் ஸ்ரீ சிவராமன் பொதுமக்கள் சார்பில் ஒரு வரவேற்புரை நிகழ்த்தினார்.

## வரவேற்புரையில் :

“ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்கள் ஐந்தாண்டுகளுக்கு முன்பு காசிக்கு எழுந்தருளி அருளாசி வழங்கினார்கள். இப்பொழுது யாத்திரை மிகப் பெரியது. வழியில் இங்கு எழுந்தருளி விசுவநாதர் தரிசனம் செய்து நமக்கும் அருளுரை வழங்குவது போற்றுதற்குரியது. இது நம் தவப்பயன். இரயில் பிரயாணத்தால் மிக்க களைப்புற்றிருப்பார்கள். மற்றொருநாள் வந்து அருளுரை கேட்டுத் தெளிவோம். அவர்கள் யாத்திரை வெற்றிகரமாக முடியவேண்டும். இந்த ஞானயாத்திரை ஞானவெற்றியைக் கொடுத்தருளுமாறு ஸ்ரீ கேதாரீசுவரரை வேண்டுதல் நம் கடமை” என்று ஸ்ரீ சிவராமன் அவர்கள் கூறினார்கள். வரவேற்பு விழா முடிந்தது. வரவேற்பு விழாவுக்கு ஸ்ரீ காஞ்சி காமகோடிபீடம் ஸ்ரீமத் சங்கராச்சாரிய சுவாமிகள் அவர்கள் பிரதிநிதி, நாட்டுக்கோட்டை நகரத்தார் சத்திரம் ஏஜண்டுச் செட்டியார் முதலிய பலரும் வந்திருந்தார்கள். வந்திருந்தோருக்கு அன்று மாகேசுவரபூஜை சிறப்பாக நடைபெற்றது.

## மாடியில் இருந்தோம் :

மாலைநேரம். கல்யாணசுந்தரம் பிள்ளை வந்தார். காசி மடத்தின் காசி நிர்வாகத்தைப்பற்றிய பேச்சு தொடங்கியது. ‘நல்ல காற்று வாங்கலாமே; மாலை நேரத்திலே கங்கைக் காட்சியும், நகரக் காட்சியும்

மிக அழகாக இருக்கும். மேல் தளத்திலிருந்து இரண்டினையும் பார்க்க வசதியாக இருக்கும் என்று விண்ணப்பித்துக்கொண்டார். ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானமவர்களோடு மற்றவர்களும் மேலே சென்றோம்.

## சமர்த்துப்பிள்ளை :

கங்கையிலுள்ள பல கட்டடங்களும் கண்களுக்குப் புலனாயின. பிள்ளை ஒரு சமர்த்தர். அங்கே போனதும் எதிர்ப்புறத்திலே காசிமடத்தின் கட்டிடங்கள் பழுதுபார்க்கப் பெற்றதையும், குமாரசாமி மடத்தின் சில பகுதிகள் பழுதுபார்க்கப்பெற்றிருப்பதையும் ஒவ்வொன்றாகக் காட்டி வந்தார். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் ஐந்து வருடங்களுக்குமுன் வந்திருந்ததைவிட இப்போது பலபல பகுதிகளும், பல பெருங் கட்டிடங் களும் திருத்திக் கட்டப்பெற்றிருந்தன. அப்போதிருந்ததைவிட இப்போது வருமானமும் உயர்ந்திருப்பதாகச் சொன்னார். இவையெல்லாம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகளுடைய சீரிய நிர்வாகத்தையும் வெளிப்படுத்துவதாயிற்று.

“ இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன் கண் விடல் ”

என்ற திருவள்ளுவருடைய திருவாக்குக்கு இலக்கியமாக இருக்கிறது இவ்வாட்சி. ஆட்சியின்சிறப்பால் ஸ்ரீலஸ்ரீ அருணந்தித்தம்பிரான் சுவாமிகள் அவர்களைப்பற்றி எங்களுடைய பேச்சுத் தொடர்ந்தது. ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானமவர்கள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களை அப்பூதி அடிகளோடு ஒப்பிட்டு உயர்த்திப் பேசினார்கள்.

## அப்பூதி அடிகளும்
## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளும் :

‘ அப்பூதி அடிகள் அடியார்க்கு அடியாராக தன் குருநாதனாக ஏற்றுக் கொண்ட திருநாவுக்கரசருடைய திருப்பெயரைத் தமது மக்கள், உடைமைகள் (சரம், அசரம்) எல்லாவற்றுக்கும் சூட்டி, கண்டும் கேட்டும் பேசியும் உபாசனைசெய்தார். ஆனால் நமது தம்பிரான் சுவாமிகள் அவர்கள் மூலப்பொருளையே எட்டிப் பிடித்துவிட்டார்கள். மாடம், மாளிகை, உபயோகப் பொருள்கள், பெட்டி, கண்ணாடி எங்கும், பல தலங்களின் முன்னிடம், மடாலய முகப்பு எங்கும் சிவ சிவ நாம மந்திரம் தீட்டியிருக்கிறார்கள். எங்கும் சிவ சிவ ஒளி விளக்குகளின் மாட்சி. சுவாமிகள் இருக்கும் இடங்களிலெல்லாம் சிவ சிவ நாம ஒலியே முழங்கி யிருக்கும். உயிர்ப்பும் சிவ சிவ ஒலி பேசும். இது திருமந்திரத்தினுடைய ஒரு இலக்கிய நிகழ்ச்சி. அந்தப் பாடல்,

" சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரு மாவர்
சிவசிவ என்றிடச் சிவகதி தானே "

என்பது.'

## திருமூலரும் கேதாரமும் :

இப்பொழுது நினைவுக்கு வருகிறது ஒன்று. நாம் இப்பொழுது கேதாரயாத்திரை செல்வதற்குரிய முதற் படியில் இருக்கின்றோம். நமக்கு வழிகாட்டிகள் நமது ஆசாரியப்பெருமக்கள். நந்திகணங்களில் ஒருவரான திருமூலர் நாம் செய்த தவப்பயனுகத் தென்னுட்டுப் பொதிகையிலிருக்கும் அகஸ்தியரைக் கண்டு சிலநாள் அவருடன் தங்கியிருந்து வரக் கயிலையி லிருந்து புறப்பட்டார். கேதாரதரிசனம் செய்துகொண்டு, காசியில் கங்கை யாடித் தரிசனம் செய்துகொண்டு திருப்பருப்பதம் காளத்தி வழியே தென்னுடு சென்ருர்.

## நாவரசரும் கேதாரமும் :

தென்னுட்டிலிருந்து மற்றொரு உறைப்புடைத் தொண்டர் - நாவரசுப் பெருந்தகை, 'ஆளும் நாயகன் கயிலையில் இருக்கை கண்டு அல்லால் மாளும்இவ் வுடல்கொண்டு மீளேன்' என்ற உறுதிகொண்டு புறப் பட்டார் கால்நடையாக. காளத்தி நீங்கினுர். பருப்பதம் கண்டார்; தெலுங்கு நாடு கடந்தார்; கன்னடம் தாண்டினுர்; வனங்கள் நதிகளைக் கடந்து, தீர்த்தங்கள் ஆடினுர்; விந்தியத்தைக் கடந்தார்; மாளுவ நாட்டையுங் கடந்தார்; இலாடநாடு கடந்தார்; மத்திய பாரதநாட்டை வந்தடைந்தார்; பல நாடுகளையும் கடந்து இந்தப் புனிதமான வாரணுசியில் வந்தடைந்து நகர் நுழைவுக்கு முன்னே கங்கையாடித் தூய்மை செய்துகொண்டு வந்தார்; வாரணுசியிலே வழிபட்டார்; கங்கைக்கரை வழியே மலையடி வாரம் வந்து சேர்ந்தார்; மனிதர்கள் சேர்தற்கரிய மலைவழியிலே மலைக் காமல் சென்ருர். காய், கனி, கிழங்குகளை உட்கொண்டார். கால் தேய்ந்து, கைதேய்ந்து, உடல் முற்றும் தேய்ந்தது. ஆனுல் உளம் மட்டும் தேயாத நிலையிலே ஊர்ந்து சென்றது அந்த அன்புருவம். கயிலைவழியிலே கேதாரம் சென்றிருக்கவேண்டும். நமக்கு அப்பெருமான் ஒரு வழிகாட்டி.

## ஆளுடையபிள்ளையும் : ஆளுடையநம்பியும் :

திருஞானசம்பந்தர் காளத்தியிலிருந்து அன்புமீதூர நினைத்தார் கேதா ரத்தை; நெகிழ்ந்தார். திருப்பதிக இசை திருந்தப் பாடினுர். அவர் வடக்கே சென்ருரில்லை. காரணம் சேக்கிழார் சொல்கிருர், வடக்கும் மேற்கும் தமிழ் வழக்கு அங்கு நிகழாததாலேயே சென்ருரில்லை. ஆனுலும் ஞான தானங்கள் பலவற்றின் சிறப்பும் அப்பெருமானை இசைபாடச் செய்தது.

கேதாரயாத்திரை (ஸ்ரீ காசியில்)



கேதாரேஸ்வரர் வழிபாடு



ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் கங்கையில் உள்ள
பல கட்டங்கள் தரிசனம் செய்தல்



ஸ்ரீவிஸ்வேஸ்வரர் விமானம்

பத்தாண்டு ஆட்சி விழா விஸ்வநாதருக்குப் பாலபிஷேகம்

தேவ மகளிரோடும் தேவர்களும் போற்றிசைக்க, வடகயிலைநோக்கி விற்றிருந்தார்; திருப்பதிகத் தீந்தமிழ் வெளிவந்தது. அத்தலங்களைப் பற்றிய அப்பதிகங்களிலே 'என்பரால்' என்று தாம்கேட்டு உளம் கனிந்த செய்திகளையெல்லாம் திருவருளால் தொகுத்து நமக்குத் தந்திருக்கிறார். சுந்தரமூர்த்தி சுவாமிகளும் காளத்தியிலிருந்தே கேதாரத்தை நினைத்துப் பாடியதாகப் பெரியபுராணம் சொல்லுகிறது. இப்படி முன்னோர்கள் சென்ற வழியிலே நாமும் சொல்லுகிறோம். பேச்சிலே நேரம் தெரியவில்லை, இருட்டியது. நாங்களும் கீழே இறங்கினோம். 'நேசரைக் காணா விடத்தே' என்ற மூதுரையை மேலே சொல்லிய பேச்சு எங்களுக்கு நினைப்பூட்டியது.

## கங்கைநீராட்டு :

மறுநாள் ஏப்ரல் 18உ சனிக்கிழமை. வைகறை விடியலில் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் கங்கை நீராட்டுக்கு எழுந்தருளினார்கள். நாங்களும் உடன் சென்றோம். நேரம் அமைதியான நேரம். கங்கைப் படியிலே - கேதாரக் கட்டத்திலே - நாங்கள் இறங்கினோம். காசிமடத்தின் நிர்வாகத்தில் அமைந்தது அந்தக்கோயில். திருமுறை ஒலி காற்றிலே மிதந்து வந்து எங்கள் செவிகளில் பாய்ந்தது. ஒலிபெருக்கியின் வாயிலாக தண்டபாணி தேசிகரின் இனிய குரல் வளம் அங்கே பரவியது. ஆதீனச் சார்பிலே தயாரிக்கப்பெற்ற இசைத் தட்டுகளின் நாத ஒலி அது என்பது தெளிவாயிற்று. திருமுறை நினைவோடு கங்கையிலே இறங்கி நீராடினோம். எங்களுக்கு முன்னேயே ஆணும் பெண்ணுமாக பலரும் அங்குவந்து முழுகிக் கொண்டிருந்தார்கள். நீராடிக் கொண்டிருக்கும்போதே கேதாரேசுவரர் ஆலய வழிபாடுகள் நிகழ்ந்தன.

## 'கேதாரன் அடித்தலமே'

இந்த நிகழ்ச்சி "களித்துக் கலந்ததோர் காதற் கசிவொடு காவிரிவாய் குளித்துத் தொழுது முன்னின்ற இப்பத்தரைக் கோதில் செந்தேன் தெளித்துச் சுவை அமுது ஊட்டி, அமரர்கள் சூழிருப்ப அளித்துப் பெருஞ்செல்வமாக்கும் ஐயாறன் அடித்தலமே" என்ற அப்பர் தேவாரத்தை எங்களுக்கு நினைப்பூட்டியது. காவிரியைக் கங்கையாகவும், ஐயாறன் அடித்தலத்தைக் கேதாரன் அடித்தலமாகவும் நாங்கள் சிந்தித்து மகிழ்ந்தோம். இது அந்தக் காட்சிக்கு இலக்கியப் பாடலாகக் கண்டு பாடி அமைத்ததோ? எங்கே இப்படிப் பாடிப் பாருங்கள்.

## சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால் :

அனுட்டானுதிகளை முடித்துக்கொண்டு அந்தப் படிகளின் வழியே ஏறினோம். அது, "பேணுதத்துவங்கள் என்னும் பெருகு சோபனமேறி" என்று சேக்கிழார் சொல்லுவதுபோல இருந்தது எங்களுக்கு. மேற்படியிற்

சென்றதும் கேதாரேசுவரரைக் கண்டோம். ஆர்வமிகுதியோடு கங்கை நீரைக்கொண்டு சென்றோம். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் அன்பு வழிபாட்டை ஏற்றுக்கொண்டு இன்பக்காட்சி நல்கினர் கேதாரேசுவரர். கேதாரகௌரி, விநாயகர், கார்த்திகேயர், பயிரவர் முதலிய எல்லா மூர்த்தங்களையும் வழிபட்டோம். வெளியிலே கோயில் திருச்சுற்றிலே ஆண்களும் பெண்களுமாக பக்திப் பெருவெள்ளத்திலே மிதப்பதைக் கண்டோம். ஒருசாரார் மௌனச் சிந்தனையோடு கண்மூடி யோகத்திருந்தார்கள். ஒரு சாரார் அக்குமணிகொண்டு அஞ்செழுத்தோதி ஜெபஞ் செய்து கொண்டிருந்தார்கள். ஒரு சாரார் கொட்டுமுழக்கு எல்லாவற்றையும் வைத்துக்கொண்டு பெருமான் புகழ்பாடிக்களிசிறந்து இருந்தார்கள். ஒரு சாரார் பெரியவர் ஒருவரைவைத்துப் புராணபடனம் செய்யக்கேட்டு மனமுருகி நின்றார்கள். இவ்வாறு எல்லாம், எங்கும் சிவக்காட்சியாகவே இருந்தது. திருப்பள்ளி யெழுச்சிக்காலத்திலே நிகழ்ந்த இச் சித்திரம், இன்னிசை வீணையர், யாழினர் ஒருபால்? என்ற திருவாசகச் சிந்தனையை எழுப்ப, குமாரசாமி மடம் சென்றடைந்தோம்.

'நாம் பெற்ற இன்பம் இவ்வையகம் பெறுக' என்றது போலும் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் திருவுள்ளம். ஆதீனத்திருமடத்தைச் சேர்ந்த எல்லா அன்பர்களுக்கும், காசிக்கயிறும், திருநீற்றுப் பிரசாதமும் அனுப்ப உத்தரவாயிற்று. உத்தரவும் செயலில் நடந்தது.

## காசியிலே பத்தாண்டு விழா

### அப்பர் குருபூசை :

தவமும் தவம் உடையார்க்கே ஆகும் அல்லவா ? (1945) சித்திரை சதயத்தன்று அருளாட்சி ஏற்றார்கள் நமது ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்கள். அந்தச் சித்திரை சதயம் இவ்வாண்டு காசியிலே 18—4—1955 அன்று நிகழ்வதாயிற்று. சமயாசாரியரிலே அப்பர் பெருமானுடைய குருபூசைத் திருநாள் அன்று. இது ஒரு பெரிய வாய்ப்பு. நிற்க,

### திட்டம் மாறியது :

18—4—1955 அன்று பிரயாகைக்கு எழுந்தருளிக் கங்கை எடுத்து வருவதாகத் திட்டம். முதல் நாளிரவு நித்திரைக்குப் போகுமுன் ஏதோ ஒரு உணர்ச்சி எங்களைத் தமிழ்ப் பஞ்சாங்கத்தைப் புரட்டச்செய்தது. அதிலே 18—4—1955 அன்று சித்திரைச் சதயம் என்று போடப்பட்டிருந்தது. எங்களுக்கு ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களின் பத்தாவது ஆண்டு

கேதாரயாத்திரை: (ஸ்ரீகாசியில்)



ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் பத்தாண்டு ஆட்சிவிழா
அன்னம்பாலிப்பு

ஸ்ரீ காசி கேதாரேஸ்வரர் ஆலயத்தில்



ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களும்
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களும்.



ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள்
திருவேணி கட்டத்தில் திருமஞ்சனம்.



ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் சுத்த கங்கை எடுத்தல்

ஆட்சி நிறைவு, மறுநாள் வருவது அப்போதுதான் தெரியவந்தது. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களிடம் தெரிவித்துக்கொண்டோம். மறுநாள் பயணம் நின்றது. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களின் திருவுளத்திலே ஒரு சிறு சோர்வு. காரணம் அப்போது காசி பண்டாக்கள் உத்தரப்பிரதேசத்தில் நிறைவேற்றப்பட்ட அரிஜன ஆலயப்பிரவேசத்தை எதிர்த்து உயர்நீதி மன்றத்திலே வழக்கிட்டிருந்த காரணம். விசுவநாதரை முந்திய வருஷங் களைப்போல எல்லோரும், ஜாதி இந்துக்களாக இருந்தாலும், தொட்டு வழிபடப் பண்டாக்கள் அநுமதிக்க மறுத்துவிட்டிருந்தார்கள். வாயிலில் பண்டாக்கள் காவல். எல்லோரும் பெருமானை வெளியிலிருந்தே தரிசித் துக்கொள்ளவேண்டும் என்ற நிபந்தனை. நல்ல விழா. அதுவும் தருமை யிலே இருந்திருந்தால் பெருமையோடு பெருவிழாவாகக் கொண்டாடப் படவேண்டியது. ஏதோ புண்ணியவயத்தால் காசியிலே கொண்டாடும் படியான வாய்ப்பு. " பண்டாக்கள் பிணக்கொழிந்தால் பரமன் வழிபாடு நமக்குக் கிட்டும். எல்லாவற்றிற்கும் ஈசனருள் நமக்கிருக்கிறது. எதற்கும் யோசிக்கவேண்டாம். நல்ல - பெரிய அபிஷேக ஆராதனைகளுக்கு ஏற்பாடுகள் நடக்கட்டும். விசுவநாதர் எழுந்தருளியுள்ள திருத்தொட்டியில் பாற்கடல் பொங்கிவழிய வேண்டும், கல்யாணசுந்தரம்பிள்ளை வரட்டும்; அபிஷேக ஆராதனைகளுக்கும், அடியார்களுக்கு அன்னம்பாலிப்புக்கும், மாகேசுவரபூசைக்கும் ஏற்பாடுகள் நிகழட்டும் " என்று உத்தரவிட் டார்கள். கல்யாணசுந்தரம் பிள்ளையும் வந்தார். கட்டளையைச் சிரமேற் கொண்டார். ஏற்பாடுகள் விரைந்து நடைபெற்றன.

## *திருவருள் துணை :*

18—4—1955 விடியல் 4 மணி. திருப்பனந்தாளிலிருந்து கேதார ஓதுவாமூர்த்திகள் வந்துநின்றார். இதுவரை எங்களோடு ஓதுவாமூர்த்தி கள் எவரும் வரவில்லை. பெரியவிழாவுக்குத் திருமுறை ஓதக் கேதாரமே வந்துவிட்டது. எல்லாம் எதிர்பாராத நிகழ்ச்சி. திருவருள் வாய்ப்பு. காலையில் வழக்கம்போலக் கங்கை நீராட்டும், கேதாரேசுவரர் வழிபாடும் நிகழ்ந்தன. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில் வழிபாட்டுக்குவரும் செய்தி தெரிந்த பண்டாக்கள் மனமகிழ்வோடு அநுமதி அளித்தார்கள். ஆனால், அதில் ஒன்று; ' சாது மஹராஜ், படேமகந்த் அவர் ஒருவர் மாத்திரம் பெருமானைத் தொட்டு வழிபடலாம். மற்றையோர் கூடவந்த எவராயினும் உள்ளேவரக்கூடாது. இதைமாத்திரம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களிடம் தெரிவித்து உத்தரவு வாங்கிவிடுங்கள். நாங்களும் உடன் இருந்து எல்லா உதவிகளையும் செய்துகொடுக்கிறோம் ' என்றார்கள். இதைப் பெருமானின் கருணைத்திறமென்றுசொல்லாமல் வேறு எப்படிச் சொல்வது? வேண்டியார் வேண்டியாங்கு அருள்வழங்கும் வள்ளலல்லவா அவர் ! ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களின் பிரார்த்தனை திருச்செவியில் ஏறியது.

அழைக்கிறார், சென்றோம்; வழிபட்டோம். கேதாரநாதர் ஆலயத்திலும், விசுவநாதர் ஆலயத்திலும் பெருங்கூட்டம். எல்லோரும் தரிசித்தார்கள். வழிபாடு முடிந்து குமாரசாமி மடத்தில் அடியார்களுக்கு அன்னம்பாலிப்பும் மாகேசுவரபூசையும் நிறைவெய்தின. இவ்வாறு ஆடம்பரமின்றி வைதிக நெறி சிறக்கப் பத்தாண்டு விழா கொண்டாடப்பெற்றது.

வழக்கம்போல் நாள்தோறும் கங்கை நீராட்டும் கேதார நாதர் வழிபாடும் நடைபெற்றன. சப்தரிஷிபூஜை, அர்த்தசாமதரிசனம் நிகழ்ந்தன.

மறுநாள் அலகாபாத் சென்றோம். கங்கை நீரைக் குடங்களில் அடைத்துக்கொண்டோம். பிரயாகையில் நீராடினோம்.

## *கங்காபாலியும் சாது மஹாராஜும் :*

அலகாபாத்திலிருந்து ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில் உந்தூர்தியில் காசிக்கு வந்தார்கள். மற்றையோர் இரயில் மூலம் வந்தார்கள். மற்றவர்களோடு ஏராளமாக சுத்த கங்கை ஏந்திய குடங்களும் கொண்டுவரப் பெற்றன. காசியிலிருந்து 20 கல்லுக்கப்பால் கஜ்ரா ரோடு என்னும் நிலயத்தை விட்டு வண்டி புறப்பட்டது. நிலய எல்லை கடந்து வரும் பொழுது ஒரு பெட்டி தடம் புரண்டது. காசிக்கு வரவேண்டிய வண்டி உரிய காலத்தில் வரவில்லை. எங்களுக்குப்பெருங்கவலை. காசி நிலையத்திற் கேட்டால் அரைகுறைச் செய்தியைச் சொல்லுகிறார்கள். வீண் பீதியைத் தவிர்க்க. பிறகு கொஞ்ச நேரம் கழித்துத் தடம் புரண்ட பெட்டியைக் கழற்றிவிட்டு வண்டி வந்துகொண்டிருக்கிற செய்தியைச் சொன்னார்கள். ஆனால் ஏதோ சிலருக்கு அடிபட்டிருக்கிறதென்றும் அவர்களும் அந்த வண்டியில் வருவதாகவும் செய்திகிடைத்தது. எங்களுக்கு மேலும் கவலை அதிகரித்தது. இரயிலடியிலேயே தங்கியிருந்தோம். குறித்த காலத்துக்கு மூன்றுமணி நேரம் கழித்து இரயிலும் வந்து சேர்ந்தது. காசியிலும் பெருங்கூட்டம். இறங்குவோரும் ஏறுவோருமாக அடித்துப் பிடித்துக்கொண்டு எல்லோரும் இறங்கினார்கள். கங்கைக்குடங்களும் இறக்கப் பட்டன. எல்லோரும் நலமாக வந்துசேர்ந்ததைக் கண்டதும் எங்களுக்குப் பெரும் ஆறுதலும் மகிழ்வும் உண்டாயின. நாங்கள் சொன்னோம் 'ஆண்டவன் நமக்குத் துணை நிற்கிறான்' என்று. ஆனால் அந்த இரயிலிலிருந்து வந்த எங்கள் கோஷ்டியாரில் ஒருவர் 'இந்த நாட்டு மக்களுக்கு இதைவிடப் பண்பாடு அதிகமாக இருக்கிறது; விபத்து நேர்ந்த இடத்தில் நாங்கள் இருந்த அடுத்த வண்டி தடம் புரண்டது. அங்கே ஒரே அழுகையும் கூச்சலும். வெளிச்சமும் குறைவு. தடம் புரண்ட பெட்டியைக் கழற்றிவிட்டு அதிலிருந்த பிரயாணிகளை மற்ற வண்டிகளில் ஏற்றிக் கொண்டு வண்டியும் புறப்பட்டது. நாங்களிருந்த வண்டியில் இருந்த

க்ஷேத்ரயாத்திரை : (ஸ்ரீகாசியில்)



ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் ஸ்ரீ விஸ்வநாதர் அர்த்தஜாம பூஜை தரிசனம்.

கேதாரயாத்திரை : (ஸ்ரீகாசியில்)



ஸ்ரீ அன்னபூரணை



பைரவர்

மற்ருெரு பிரயாணி 'இரயில் தப்பியதற்கு இந்தப் பெட்டியிலே வந்திருக்கும் 'கங்கா பானியும் சாதுமகாராஜும் தான் காரணம்' இல்லாவிடில் ரயில் முழுதுமே கவிழ்ந்துவிட வேண்டியதாயிற்றே. கங்கா பாயிக்கு ஜே!' என்று சொன்னுர்.

ஆனந்தமாக விசுவநாதரைத் தரிசிக்கும் பெரும்பேறு ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானமவர்களால் எங்களுக்கு இரண்டாவது முறையாகவும் கிடைத்தது; இது எங்களுக்கு ஒரு தனிப் பெருமை. புனிதமான ஸ்ரீகாசியிலே இருந்து கங்கைநீராடப் பெறும் வாய்ப்பு எல்லார்க்கும் கிடைக்குமா என்ன?

## கேதார யாத்திரை

### *தந்தி வந்தது :*

காசியிலே சில நாட்கள் தங்கியிருக்கும்போது திருப்பனந்தாளி லிருந்து ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தோடு கேதார யாத்திரைசெல்லும் பெரு விருப் புடன் பனசையை விட்டுப் புறப்பட்டு வந்துகொண்டிருப்பதாகத் தந்தி வந்தது.

### *சந்திப்பு :*

24—4—55 ஞாயிறன்று காலை 11-மணிக்குக் குமாரசாமிமடத்துக்கு வந்துசேர்ந்தார்கள். வந்ததும் திருமஞ்சனம் வழிபாடுகளையெல்லாம் முடித்துக்கொண்டு குருமகாசந்நிதானத்தைத் தரிசிக்க இப்பகுதிக்கு வந்தார்கள். உரிய முறையில் குருவழிபாடு செய்து பொன்னுடை போர்த்தி வணங்கினுர்கள். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமும் ஆதீனத்துக் கண்மணியிற்சிறந்த நன்மணியான ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளுக்குப் பொன்னுடை போர்த்தி ஆசி அருளினுர்கள். பக்கத்திலே அமரச்செய்து நீண்ட நேரம் அளவளாவிக்கொண்டிருந்தார்கள். கேதாரத்திற்குப் புறப்படும் நாள் குறித்தும் பேச்சு வந்தது. ஆதீன ஆன்மார்த்த மூர்த்தியாகிய சொக்கலிங்கப் பெருமானுக்கு சோமவாரம் மிக உகந்தநாளல்லவா? மறுநாள் அந்த நன்னுளாகவே, அன்றே கேதாரம் புறப்படுவதாக உறுதி யாயிற்று.

### *கூட்டுப் பிரார்த்தனை :*

மாலையில் கேதார கட்டத்தில் எழுந்தருளியுள்ள கேதாரேசுவரருக்குச் சிறப்பு வழிபாடுகள் நிகழ்ந்தன. பெரிய அபிஷேக ஆராதனை. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் இருவருமே சேர்ந்து நிகழ்த்திய ஒரு பெரும் பூசை. எங்களுக்கும் அந்த வாய்ப்பு

கிடைத்தது. இப்படியாக இது ஒரு பெரிய கூட்டுப் பிரார்த்தனையாக அமைந்தது. ஓதுவார் நம் திருமுறை பாடினர். ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளவர்களும் மனமுருகத் திருமுறை இசைத்தார்கள். எல்லோரும் இன்ப வெள்ளத்திலே திளைத்தோம்; பிரியாவிடை பெற்றோம். மறுநாள் பயணத்திற்கு ஏற்பாடுகள் நடைபெற்றன.

## புறப்பட்டோம் :

சோமவாரம், வழக்கம்போல் காலை வழிபாடுகள் எல்லாம் முடிந்தன. 10-மணிக்குப் புறப்படுவதற்கான ஆயத்தங்கள் விரைந்து நடந்தன. யாத்திரைக்குத் தேவையான பொருள்களை எல்லாம் திரு. கல்யாண சுந்தரம் பிள்ளை ஏற்பாடு செய்துமுடித்திருந்தார். புறப்படுவதற்கு முன்னுகக் காசிவாசி ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் சில கருத்துரை புகன்றார்கள்.

'யாத்திரையில் அஞ்சாது நடக்கும் திறமையை விட்டுவிடாதீர்கள். செல்வதோ மலைவழி. பனி நிறைந்த பாதை. தக்க உடல் உரமும், உள்ள உரமும்கொண்டு உலையாது நடக்கவேண்டும். யாத்திரையின் போது பிறர் உதவி தேவையாக இருக்குமென்றால் யாரும் வருதல் அரிதே. ஏனெனில் அவரவர் தன் நடையைத்தான் பார்க்க முடியுமே ஒழியப் பிறர்க்கு உதவி செய்யக்கூடிய நிலையில் ஒருவரும் இருக்க முடியாது. வழி மலை வழி. புது வழி. ஆகவே மன உரத்தோடு ஒவ்வொருவரும் நடக்க முன்வரவேண்டும். இன்னென்று, கோஷ்டி கோஷ்டியாகத்தான் செல்லவேண்டும்; ஆங்காங்கு நான் தங்கி வருகிறேன் என்று யாரும் சொல்லக்கூடாது. எளிமைப் பண்பு இன்றியமையாது தேவை. நமது யாத்திரிகர்கள் அனைவருக்கும் இந்த மனப்பாங்கும் மனே திடமும் இன்றியமையாதவை. நம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுடன் நாம் செல்வதால் நமக்கு ஊறு எதுவும் உண்டாகாது இது உறுதி. 'ஜெய் கேதார்நாத்' எங்களில் ஒவ்வொருவரையும் அழைத்து ஊக்கப்படுத்தினர்கள்.

ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் அவர்களின் உரையும், ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் அருளாசியும் நம்பக்கம் இருக்கும்போது இனி எதற்கும் 'அஞ்சுவதும் இல்லை; அஞ்ச வருவதும் இல்லை' என்று உறுதியோடு புறப்பட்டோம். இரயிலடியில் அன்பர்களின் 'அரகர' முழக்கத்துடன், 'கேதார்நாத்கிஜே' முழக்கத்தோடும் இரயில் சுமார் 11 மணிக்குப் புறப்பட்டது. அன்பர்கள் பலரும் இரயிலடியில் வந்து சிவமுழக்கம் செய்தார்கள். கேதாரநாதரின் பாதாரவிந்தங்களில் சிந்தையைச் செலுத்தியவாறே இரயில் பிரயாணத்தைத் தொடங்கினேம். காசியைவிட்டுப் புறப்பட்டோம். ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களும், ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களும் முதல் வகுப்பிலும், நாங்கள் மூன்றும் வகுப்புப் பெட்டியிலுமாக இருந்தோம்.

கேதாரயாத்திரை : (ஸ்ரீ காசியில்)



ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களுக்கு
காசிவாசி ஸ்ரீலஸ்ரீ அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் குருவழிபாடு

கேதாரயாத்திரை (ஸ்ரீ காசி கேதாரேஸ்வரர் ஆலயத்தில்)



ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களும் காசிவாசி ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் அவர்களும் வழிபடுதல்,

## ஓடும் இரயிலில் :

எங்கள் ஒவ்வொருவர் சிந்தனையும் கேதாரநாதர்மீதே இருந்தது. இருந்தாலும் நாங்கள் மூன்றும் வகுப்புப் பெட்டியில் இருந்தமையால், பலவகைப்பட்ட மக்களோடும், பலவகைப்பட்ட பண்பாடுடையவர்களோடும், பலவகைப்பட்ட நாகரிகம் படைத்தவர்களோடும் பழகச் சந்தர்ப்பம் ஏற்பட்டது. அவர்களோடு உள்ளம்விட்டு அளவளாவக் கூடிய ஒரு வாய்ப்பு கிடைத்தது. குளத்துக்குக் கரைதான் இன்றியமையாதது. கரையில்லாத குளத்தில் தண்ணீர் தங்காது. உள்ளம் விட்டுப் பழகும் தன்மை மனிதனுக்கு வேண்டும். "பழகாத மனிதனிடத்தில் பண்பாடு தங்காது" என்பார் திருவள்ளுவர். இந்த வள்ளுவர் வழியிலே எங்கள் சிந்தனை ஓடியது. ஆகவே தான் மக்களோடு பழகுவதில் பெரிய ஆர்வம் எங்களுக்கு இருந்தது. அப்பப்பா! ஹரித்துவாரம் செல்வதற்குள் நாங்கள் - சிறப்பாக நான் பெற்ற அநுபவங்கள் பலப்பல. பிரயாணிகளுக்கு எங்களோடு பேசவும் பழகவும், எங்களுக்கு அவர்களோடு பேசவும் பழகவும் ஆர்வம் நிரம்ப இருந்தது. ஆனால் முட்டுக்கட்டை மொழி வேறுபாடுதான்; அவர்களுக்குத் தமிழே தெரியாது. ஆனால் எங்களுக்கோ, இரண்டொரு வடநாட்டு யாத்திரையிலிருந்தும், இந்த யாத்திரையில் காசியில் சில நாட்கள் தங்கியிருந்த அநுபவத்திலிருந்தும் இலேசாக இந்தியறிவு இருந்தது. நாங்கள் அவர்கள் பேசும் பேச்சை எங்களுக்குத் தெரிந்த இந்தியறிவாலும், அவர்களுடைய முகபாவம் சைகைகளாலும் புரிந்துகொண்டோம். இதே நிலையில்தான் அவர்களும். ஆனால் ஒருவருக்கொருவர் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்வதிலே தடையில்லை.

## கட்டுச்சோறு :

உச்சிவேளை வந்தது. வயிற்றைப் பசி கிள்ள ஆரம்பித்தது. நாங்கள் தயார்செய்து கொண்டுபோன சித்திரான்னங்களை எடுத்துப் பிரித்து வைத்துக்கொண்டோம். புளியஞ்சாதமும், தயிர்ச்சாதமும் எங்கள் மூட்டைக்குள்ளிருந்து எட்டிப்பார்த்தன. நாங்கள் மூட்டையைக் காலி செய்வதில் முனைந்தோம். பெட்டியில் இருந்தவர்களுக்கு எங்கள் செய்கை பெரிய வியப்பாக இருந்ததுபோலும்; பல வண்ணத்தில் இருந்த சோற்றுமூட்டை அவர்களுக்குப் பெரிதும் வியப்பை விளைத்தது; ஒருவரோடொருவர் போட்டி போட்டுக்கொண்டு எங்களைச் சூழ்ந்து கொண்டார்கள். தம்முட் பேசிக்கொண்டனர். ஒருவர் தயிர்ச்சோற்றைக் கண்டு மற்றொருவரிடம் இது பால்சோறென்றார். பிறிதொருவர் வேறென்றார். புளிச்சோற்றைக் கண்டு புதுநிறமாயிருக்கிறதே என்று

இன்னொருவரிடம் பூரித்துப்போனார் மற்றொருவர். இப்படி எங்கள் கட்டுச் சோறு எத்தனையோபேர் நாட்டு விரலை மூக்கின்மேல் ஏற்றியது. கட்டுச் சோறும் காலியாகிக் கொண்டிருக்கிறது.

எனக்குத் தெரிந்த இந்தியில், 'இது பால்சோறல்ல; தயிர்ச்சோறு' என்று சொன்னேன். அதுவரைக்கும் இந்தியிலேயே பேசிக்கொண்டிருந்த ஒருவர் ஆங்கிலத்தில், 'தயிர்க்குச் சர்க்கரை போட்டுத்தான் பிரை குத்துவீர்களா?' என்று கேட்டார். 'வெறும் மோர்தான், பிரை குத்துவது. அதில் கொஞ்சம் புளிப்பு இருக்கும்' என்று பதில் சொன்னேன் நான். "இந்தச்சோற்றை நீங்கள் எப்படித் தயாரிப்பீர்கள்" இது மீண்டும் அவர் வினா. அதனை விளக்கினேன். உடனே அவர் இந்தியிலேயே மற்ற பிரயாணிகளுக்கு விளக்கினார். 'வர்ணத்தோடு கலந்திருக்கிறதே அது?' என்று மீண்டும் கேட்டார். 'அது புளியஞ்சோறு. அது தயாரிக்கும் விதம் இப்படி' என்று நானும் சலிக்காது பதில் சொன்னேன். அவரும் மீண்டும் தன் மொழி பெயர்ப்புப் பிரசங்கத்தைத் தொடங்கிவிட்டார். எல்லோர்க்கும் நாக்கில் நீர் சொட்டியிருக்கவேண்டும். இந்தப் பக்குவம் அவர்களுக்குத் தெரியாததுபோலும். இப்படி எங்களுடைய கட்டுச்சோறு அவர்களுக்கு ஒரு விஷயதானமாக அமைந்தது; எங்களுக்கும் ஆங்கிலந் தெரிந்த ஒரு நண்பரைப் பேச்சுத் துணைவராக அளித்தது. விசாரித்ததில் அவர் ஒரு ஆயுர்வேத வைத்தியரென்றும், காசி சர்வகலாசாலைப் பட்டதாரி என்றும், சுல்தான்பூரில் தொழில் நடத்துபவரென்றும், சமஸ்கிருதம், இந்தி, ஆங்கிலத்தில் கொஞ்சம் அவர்க்குத் தெரியுமென்றும் பேச்சுவாக்கிலே வெளிப்பட்டன.

## இராமமந்திரம் :

இப்படி நாங்கள் பேசிக்கொண்டிருக்கும்போதே நாங்கள் இருந்த பெட்டியிலேயே அந்தப்பக்கத்தில் ஒரு சிரிப்பொலி கேட்டது. நாங்கள் எங்கள் பேச்சைவிட்டு அதைக் கவனிக்கலானோம். அங்கே நெற்றியிலே திருமண் திருநாமந்தரித்த ஒரு சாது; பக்கத்திலிருந்த பிரயாணிகள் அவரை இடத்தில் நெருக்கினர் போலும். அவர் கூறினார் 'ஏனய்யா, எனக்குத் தொல்லை தருகிறீர்கள்? நான் ஒரு சாது' என்று. உடனே அந்த பிரயாணிகள் 'கொல்'லென்று சிரித்தனர். 'ஐயோ, பாவம்! வேடிக்கையும் சிரிப்புமாகப் பொழுதை வீணுக்குகிறீர்களே ! இந்த நேரத்தை, இராம நாமத்தைப் பஜிப்பதில் ஈடுபடுத்தினால் எவ்வளவு இனிமையாக இருக்கும்?' என்று கூறினார் அந்த பெரியவர். அவர் பலமொழியும் தெரிந்த ஒரு ஆந்திரா தேசத்துத் துறவி. உடனே எல்லோரும் இராம சரித்திரத்தைக் கூறும்படி அவரைக் கேட்டுக்கொண்டனர். உடன் அவரும் அழகாக இராமநாம மகிமையைப்பற்றி விவரித்துச் சொல்லலானார். முடிந்தது,

சுவைகண்ட பூனை சும்மா இருக்குமா என்ன? கிருஷ்ணுவதார மகிமையைச் சொல்லவேண்டுமென்று வேண்டினர் பக்கத்துப் பிரயாணி கள். கோரிக்கையை மறுக்காமல், கொஞ்சமும் சலிக்காமல் கிருஷ்ணுவ தாரத்தை விரிவாகச் சொல்ல ஆரம்பித்தார் பெரியவர். சுவையாக - அதே நேரத்தில் பக்தி மயமாக இருந்தது அவர் பேச்சு. எங்கள் கவனம் முழு தும் அந்த இனிய பேச்சிலே - காட்சியிலேதான் இருந்தது. அவர் பின்பு எங்களை நோக்கித் தெலுங்கில் வினுவினுர். நான் அவர் கேட்டதைப் புரிந்துகொண்டேன். எங்கள் யாத்திரா கோஷ்டியைப் பற்றியும், நாங்கள் திருக்கேதாரம் செல்வதைப்பற்றியும் விளக்கிக் கூறினேன். அவரும் என்னுடைய பேச்சை சரிவரப் புரிந்துகொண்டார். இப்படி இராம மந்திரத்தைப் பற்றியும் கிருஷ்ண மந்திரத்தைப்பற்றியும் பேசிக்கொண்டு வரும்போதே ஒரு ஸ்டேஷன் வந்தது. எட்டிப் பார்த்தேன். என்ன வியப்பு! இராமன் இருந்து இராமராஜ்யம் நடத்திய அயோத்தி ஸ்டேஷன் அது. எங்கள் எல்லோருக்கும் பெரிய வியப்பாகப் போய்விட்டது. இராம மந்திரத்தை ஜெபித்ததற்கும், இராம ராஜ்யம் அடைந்ததற்கும் எத்துணைத் திருவருட் பொருத்தம் இருக்கிறதென்று கூறியது எங்கள் மனம்.

## அயோத்தி வந்தது :

அயோத்தி இப்போது சின்ன ஊராகத்தான் இருக்கிறது. சிறிய ஸ்டேஷன் இன்று. ஆனுல் தாசரதியாகிய இராமர் ஆண்ட காலத்திலே இராம ரர்ஜ்யத்தின் தலைநகரமாக இருந்த பெரும்பதி அது. அன்று ஓடிய சரயுநதி இன்றும் ஓடுகிறது; அயோத்தி என்ற திருப்பெயர் இன்றும் இருக்கிறது. ஆனுல் இராம ராஜ்யத்தில் இருந்த மக்கள் ...... இன்று இருக்கிருர்களோ என்னவோ ... ... ? அயோத்தியைப் பார்க்கும்போது என் மனத்திலே தமிழ்நாட்டின் கிழைக் கடற்கரை ஓரத்திலே, இன்று சிற்றூராக இருக்கும் காவிரிப்பூம்பட்டினம் நினைப்புக்கு வந்தது. ஆகா! சோழன் கரிகாற் பெருவளத்தான் காலத்திலே, சோழப்பேரரசின் தலை நகராக - மருவூர்ப்பாக்கமும் பட்டினப்பாக்கமுமாகப் பல காவததூரப் பரப்புடையதாக இருந்த அந்த சோழர் தலைநகரம், இன்று மணல்வெளி யாகச் சிற்றூராகக் காட்சியளிக்கிறது. அயோத்தியும் இதே நிலையில்தான் இருக்கிறது; இப்படி ஒப்பிட்டது என் உள்ளம்.

ஸ்டேஷனில் கண்ணேட்டத்தை விட்டேன். குரங்குகள் ஸ்டேஷனில் காணுமிடமெல்லாம் காட்சி கொடுத்துக்கொண்டிருந்தன. இராமரிடத்து அன்புகொண்டு ஏவல்செய்த வானரப்படையாவது, ஆம் - இன்றும் வாழையடி வாழையாக அங்கே வாழ்ந்து வருகிறது என்று நினைத்தால் தவறில்லை யல்லவா? அயோத்தியிலே கொள்பவலரில்லை; எனவே கொடுப்

பவர் இல்லை! ஏழைகள் இல்லை; எனவே பணக்காரர்கள் இல்லை! படிக்காதவர்கள் இல்லை; எனவே படித்தவர்கள் இல்லை! என்று நயம்படக் கூறித் தான் விரும்பும் சமுதாயத்தைக் காட்டினானே கம்பன், அந்தக் கருத்துக்களெல்லாம் ஒன்றன் பின் ஒன்றாக ஓடிவந்தன என் மனத்தில். பக்கத்திலிருந்த சுல்தான்பூர் நண்பரைப் பார்த்துக் கேட்டேன்.

'இராமர் ஆண்ட இடமாயிற்றே! அரண்மனையும், மாடமாளிகைகளும் ஏதேனும் இங்கு இன்றும் உண்டோ?' இது என்

'அந்த அக்கிரமத்தை ஏன் கேட்கிறீர்கள்? முகம்மதியர்கள் தென்னாட்டுச் சிற்பங்களைச் சிதைத்ததைவிட வடநாட்டிலேதான் அதிக வெறியாட்டமாடி யிருக்கிறார்கள். மகம்மதிய அரசர்கள் இங்கிருந்த இராமர் அரண்மனை, மாடமாளிகைகளை இடித்துவிட்டு அதன்மேலே தங்கள் மசூதிகளைக் கட்டிவைத்திருக்கிறார்கள்; நினைத்தாலும் இந்தியன் நெஞ்சு கொதிக்கும் செய்தி இது' என்றார் நண்பர் உணர்ச்சிவேகத்தோடு.

'நெஞ்சு கொதிக்க வேண்டியதில்லை. நினைத்து நினைத்து மகிழ வேண்டிய - போற்றவேண்டிய நிலை இது! இராமன் ஆண்ட - வாழ்ந்த புனிதமான இடமாயிற்றே என்று கருதி, அந்தப்புரமாக்கிக் கொள்ளாமல், பரத்தையர் விடுதிக்குக் கொடுத்துவிடாமல், ஒரு புனிதமான இடமாக - தொழுகைக்குரிய தூய இடமாக ஆக்கி வைத்திருக்கிறார்களே என்று அவர்களைப் போற்றவேண்டும் நாம். அந்த அளவுக்காவது அந்த இடத்தின் புனிதத் தன்மை போற்றப்பட்டிருக்கிறதே' என்று கூறினேன் நான். வண்டியும் ஸ்டேஷனைவிட்டு நகர்ந்தது.

## இலட்சுமணபுரி : (Lucknow)

லக்னோ வந்தடையும்போது மாலை மணி 6-30. லக்னோ பெரிய சந்திப்பு. அங்கிருந்து டெல்லி, பம்பாய் முதலிய ஊர்களுக்கு இருப்புப் பாதை செல்லுகிறது. இங்கே எல்லாவண்டிகளும் குறைந்தது அரைமணி நேரம் நின்று புறப்படும். ஸ்டேஷன் கட்டிடம் மிகப் பெரியதாகவும், அழகியதாகவும் அமைக்கப்பெற்றிருக்கிறது. இது உத்தரப் பிரதேச ராஜ்யத்தின் தலைநகர். எல்லா நிர்வாக ஸ்தலங்களும் இந்த நகரத்தில் தான். உயர்நீதிமன்றம் மட்டும் அலகாபாத்தில் இருக்கிறது. கோமதி ஆற்றங்கரை. சர்வகலாசாலை, வானொலி நிலையம், விமான நிலையம் உள்ளன. சரித்திரப் பெருமை வாய்ந்த கட்டிடங்கள் பல இந்நகரில் இருக்கின்றன. யாத்திரிகர்களுக்கு வழிகாட்டிகளாக அர்சாங்கத்திலே

வெளியிட்டிருக்கும் கைப்புத்தகம் சொல்கிறது 'இது ஒரு பெரிய புளியஞ் சோலை' .என்று. இங்கே புளியமரங்கள் ஏராளம். இது நமது சென்னை ராஜ்யத்திலுள்ள 'திந்திரிய வனத்தை' (திண்டிவனம் - புளியஞ்சோலை) நமக்கு நினைவூட்டுகிறது. நகரின் பெயர் இலட்சுமணபுரி; நகரை உண் டாக்கியவன் இலட்சுமணன் (இராமனுடைய சகோதரன்) என்று சொல்லு கிறார்கள் ஒருசாரார். மற்றொருசாரார் இலட்சுமணன் இந்நகர நிருமாணஞ் செய்த சிற்பி என்கிறார்கள். எனக்கென்னவோ பழயகாலத்து இலட்சு மணன் பெயராலமைந்தது இந்நகரம் என்பதே பொருத்தமெனத் தோன்று கிறது.

## அருளிப்பாடு :

வண்டிநின்றதும், ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளவர்கள் வண்டியை விட்டிறங்கி ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் இருக்கும் பெட்டிக்கு வந்தார்கள். மாலைத் திருமஞ்சனமாடுவதற்கும், வழிபாட்டுக்கும் என்ன ஏற்பாடுகள் செய்திருக்கிறது என்பதையும் பார்த்தார்கள்; பால் கொண்டு வரச்சொன்னார்கள்; பழம் வாங்கிவரச் செய்தார்கள். இவ்வாறு ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களுக்கு வேண்டிய வசதிகளையெல்லாம் அவர்களே திட்டம் செய்தார்கள். இந்த நேரத்தில் வந்து சேர்ந்தார் கேதாரபண்டா கணேசசங்கர், அவர் கேதாரநாதர் திருக்கோயிலுக்குவரும் யாத்திரிகர் களுக்கு வேண்டும் வசதிகளைச் செய்துகொடுத்து வழிபாடுகளும் செய்து வைப்பவர். பணக்காரரும் கூட. 1-5-55ல் கேதாரம் கோவில் திறக்கப் படுவதால் அன்று அங்கே இருப்பதற்காகச் செல்ல நாங்கள் ஏறிய இரயி லுக்கே வந்துசேர்ந்தார், முன்னேயே ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர் களுக்குத் தெரிந்தவர். ஆகவே சுவாமிகளைக் கண்டார்; பேசினார். ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களுக்கு அறிமுகம் செய்துவைத்தார்கள். 'இந்தப் பண்டா மிகவும் நல்லவன். வெளியிலே யாத்திரிகர்களைத் தேடி அழைத்துச் செல்லுவதில்லை. அங்கே கேதாரத்தில் நாடிவருபவர்களுக்கு வசதிசெய்து கொடுத்து வழிபாடும் செய்து வைப்பவன்' என்று தெரிவித்துக் கொண்டார்கள். இது எங்கள் எல்லோருக்கும் ஒரு வியப்பாக இருந்தது. ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்கள் திருவுளத்து சுந்தரர் கயிலைக்குச் சென்ற செய்தி உதித்தது. அங்கே அருளிப்பாடு என்று ஒரு வழக்கு உண்டு; அதுவே ஈண்டும் வந்தது போலும். 'கேதாரநாதர் அழைக்கின்றார். யாத்திரையின் வெற்றிக்கு இதுவும் ஒரு அறிகுறி' என்று திருவாய் மலர்ந்தார்கள். அப்போதுதான் எங்களுக்கும் புரிந்தது. பண்டாவும் ஏறிக்கொண்டான். நாங்களும் இரவு உண்டிகளை முடித்துக்கொண்டோம். இரயிலும் புறப் பட்டது. மறுநாள் காலை 6-10 க்கு ஹரத்துவாரம் வந்துசேர்ந்தோம்.

## ரிஷிகேசம் :

மதராசி தர்மசாலையில் சென்று தங்கினோம். கங்கையில் நீராட்டு. நடுப்பகல் உணவை முடித்துக்கொண்டோம். பழைய கிருஷ்ணய்யர் அங்கிருந்தார். எங்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்துகொடுத்தார். உத்தரகண்ட யாத்திரைக்குத் தலைவாயில் ஹரத்துவாரம். மாலையில் வழிக்குவேண்டிய உபகரணங்களான காலுறை, மேற்சோடு, தடித்தகம்பு தட்பவெப்பக் குப்பி, ரப்பர்துணி முதலியவற்றை சேகரித்துக் கொண்டோம். ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளவர்களே எல்லாவற்றையும் முன்னின்று வாங்கி வழங்கினார்கள்.

இன்னும் சிலர் ஹார்லிக்ஸ், டார்ச்லைட், டார்ச்சுலைட்டுக்கு வேண்டிய பாட்டரிகள் முதலியன வாங்கிக்கொண்டோம். மாலை 3 மணிக்கு உந்தூர்தி மூலம் ரிஷிகேசத்திலுள்ள ஆந்திர ஆசிரமம் என்னும் நிலையத்திற்குப் போய்ச் சேர்ந்தோம். ஹரத்துவாரமும் ரிஷிகேசமும் சாதுக்கள் நிறைந்த ஊர்கள். பல பெரிய மகான்களும் அங்கு இருக்கிறார்கள். பெரிய ஆசிரமங்களும், அன்னசத்திரங்களும், தருமசாலைகளும் நிரம்ப இருக்கின்றன. ரிஷிகேசத்திலும் பெரிய கடைத்தெரு இருக்கிறது.

## ஆந்திரா ஆசிரமம் :

ஆந்திராவைச் சேர்ந்த குண்டூர் மாவட்டத்திலிருந்து வந்த ஒரு சாது ஸ்ரீ சுவாமி சத்தியானந்த சரஸ்வதி மஹராஜ் என்னும்பெரியார் முயற்சியில் இது கட்டப்பட்டு வருகிறது. இதுவரை நாலரை இலட்சருபாய் செலவாகியிருக்கும். இன்னும் கட்டிடப்பகுதியிலே இரண்டு மூன்று இலட்சமும், சிவ விஷ்ணு இரண்டு கோவில்கள் கட்ட ஒரு இலட்சமும், திட்டம். இரண்டு ஆலயங்களிலும் அமைப்பதற்காக நல்ல அழகிய திருவுருவங்கள் தென்னாட்டிலிருந்து கல்லிலும் செம்பிலும் செய்து வைக்கப்பெற்றிருக்கின்றன. வசதியான எழுபத்திரண்டு அறைகள். பெரிய முற்றம். மின்னொளி பொருத்திய மாடிக்கட்டிடம். இரண்டு தளங்களுக்கும் தண்ணீர்வசதி செய்யக்கூடியதான நீருறிஞ்சி. பின் பக்கத்திலே இரண்டு பர்லாங் தொலைவிலே கங்கையாறு. ஒரு மலைத்தொடர். சுற்றிலும் நல்ல பசுமையான ஒரு காட்சி; ஆசிரமங்கள்: பர்னசாலைகள். அந்தக் கட்டிடத்தின் பிற்பகுதியில் கௌரி குண்டம் என்னும் நீரூற்று. பொங்கிவழிந்து ஓடிக்கொண்டேயிருக்கும் தண்ணீர். ஒரு பகுதிக் கட்டிடம் தரைமட்டம்வரை கட்டிவிடப்பட்டிருக்கிறது. இந்த நிலையில் அந்த ஆசிரமத்தை நிறுவிய பெரியார் வசூலுக்குத்

தென்னாட்டுக்குப் போயிருக்கிறார். இரண்டு சாதுக்கள் பிர்மானந்தா, சித்தானந்தா அங்கிருந்து ஆசிரம காரியங்களைக் கவனித்து வருகிறார்கள். ஒருவர் தெலுங்கர். ஒருவர் தமிழர். நல்ல பண்பாடுடையவர்கள். ஆசிரமம் நிறுவிய பெரியார் இமயச்சாரலில் நீண்டகாலம் தவமிருந்து அருள்பெற்றவர். 'தனக்கெனவாழாப் பிறர்க்குரியாளர்' உத்தர கண்ட யாத்திரைக்கு வரும் தமிழர் தெலுங்கர் இருவர்க்கும் 'இந்த ஆசிரமம் ஒரு தாயகம். அந்தப் பெரியார் ஆறுமாதம் வசூல் செய்வதும், ஆறுமாதம் தன்னுடைய நேர்பார்வையிலே கட்டிடவேலையைத் தொடர்ந்து செய்வதும் இப்படியாகக் கடும் உழைப்பை மேற்கொண்டிருக்கிறார். திருவாளர்கள் எஸ். வி. இராமமூர்த்தி, M. அனந்தசயனம், கொண்டப்ப காரு, அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர், சத்தியநாராயணா போன்ற பெரும் பெயர் பெற்ற அறிஞர்களும், பணம் படைத்த சிற்றரசர் களும், வணிகர்களும் அவரவர் பேராலும் பலப்பல அறைகள் கட்டிவைத்திருக்கிறார்கள். இதற்கென நிர்வாகக் குழு ஒன்று ஸ்ரீ சத்தியானந்த சரஸ்வதி, ஸர் எஸ். வி. இராமமூர்த்தி ஐ. சி. எஸ்., எம். அனந்தசயனம் ஐயங்கார் (மக்கள் சபை உபதலைவர்) முதலிய பலரும் அடங்கியதாக நிறுவப் பெற்றிருக்கிறது. ஒரு சிறு பிணக்கு; நிருவாகக் குழுவினர் சொல்லுகிறார்கள். 'வசூலிலிருந்து கிடைக்கும் பணத்தை மக்கள் தங்குவதற்காக மேலும் அறைகளாகக் கட்டிவைத்துவிடுவோம். மக்கள் பணியே நம்பன்பணி. ஊரிலே பல கோயில்கள் உண்டு. வேண்டு மானால் அங்கேசென்று தரிசனம் செய்துகொள்ளட்டும்' என்று. நிருவாகக் குழுவின் தலைவரான சுவாமிஜி சொல்லுகிறார்கள்; 'எல்லாவற்றுக்கும் கடவுட் பணியே முன்னே செய்யவேண்டியது. மக்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்தாயிற்று; செய்யவும் திட்டம் இருக்கிறது; இது ஒரு தெய்வ பூமி; தவச்சாலை. இங்கு இருபுறத்திலும் சிவ விஷ்ணு ஆலயங்கள் கட்டிவைத்துவிட்டால், வருகிற தென்னாட்டார் அவரவர்கள் வழியில் இறைவழிபாடு செய்துகொண்டிருப்பார்கள்; இதற்கு முதலிடம் வேண்டும்' என்று. தன்னுடைய கொள்கையை நிறை வேற்றிவிடத் தீர்மானித்துத் திருவுருவங்களையும் செய்துவந்து, கட்டிடத்தில் நடு இடத்தில் பார்வையாக இருக்கும்படி வைத்துவிட்டார். காலையி லும் மாலையிலும் அந்த இடத்தைக் கூட்டுப்பிரார்த்தனை மண்டபமாகவும் ஆக்கிவிட்டார். இனிக் கோயில்கள் கட்டாவிட்டால் ஆஸ்திகப்பெரு மக்கள் குறை கூறத் தொடங்கிவிடுவார்கள். நிருவாகக் குழுவினர் இணங்கிவந்துதான் ஆகவேண்டும். பெரியோர் நினைப்பும் செயலும் இப்படித்தானிருக்கும்.

இங்கே 26-ம் தேதி இரவும், 27-ம் தேதி முழுதும் ரிஷிகேசத்திலிருந்து மேலே பேருந்தூர்திமூலம்தான் செல்வதற்குமுடியும்; இப்போது ஓடும் பஸ் தொகுதிக்கு ஜகத்பஸ் என்றுபெயர்.

ஆந்திரா ஆசிரமத்தில் பல தெலுங்கர்களும், தமிழர்களும் அவரவர் குடும்பத்தோடு வந்து தங்கியிருக்கிறார்கள். எங்கள் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களுக்கும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிக ளவர்களுக்கும் மேல்மாடியிலே இரண்டு பெரிய வசதியான அறைகள் விடப்பட்டிருந்தன. ஆசிரமத்திலுள்ள சாதுக்கள் எங்களுக்குச் செய்ய வேண்டிய சேவைகளை அன்போடும் ஆர்வத்தோடும் செய்துகொடுத்தார் கள். சிலர் கௌரிகுண்டத்திலும் சிலர் கங்கையிலும் குளித்தோம். வழிபாடுகளை முடித்துக்கொண்டோம். முறைப்படிக் கேதார சிந்தனையும் திருமுறைப் பாராயணமும் நிகழ்ந்தன. ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளவர் கள் 'எங்கு சென்றாலும் சிவசிவ ஒலிப்பதிவு-திருமுறை ஒலிப்பதிவுசெய்து வைத்துவிடவேண்டும்; நாமிறந்தாலும் நம்முடைய ஒலி அங்கே சுற்றிச் சுழன்றுகொண்டிருக்கும்; வருவோர் புனிதமடையட்டும். ஆண்டவன் அருள் பெருகட்டும்' என்றார்கள்.

எங்களோடு வந்தவர் உணவு தயாரித்தார். உணவுகளை முடித்துக்கொண்டோம். முன்னறையில் இருந்த மலையாள அந்தணர் ஒருவர் எங்கள் நாக்குருசிக்கேற்பக் காப்பிப் பலகார வசதிகளைச் செய்து கொடுத்தார். ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளவர்கள் மேலே யாத்திரைக்கு வேண்டிய காரியங்களைச் செய்யும்படி காசி ஏஜண்ட் திரு.கல்யாணசுந்தரம் பிள்ளை அவர்களுக்கு உத்தரவிட்டார்கள்.

## மடத்துக்கு முந்தினேம்:

நம்முடைய ஊரிலே பேருந்தூர்தி புறப்படும் நேரத்தில் சென்று சீட்டுவாங்கி இடம்பிடித்து ஏறிக்கொள்வதுபோல இங்கு செல்லமுடியாது. முன்னதாகவே நிலையத்துக்குச்சென்று பெயர் பதிந்து வைத்துக்கொள்ள வேண்டும். அன்று பதிவாகும் பெயர்களை மாலையில் எல்லா உந்தூர்தி களும் வந்ததும் பரிசீலித்துச் சீட்டெழுதிவைப்பார்கள். அந்த நேரத்திலே சென்று பெற்றுக்கொள்ளவேண்டும். உந்தூர்தியில் முன் வகுப்பு, பின் வகுப்பு என்று இரண்டு பகுதிகள் உண்டு. ஓட்டுவோரின் பின்புறத்தில் உள்ள இடவரிசை முன்வகுப்பு; ஐந்தாறு பேர்களுக்குக் கிடைக்கும். அதற்குப் பின்னுள்ள இடவரிசைகள் முழுதும் பின் வகுப்பு. எங்களைப்போலக் கோஷ்டியாகச் செல்பவர்க்கு, ஒரே தொகுப்பாகப் போக உந்தூர்தி நிலையத்திலே சொல்லி ஏற்பாடு செய்துகொள்ள வேண்டும், இந்த ஏற்பாடுகளை கல்யாணசுந்தரம் பிள்ளையே கவனித்துக் கொண்டார்கள். நாங்கள் ரிஷிகேசம் நகரிலுள்ள காட்சிகளையும் பிறவற்றையும் பார்த்து மகிழ்ந்தோம். உணவு தயாரிப்பதற்கான சிறு உதவிகளை கவனித்துக்கொண்டோம்.

## உலகம் போதும் :

சிறிது நேரம் அங்குள்ள சாதுக்களோடு அளவளாவினோம். நல்ல பல விஷயங்களைப்பற்றியும் பேசினோம். அந்த ஊரைப்பற்றிப் பேச்சுத் தொடங்கியது. பெரியார் சொன்னார். 'ஹரத்துவாரம் மாயாபுரி; ரிஷி கேசம் மாயாகுண்டம் கீர்த்திநகர்; செல்லும் உந்தூர்திக்கு 'ஜகத் பஸ்' என்று பெயர். மாயாபுரி நம்முடைய உலக பந்தங்கள் தொடுமிடம். மாயாகுண்டத்திலே அவைகளை மாய்த்து உலக பந்தங்களினின்று விடுதலை பெற்றுக்கொண்டு 'உலகம் போதும்' (ஜெகத்+பஸ்; ஜெகத்=உலகம், பஸ்=போதும். இது இந்தி) என்ற நிலையிலே தவச்சாலையாகிய தெய்வ மலையிலே மேலே மேலே போகிறோம். கடவுட் காட்சியைக் காண் கிறோம்' என்ற கற்பனை நயம் செறியப் பேசினார். இவ்வாறு இனிமையாக அன்றைப் பொழுது கழிந்தது.

## அரனெனத் தொழுமே :

அன்று மாலையில் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களும் எல்லோரும் உடன்வரக் கங்கைக் கரைக்கு எழுந்தருளினார்கள். தொலைவிலே சிவானந்த ஆசிரமம் கண்ணுக்குப் புலப்பட்டது. பல தவச்சாலைகளும் காணப்பெற்றன. சாதுக்கள் பலரும் கங்கையில் நீராடிப் புனிதமடைந்து அவரவர் ஆசிர மங்களுக்குத் திரும்பிக் கொண்டிருந்தார்கள். சூரியன் மலைவாயிலில் விழும்நேரம். சுற்றிலுமுள்ள ஆசிரமங்களிலிருந்தும் வழிபாட்டொலிகளும் பஜனைப் பாடல்களின் இன்னிசையும் காற்றிலே பக்தி வெள்ளத்தை வாரி வழங்கின. பேச்சுக்கள் சிவஞானபோத சூத்திரத்தை நாடிவந்தன. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் திருவுளத்திலே :

"செம்மலர் நோன்றாள் சேரலொட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயமும் மலிந்தவர் வேடமும்
ஆலயந்தானும் அரனெனத் தொழுமே"

என்ற சிந்தனை தோன்றியது. அதேகாட்சி, அதே இணக்கம். இந்த சூத்திரத்தின் இலக்கியமாக இருந்தது அந்தச்சூழ்நிலை. அங்கே கிடைக்கும் வாய்ப்பைத் திருவுளத்து அடைத்தார்கள். மிக உருக்கமான சிந்தனை அது. உடன்வந்த எங்களையெல்லாம் உயர்த்தியது அது. இந்தச் சிந்தனை யோடு ஆசிரமம் திரும்பினோம்.

மாலை மயங்கிற்று. வழிபாடுகள் முடிந்தன. இரவு உணவை முடித் துக்கொண்டு படுக்கைக்குச் சென்றோம். மலையடுக்கிலே மேலே மேலே

செல்வதுபோலவும், பேராறும், பெருமலையும், பனிமலைக் காட்சியும் கண்டு கண்டு இன்புறுவதுபோலவும் கனுக்கண்டு இரவும் கழிந்தது.

## கணனும் இமையும் :

இராமன் சீதைஉடன்வர, இலட்சுமணன் காவல்புரிய ஆரண்ய வாசம் செய்கிறான். இலட்சுமணன் காவல்காக்கிறான் அந்த ஆச்சிரமத்தை. கண்ணை இமை காப்பதுபோல இருந்தது அவனுடைய பணிவிடை. தர்ப்பாசனமிட்டான். அதன்மேல் தமயனைத் தூங்கச் செய்தான். இராமனுக்குச் செய்யவேண்டிய பணிகளையெல்லாம் காலத்திற்செய்து இரவும் பகலும் காத்துநின்றான் என்கிறது கம்பர் காவியம். அதுபோலவே ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்துக்கு அவ்வக்காலங்களிலும் செய்யவேண்டிய பணிவிடைகள் செய்விக்கப் பெறுகின்றனவா? எங்கேனும் ஏதேனும் வழுவுதல் உண்டா? என்ற நினைப்பிலே ஒவ்வொன்றையும் ஒவ்வொரு பொழுதிலும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளவர்கள் விசாரித்து அறிந்து கொண்டார்கள். நேரில் வந்தும் செய்யச்செய்தார்கள்; அடிக்கடிவந்து விசாரித்தார்கள். இதனை மேலே சொன்ன கம்பசித்திரத்தோடு ஒப்பிட்டு மகிழ்ந்தது ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தின் திருவுள்ளம்.

## உந்தூர்தி புறப்பட்டது :

காலை 3 மணிக்கே நாங்களெல்லாம் உறக்கத்திலிருந்து எழுப்பப் பெற்றோம். அங்கே ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் திருமஞ் சனம் வழிபாடு முதலியவற்றுக்குப் புறப்பட்டுக் கொண்டிருப்பதைக் கண்டோம். சுறுசுறுப்புக் கொண்டோம். எங்களுக்கு முன்னர் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் திருமஞ்சனமாகி வழிபாடுமுடித்துப் பாராயணம் நிகழ்த்திக்கொண்டிருந்தார்கள். 'கேதாரமும்' பின்தினர். நாங்கள் கௌரி குண்டத்திலே முழுகி, வழிபாடுகளை முடித்துக்கொண்டு தயாரானோம்,

எங்களோடுவந்த ஆதீன அடியவர் வித்துவான் ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் சொக்கலிங்கப்பெருமான் பூசையிலே முழுகி இருந்தார்கள். மணி 4. ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளவர்களும் கல்யாணசுந்தரம் பிள்ளையும் உந்தூர்தி நிலையம் விரைந்தார்கள். அந்த நேரத்தில் 6 மணிக்குப் புறப்படவேண்டிய உந்தூர்திகளில் பலரும் வந்து ஏறிக்கொண்டிருப்பதைக் கண்டார்கள். நாங்கள் புறப்படவேண்டிய உந்தூர்தி ஓட்டுபவர் வரவில்லை. உந்தூர்தி இயக்குநர் (Conductor) வந்திருந்தார். அவருக்கு ஓட்டவும் தெரியும். உந்தூர்தியை எடுத்துக் கொண்டு ஓட்டுபவர் வீட்டுக்குச் சென்று அவரையும் அழைத்துக்கொண்டு நாங்கள் இருக்கும் ஆசிரமம் வந்து சேர்ந்தார்கள். நாங்களும்

கொண்டோம். ‘ அரகர ’ முழக்கமும், ‘ கேதாரத் தேவாரமும் ’ முழங்க உந்தூர்தி புறப்பட்டது. ‘ கேதார்நாத்கி ஜே ’, ‘ பதரிவிசால்ஜிகி ஜே ’ முழங்கின. பாட்டை ஒருவழிப்பாட்டை.

## ஒரு வழிப்பாட்டை :

ஒருபுறம் பல்லாயிரக்கணக்கான அடி உயரமுள்ள மலையும், மறுபுறம் மிகவும் ‘ கிடுகிடு ’ பள்ளத்திலே ஆறுமாக இந்த நிலையிலே அமைந்த பாட்டை. அரசாங்கத்தாரால் அநுமதிக்கப்பட்ட உந்தூர்திகள்தாம் செல்ல லாம். மற்ற எந்த வண்டியும் அங்குபோக அநுமதி இல்லை. ரிஷிகேசத்தி லிருந்தும், எதிர்ப்புறத்தில் கீர்த்திநகரிலிருந்தும் உந்தூர்திகள் குறிப்பிட்ட எண்ணிக்கையில் புறப்பட்டு வரும். தொகுதி தொகுதியாக விடப்படு கின்றன. இடையிடையே சாலைகள் அகலமாக அமைக்கப்பட்ட ஊர்களும் உண்டு. முதற்றொகுதியிலே விடப்பட்ட உந்தூர்திகள் அகலமாக அமைக்கப்பட்டட சாலைப் பகுதிக்கு வந்துசேரும். எதிர் வழியிலே வரும் தொகுதியும் அங்கே வந்து சேரும். இரண்டு வழி யாலும் வரும் உந்தூர்திகளிலே அந்தந்தத் தொகுதியிலும் கடைசியாக வருபவை ஒரு கொடி எடுத்துவரும். அவை வந்ததும் இரு வழிகளிலும் இரண்டு தொகுதிகளும் செல்லத் தொடங்கிவிடும். இவ்வாறு வியாசர் சட்டி, தேவப்பிரயாகை இரண்டிடங்களிலும் உந்தூர்திகள் மாறிக்கொள் வதற்குச் சாலை அகலமாக அமைக்கப்பெற்றிருக்கிறது.

நரேந்திரநகர் எல்லை வந்தது. உந்தூர்தியும் நிறுத்தப்பெற்றது. சுகாதாரச் சான்றுப்பதிவுக்காக அலுவலர்கள் சோதனையிட்டனர் எங்களை. நாங்கள் காசியிலேயே சுகாதாரசான்றுப்பத்திரம் பெற்றுச்சென்றிருந்தோம். நாங்கள் ரிஷிகேசத்திலே அமர்த்திக்கொண்ட கூலி அச்சான்று பெற வில்லை. அங்கே அவனுக்கு ஊசிமருந்து குத்தப்பெற்றது. பதிவுச்சீட்டும் கொடுத்தார்கள். அங்கே ஆள்வரி (Poll Tax) உண்டு. உந்தூர்திக் கட்டணத்தில் அதுவும் சேர்ந்தது. இது முடிந்து சிவானந்தா ஆசிரமம் வழியே இலட்சுமணஜூலா வந்து நின்றது எங்கள் ஊர்தி. அங்கே மலைவழிக்கு அடைப்புப் போட்டிருக்கிறார்கள். காவலும் உண்டு. முன்னேயே சொல்லப்பட்டிருக்கிறது. உந்தூர்திகள் தொகுதி தொகுதி யாகச் செல்ல வேண்டுமென்று. தொகுதி முழுதும் வந்து சேர்ந்ததும் காவலர் அடைப்பைத் திறப்பார். உந்தூர்திகளும் விரைந்து புறப்படும். இனி மலை வழிப்பாதை. ஒருபுறம் பெருமலைகள்; மறுபுறம் கங்கை. கங்கைக்கரையிலே ஆங்காங்கு அழகான ஆசிரமங்கள். இலட்சுமண ஜூலாவில் சரத்தால் கங்கைக்குப் பாலம் அமைத்தான் இலட்சுமணன் தவம்செய்ய. அந்த இடத்தில் இப்பொழுதும் ஒருதொங்கு பாலம்அமைக்கப் பெற்றிருக்கிறது. உந்தூர்திப்பாதை கங்கையின் வலப்புறத்திலே

போகிறது. பாலத்தைத் தாண்டி இடப்புறத்திலே பழைய நடைபாட்டையும் இருக்கிறது. நல்ல செழிப்பான மலைவளத்தினூடே பல பெரியோர்களுடைய ஆசிரமங்களையும் தரிசித்துக்கொண்டு கால்நடையாகச் செல்லுவோர் அவ்வழிச்செல்வர். உந்தூர்திப் பாதைவழியே அவர்கள் செல்லார்.

## வியாசர்சட்டி :

வழியும் திறந்தது; ஊர்தித்தொகுதியும் புறப்பட்டது. உந்தூர்திகளிலே உள்ள வடநாட்டு பக்தர்கள் பஜனை பாடினர்; ஜே முழக்கம் செய்தனர். இப்படிப் பக்திவெள்ளத்திலே உந்தூர்திகள் மிதந்து சென்றன. வியாசர் சட்டி வந்தது. வழிநெடுகிலும் நெடிய மரங்களோடு போட்டிபோட்டுக் கொண்டு கறிவேப்பிலை அடர்ந்து நின்றன. அப்படியே அவைகளைப் பறித்து மூட்டைகட்டிக்கொண்டு போகவேண்டும் போலிருந்தது எங்களுக்கு.

வியாசர்சட்டியிலே வந்து நின்றதும் அங்கிருந்த பலகை இப்போது கடல்மட்டத்திலிருந்து 1059 அடி உயரத்தில் இருக்கிறோம் என்று காட்டியது. பிரயாணிகள் தங்குவதற்கென அமைந்த கொட்டகையில் தங்கினோம். உணவை முடித்துக்கொண்டோம். திருமுறை ஒலிப்பதிவு நிகழ்ந்தது. தேநீர்க்கடைகளும் அங்கிருந்தன. இதற்குள்ளே கீர்த்தி நகரிலிருந்துவரும் ஊர்தித்தொகுதியும் வந்துவிட்டது. அரகர முழக்கத்துடனும் கேதாரநாத்கி ஜே முழக்கத்துடனும் மீண்டும் புறப்பட்டது எங்கள் ஊர்தி.

## தேவப் பிரயாகை :

தேவப் பிரயாகை செல்லும்போது பகல் 11 மணி; இரண்டு மூன்று கல் தொலைவில் உந்தூர்தி வரும்போதே தேவப்பிரயாகையின் முழுத் தோற்றமும் கண்ணுக்குப் புலனாவதாயிற்று. கடல் மட்டத்துக்கு 1690 அடி உயரத்தில் தேவப் பிரயாகை இருக்கிறது. பாகீரதியும் அலகநந்தாவும் கூடும் சங்கம கட்டத்துக்கு மேலே அடுக்கடுக்காக அமைந்த கட்டிடங்கள் பலவும், சங்கமத்தில் ஒரு பெரிய ஆலயமும், உச்சியிலே இரண்டு ஆலயங்களும், சுற்றிலும் நெடிய மலைச் சிகரங்களும் மலைக்காடுகளும் ஆக இப்படிக் காட்சி யளிக்கிறது அந்த ஊர். அலகநந்தாவும் பாகீரதியும் சேர்ந்து செல்வதற்குக் கங்கை என்று பெயர். தேவப்பிரயாகையின் இக் கரையில் உந்தூர்தி நிலயம் இருக்கிறது. அங்கு இரண்டு புறமிருந்தும் வரும் உந்தூர்திகள் தங்குவதற் கேற்றவாறு சாலை அகலமாக இருக்கிறது. இரு தொகுதிகளும் அங்கே வந்து சேர்ந்து கொண்டிருக்கின்றன. ஒரு பெரிய சந்தைக் கூட்டம். பதரி, கேதாரம் செல்லுவோர்க்கு உதவிசெய்ய முன்வரும் பண்டாக்களுடைய ஏஜண்டுகளும் கூலிகளும் அவ்வளவு பெரிய கூட்டமாக சேர்ந்திருக்கிறார்கள் என்பது பிறகு தெரியவந்தது.

## கம்பியில்லாத் தந்தி :

நாங்கள் கேதாரம் புறப்பட்டு வருவது குறித்து யாரிடமும் காசியில் சொல்லிக் கொள்ளவில்லை. ஆனால் நாங்கள் வரும் செய்தி கேதாரத்தி லுள்ள பிரபலமான நரஹரி சாஸ்திரி என்னும் பண்டாவுக்கு எப்படியோ தெரிந்து அவருடைய தேவப்பிரயாகை ஏஜண்டுக்குக் கடிதம் எழுதி யிருந்தார். மதராஸி மகந்த் இருவர், கேதார யாத்திரையை மேற்கொண்டு வருகிறார்கள். அவர்களை உந்தூர்தி நிலயத்தில் சந்தித்து அவர்களுக்கு வேண்டியவசதிகளைச் செய்து கொடுக்கவும்' என்று சாஸ்திரியார் கடிதம் எழுதியிருந்தார். எங்களைக்கண்டதும் அவருடைய ஏஜண்ட் இக் கடிதத்தைக் கொண்டுவந்து காட்டி, "தங்களுக்கு நான் எந்தவிதத்தில் உதவிசெய்யவேண்டுமென்பதைத் தயவுசெய்து கூறுங்கள்"? என்றார். நாங்கள் அவரிடமிருந்து எதிர்பார்க்கக் கூடிய உதவி ஒன்றும் இல்லை; ஆகவே, எங்களுடைய நன்றியை நரஹரி சாஸ்திரியார்க்குத் தெரிவித்து உதவி எதுவும் தேவையில்லை என்று அவர்க்கு எழுதிவிடும்படிச் சொல்லிச் சென்றோம். நரஹரிசாஸ்திரியார் பெரிய வழக்கறிஞர். நல்ல சொத்துக்காரருங்கூட. இருந்தாலும் கேதாரயாத்திரைசெல்லும் யாவருக்கும் உதவிசெய்யும் நோக்கத்தோடு பல பெரிய க்ஷேத்திரங் களிலும் கிளை அலுவலகங்கள் வைத்து ஒரு சிறு ஊதியத்திற்கு உதவி செய்தும் வருகிறார். இதைப்போல யாத்திரிகர்கள் வருவதை எப்படியோ தெரிந்துகொண்டு அவர்கள் வருகைக்குத் தக்க வசதிகள் செய்வதற்குத் தயங்குவதில்லை அந்தப் பண்டாக்கள்.

தேவப்பிரயாகையிலிருந்து கங்கோத்ரி யமுனோத்ரி போவதற்குப் பாகீரதியின் வலதுகரையிலே நடைவழிப்பாதை போகிறது. எங்கள் ஊர்தி புறப்பட்டது. பாகீரதியின் பாலத்தின் வழியே தாண்டிச்சென்று மலையின்மீது வளைந்து வளைந்து ஏறி அலகநந்தாவின் வலதுகரையில் போகத் தொடங்கியது.

இதுவரை வந்த வழியைவிட இந்த வழியில் வளைவும் நெளிவும் அதிகம். கங்கைக் கரையிலே உந்தூர்தி வரும்போது சில இடங்களில் மட்டும் ஒருபுறம் பாதாளத்தில் ஆறு ஓடுவது போலவும், ஒருபுறம் வான் முகடுமுட்டிய மலைகளுமாகக் காட்சியளித்தன.

## கண்ணும் பூச்சி

அலக நந்தாவின் கரையில் உந்தூர்தி செல்லத் தொடங்கியதும், காட்சி முற்றிலும் மாறிவிடுகிறது. எதிர்ப்புறத்திலே அலக நந்தாவின் இடது கரையிலே உயரமான மலைத்தொடர். அந்தவழியாகக் கேதாரம்

போகும் கால்நடைவழி செல்கிறது. நடுவிலே ஆறு. உந்தூர்தி செல்லும் வலது கரையிலும் ஒரு பெரிய மலைத்தொடர். ஊர்தி விரைந்து செல்லுகிறது. பலப்பல இடங்களில் ஆறு நமக்குப் பலப்பல வாறுகக் காட்சியளிக்கிறது. அது நமக்குக் கண்ணும்பூச்சி விளையாட்டுக் காட்டுவதுபோல இருக்கும். ஒருசமயம் ஆழ்ந்த - அகன்ற ஆறுகத் தோன்றும். ஓரிடத்திலே ஒடுங்கிய - சலசலப்போடு கூடிய சிற்றுறுகத் தோன்றும். பல இடங்களிலே ஆற்றின் நடுவில் அமைந்த குண்டுக் கற்களின் மேல் குதித்தோடும். சில இடங்களிலே கண்ணுக்குப் புலப் படாமலே போய்விடும். இவ்வாறுக நம்முடைய கண்ணுக்கு விளையாட்டுக் காட்டிக்கொண்டே செல்லும் அந்த நதி.

## கடவுட் சிந்தனை :

இரண்டு மலைத் தொடர்களிலும் பசுமையான காடு உண்டாக்க மரம் வைத்துப் பயிர் செய்கிறார்கள். தட்டுத்தட்டாகக் கோதுமை வயல் களும் சீராக்கப்பட்டிருக்கின்றன. வெயில் உறைக்கத் தொடங்கியது. நடுப்பகல் நேரம். எல்லோருக்கும் சோர்வு ஏற்படக் கூடிய வேளை. கேதாரப் பதிகத்தைத் தொடங்கி உருக்கமாகப் பாடினுர். மேலும் கந்தரனுபூதியைமுழுதும் பாடி, அபிராமிஅந்தாதியையும் பாடினுர். மிகமிக உருக்கமாக அமைந்தது அந்த இசை விருந்து. அது எல்லோருடைய உளத்திலும், உயிரிலும் தண்மையையும் இனிமையையும் உண்டாக்கியது. இவ்வாறுகக் கலையும், காட்சியும், கடவுட் சிந்தனையுமாகப் பயணம் வழியோடு சென்றுகொண்டிருந்தது. தேவப்பிரயாகையிலிருந்து வரும் வழியில் ஓர் இடத்தில் கடல் மட்டத்திலிருந்து 3000 அடி உயரம் என்று குறித்திருந்தது.

## சிறு பூசல் :

பொதுவாக வண்டிநிற்கு மிடங்களில் பிரயாணிகள் எல்லோரும் இறங்கித் தங்களுக்கு வேண்டிய சிறு வசதிகளைச் செய்துகொண்டு ஓய்வும் பெற்று வண்டி புறப்படும் சமயம் ஏறிக்கொள்வது வழக்கம். அவ்வாறே இயற்கைநியதிகளை முடித்துக்கொண்டு (தேவப்பிரயாகையில்) சாயா அருந்தி வண்டியேறினேம். எங்களோடு ஆந்திரா ஆசிரமத் திலிருந்து இரண்டு மூன்று கிழவிகளை அழைத்துக் கொண்டு குடும்பத் தோடு ஆந்திரநாட்டார் ஒருவர் வந்துகொண்டிருந்தார். ரிஷிகேசத் திலேயே அவர்கள் உடன்வந்த கிழவிக்குச் சுரம் வந்துவிட்டது. நடுக்கிக் கொண்டே காரிலே வந்தார்கள். இருப்புக்கொள்ளவில்லை. இரண் டொருவர் இருக்கையைவிட்டுக் கீழே உட்கார்ந்துகொண்டு நோயாளி களைப் படுக்கவைத்தார்கள். உந்தூர்தியும் ஓடிக்கொண்டிருக்கின்றது.

மேலே கூறியபடி சிறுவசதிகளைச் செய்துகொண்டு எங்கள் கோஷ்டியார் உந்தூர்தியி லேறினோம். ஆந்திரர் எங்களவர் உட்கார்ந்திருந்த இடத்தில் வசதியாகத் தானும் தன் மனைவிடும் காலைப் பரப்பிக்கொண்டு உட்கார்ந்திருந்தார். நன்றாகப் படித்தவராகவும் உலக அநுபவம் பெற்றவராகவும் தோன்றியது. ஆனால் பொது இடத்தில் பழகத் தெரியாதவர். நாங்கள் எவ்வளவு சொல்லியும் அவர்பக்கத்தில் அமர்ந்திருந்த எங்களவருக்கு இடமும் கொடுக்கவில்லை. நாங்கள் சொல்லுவது காதில் விழுவதுபோலக் காட்டிக்கொள்ளவும் இல்லை. சுயநலம் அவரைக் குருடாகவும் செவிடாகவும் ஆக்கிவிட்டது. எங்களவர் எவ்வளவுநேரம் பொறுப்பர்? பொறுமை எல்லை மீறியது. வேகமாக அவர்மடியில் போய் உட்கார்ந்தார். ஆந்திரருக்குக் கொஞ்சம் புத்திவந்தது. முணுமுணுத்துக்கொண்டே காலைச் சற்று ஒடுக்கிக்கொண்டார். அந்தப்பதிவிலே எங்களவர் உட்கார்ந்தார். காரோட்டத்திலேற்பட்ட ஆட்டத்தில் வசதியாக உட்காருவதற்கு அவருக்கு முடிந்தது. உந்தூர்தி செல்லச்செல்ல ஓதுவாமூர்த்திகளுடைய பக்திப் பரவசப் பாடல்கள் எங்களை அப்பக்கம் இழுத்தது. கொஞ்சநேரம் கழித்துத் திரும்பிப்பார்த்தேன். என்னருகில் உட்கார்ந்திருந்த எங்களவர் ஒருவரும் அவர் எதிர்ப்புறத்து இருக்கையிலமர்ந்திருந்த ஆந்திரரும் காலாலேயே உதைத்து உதைத்துப் போரிட்டுக்கொண்டிருந்தனர். வாய்ப்பேச்சில்லை. மௌனமாகவே நடந்தது அந்தப் போர். நான் அவருக்குச் சொன்னேன்! ' மனமடங்க - நம்முடைய தீய சக்திகள் குறைந்து நற்சக்திகள் பெருகி நன்மையடைவதற்காக 1000, 2000 மைல்களுக்கப்பாலுள்ள பதரியை - கேதாரத்தை நாடிச் செல்கிறோமே; புண்ணிய பூமியில் - தவப் பெருஞ் சாலையில் நாம் நுழைந்தும் நம்மை விட்டபாடில்லையே இத்தீய குணங்கள் ? யாராவது ஒருவர் பொறுத்துப்போயிருந்தால் இந்தப் பூசலுக்கு வழி இல்லையல்லவா ? ' என்றேன். ஒருவாறாக அது அந்த நிலையிலேயே ஓய்ந்துவிட்டது. பூனையும் எலியுமாக இருந்த அவ்விருவரும் கீர்த்திநகர் வந்து காரைவிட்டிறங்கியவுடனே பகைமை மறந்து நண்பர்களானார்கள். ஒருவருக்கொருவர் மணி என்ன என்றார்; எங்கே போகிறீர் என்றார். இவ்வாறு குசலப்பிரச்னம் தொடங்கிவிட்டது அவர்களிடத்திலே.

## கீர்த்திநகர் வந்தோம் :

மாலை மணி 2. எல்லோரும் இறங்கி அவரவர்களுடைய மூட்டைகளைத் தூக்கிக்கொண்டு அலகநந்தாவின் அக்கரையில் உள்ள ஸ்ரீ நகர் செல்லும் உந்தூர்தி நிலையத்துக்குச் சென்றோம். அலகநந்தாவில் இங்கே ஒரு தொங்குபாலம் அமைத்திருக்கிறார்கள் அரசாங்கத்தார். அதன்வழியே சென்றோம். அரைக்கல் தொலைவேயாயினும், வெயிலின் கடுமையும் வழியிலே உள்ள ஏற்றம் இறக்கங்களும் எல்லோருக்கும் அயர்ச்சி

யைக்கொடுக்கக் கூடியதாக இருந்தது. ஆனால் அரசாங்கத்தார் மக்கள் நலம் கோரி உந்தூர்தி இக்கரைக்கும் வரக்கூடியதாக அவ்விடத்திலே பெரிய பாலம் ஒன்று அமைத்துவருகிறார்கள். வேலை வேகமாக நடக்கிறது. இக்கரைவந்தோம். தங்குவதற்குக்கூட நிழல் இல்லை அங்கே. ஸ்ரீ நகரிலிருந்து உந்தூர்திகள் வருகின்றன. யாத்திரிகர்கள் அடித்துப்பிடித்து அவற்றில் ஏறிக்கொள்கிறார்கள். நாங்களும் ஒரு உந்தூர்தியிலே இடம் பிடித்தோம் எங்கள் உந்தூர்தியும் ஸ்ரீ நகர் எல்லையை அடைந்தது.

## ஸ்ரீ நகர் :

டெஹ்ரிகார்வால் ஸ்டேட்டினுடைய தலைநகரம். இந்த சமஸ்தானம் இப்போது உத்தரப்பிரதேச ராஜ்யத்தோடு சேர்ந்துவிட்டது. பொதுவாக உத்தரகண்ட யாத்திரையிலுள்ள எல்லா இடங்களும் இந்த டெஹ்ரி கார்வால் சமஸ்தானத்தைச் சேர்ந்தவையே. மன்னராட்சியில் இருந்த போதே யாத்திரிகர்களுக்கு ஆங்காங்கு பல வசதிகளைச் செய்துதந்திருக்கிறார்கள். எல்லாவற்றிற்கும் மேலாகக் கூலி அமைப்பு அலுவலகமும் அமைத்து, அதற்கு அலுவலர்களைத் திட்டம் செய்து, மூட்டைதூக்கிகளைப் பதிவுசெய்து, பிறகு பதிவுசெய்யப்பெற்ற கூலிகளே யாத்திரிகர்களுக்கு மேலே செல்ல உதவவேண்டும் என்ற திட்டத்தையும் ஏற்படுத்திவைத்துள்ளார்கள். பதிவுபெறாத கூலிகளை அமர்த்திச்செல்வோர் அவரவர் சொந்தப் பொறுப்பிலே அழைத்துச் செல்லவேண்டும். அவ்வாறு செல்வதால் ஏற்படும் இன்னல்களுக்கு அரசாங்கம் பொறுப்பானதல்ல.

அங்கே ஒரு சவுக்கி. உள்ளே நுழைய ஆள்வரி உண்டு. சுகாதாரச் சான்றுகளை இங்கேயும் சோதனை செய்தார்கள். முடிந்ததும் ஸ்ரீநகருக்குள் சென்றடைந்தோம். பதரி, கேதாரம் செல்லும் வழியிலே இந்தஊர் பெரிய நகரம்.

ஹரத்துவாரிலிருந்து நாங்கள் வந்தது போல கோத்வரா என்ற இடத்திலிருந்தும் உந்தூர்திகள் இங்கே வருகின்றன. இங்கிருந்து பத்ரி கேதாரம் வழியிற்செல்லும் உந்தூர்திகளும், கீர்த்தி நகருக்குச் செல்லும் உந்தூர்திகளும், கோத்வாராவுக்குச் செல்லும் உந்தூர்திகளும் ஆக பல ஊர்களுக்கும் ஊர்திகள் செல்கின்றன. பத்ரி கேதாரம் செல்வோர் இங்கே உள்ள உந்தூர்தி நிலையத்தில் சீட்டுக்கள் பெற்று மீண்டும் ஊர்திகளில் இடம்பிடிக்கவேண்டும். கேதாரம் செல்வோர் உருத்திரப்பிரயாகை வரை சீட்டுப் பெற்றுக்கொள்ளவேண்டும். பதரி செல்வோர் 'பிபல் கோட்டி' வரை சீட்டுப்பெற்றுக்கொள்ளவேண்டும். மாலை 3-30 மணிக்கு ஒருவழியாக எங்கள் ஊர்தியும் உருத்திரப்பிரயாகை வழியிலே செல்லத்

கேதாரயாத்திரை :



மலையை உடைத்து வழி



நடைவழி ஏற்றம்

தொடங்கியது. இதுவும் மலைவழியிலே ஒருவழிப்பாட்டை. ஸ்ரீ நகர் எல்லையைத் தாண்டியவுடன் கடல் மட்டத்திலிருந்து 2,000 அடி உயரத்தில் இருப்பதை உணர்ந்தோம்.

## சாலைவழிச் சந்திப்பு

10 கல் தொலைவு சென்றதும் எதிர்ப்புறத்திலிருந்து வரும் உந்தூர்திகள் மாற்றிக்கொள்வதற்காக அகலமான சாலைவழி அமைக்கப்பெற்றிருக்கிறது. அங்கே இருவழித் தொகுதிகள் வந்து அவையவை தங்கள் தங்கள் வழியிலே செல்லத் தொடங்கின. இந்தப் பாதையும் தேவப் பிரயாகை வழிபோல அலகநந்தாவின் கரை ஓரத்திலே வளைந்தும் நெளிந்தும் செல்லுகிறது. காட்சிகளும் முன்போலவே. கால்நடைப் பாதையும் இங்கேவந்து சேருகிறது. பெரும்பாலும் உந்தூர்திப் பாதை வழியை ஒட்டியே கால்நடை வழியும் செல்கிறது.

## உருத்திரப் பிரயாகை :

மாலை மணி 5-30க்கு உருத்திரப்பிரயாகை வந்து சேர்ந்தோம். மூட்டை முடிச்சுகளைத் தூக்கிக் கொண்டு பாபா காலா கம்பளி வாலா சத்திரத்தை நோக்கி இடம்பிடித்துக் கொள்ள விரைந்து ஓடினோம்; உந்தூர்தி நிலையத்திலிருந்து அந்தச்சத்திரம் 4 பர்லாங் இருக்கும். அலகநந்தாவைத் தொங்குபாலம் மூலமாகக் கடந்து அக்கரையில் மலைவழி சென்று சத்திரம் அடையவேண்டும்.

## பாறைகள் பறந்தன :

உருத்திரப்பிரயாகையிலிருந்து குப்தகாசிவரை 24 கல் தொலைவுக்கு உந்தூர்திப்பாட்டை அமைக்க வேலைகள் மும்முரமாக நடைபெறுகின்றன. மலைகள் உடைக்கப்படுகின்றன. பாதைகள் சீர்செய்யப்படுகின்றன. உருத்திரப் பிரயாகையில் ஒரு குகைப் பாதையும் அமைக்கப்பெறுகிறது. பாலங்கள் கட்டப்பெற்று வருகின்றன. ஆயிரக்கணக்கான மக்கள் வேலை செய்துவருகிறார்கள். மலைவழியிலே ஒரு சிறு தொலைவு செல்வதற்குள் எங்களைக் கொடி காட்டி நிறுத்தினர் ஒருவர். சற்று நேரத்துக்கெல்லாம் ஒரு பெரிய வெடிச்சத்தம்; பாறைகள் தூள் தூளாகி வெடித்துப் பறந்தன. காட்சி என்னவோ அருமையாக இருந்தது. ஆனால் பயங்கரம். சற்று நேரம் ஒரே புழுதிப்படலம். மெதுவாக நாங்கள் அந்த இடிபாடுகளினூடே ஏறியும் இறங்கியும் சத்திரத்தை அடைந்தோம்.

இருட்டும் நேரம்; எங்களுக்கு முன்னே அங்கு பெருங் கூட்டம்; பெரும் பகுதியும் அடைத்துக்கொண்டிருந்தது. எங்களுக்கு மேல்தளத்திலே இட வசதி செய்துகொடுத்தார் சமுக்கிதார். ஆனால் தரையெல்லாம் புழுதி ஒரு நெடி நாற்றம்; எப்படியோ அங்கே இடம் பிடித்துக்கொள்வதற்காக எங்கள் படுக்கைகளை விரித்துக்கொண்டோம். ஒரு வழியாக இடமும் கிடைத்தது. இரண்டு ஆறுகள் கலக்கும் அந்த இடத்தில் குடிதண்ணீருக்கு வசதி இல்லை. ஒரு சொம்பு தண்ணீர் வேண்டுமானாலும் ஒரு பெரும் ஆழத்தில் நூற்றுக்கணக்கான படிகள் இறங்கி மேலே கொண்டுவருவதற்குள் மூச்சு வாங்கிவிடும்.

## நதிசங்கமம் :

இங்கே மந்தாகினி, அலகநந்தா இரண்டும் சேருகின்றன. ஒரே வேகம். நீண்டநாள் பிரிந்த சகோதரிகள் எங்கேயோ எதிர்பாராது சந்தித்தால் எப்படி தலைகால் புரியாமல் ஓடிக் கட்டித்தழுவி ஒரே அன்பு மயமாக ஆகிவிடுவார்களோ அப்படி இருந்தது அந்தக் காட்சி. காவிரி கடலோடு கலக்குமிடத்தில் 'தாய்முலை தழுவிய குழவிபோலக் கலந்து ஒன்றுபட்டது' என்று பட்டினப்பாலை கூறும் கற்பனை அழகு இந்த சங்கமத்தை எண்ணினால் நமக்கு வாராமற்போகாது. பார்க்கப்போனால் பக்கத்துப் பக்கத்து மலைச்சிகரமான கேதாரம் பத்ரி உச்சிகளிலிருந்து ஓடிவரும் இவ்விரண்டு ஆறுகளும் இங்கே கலக்கின்றன. மந்தாகினி தெளிந்த நீரை உடையது. அலகநந்தா கலங்கலான நீரை உடையது. ஆறுகள் கூடுமிடத்தில் கவனமாக நீராடவேண்டும். இல்லையேல் பல கல் தொலைவுக்கப்புறம்தான் நம் சடலம் தெரியும் வெளியே. அவ்வளவு வேகமான இழுப்பு. சங்கமமாகும் இடத்தில் 'உருத்திரேசுவரர் ஆலயம்' அமைந்திருப்பது அந்தக் கட்டத்துக்குப் பேரழகு செய்வதாக இருக்கிறது.

## கால்நடை தொடங்கியது :

ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் இதுவரைக்கும் உந்தூர்தி ஜன நெருக்கத்தில் இருந்ததில்லை யாதலாலும், மலை வழியின் ஏற்ற இறக்கங்களில் ஆடியும் அசைந்தும் குலுங்கியும் வரும் உந்தூர்தியில் நெடுந் தொலைவு வந்த காரணத்தாலும், மௌன உபவாச தினமாக இருந்ததனாலும், உண்ணாவிரதம் ஆகையினாலும் உருத்திரப்பிரயாகை வந்ததும் கொஞ்சம் சோர்வுற்றார்கள். அதிலும் காலா கம்பளிவாலா சத்திரத்தின் காற்றோட்டமில்லாத நெடிநாற்றம்மிக்க அறைக்குள் வந்ததும் அயர்ச்சி அதிகமாகியது. எங்கள் எல்லோருக்கும் கொஞ்சம் கவலையாகவே இருந்தது. பால் வாங்கிக் கொண்டுவந்து கொடுத்தோம். எதுவும் செல்லவில்லை. திருமுறைப் பாராயணம் செய்தோம். அபிராமி அந்தாதி



திருமுறைப்பாராயணம் நடக்கிறது

பாராயணம் செய்தோம். கந்தரனுபூதியும் பாராயணம் ஆயிற்று. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் அயர்ச்சி நீங்கினார்கள். எங்களுக்கும் உள்ளம் மலர்ந்தது. வழிவந்த களைப்பால் நாங்களும் பின் கண்ணயர்ந் தோம். இவ்வாறு அன்றிரவு கழிந்தது. மறுநாள் வெள்ளி; பாரணை தினம்; பாரணையை முடித்துக்கொண்டு மாலை 2–30 மணிக்குக் கால் நடைப் பாதையிலே கேதாரம் நோக்கிச் செல்லத் தொடங்கினோம். அரகர முழக்கம், தென்னாடுடைய சிவனேபோற்றி, எந்நாட்டவர்க்கும் இறைவாபோற்றி, கேதாரநாத் பாபாகி ஜே. என்று எல்லோரும் எங்களை அறியாமலே முழங்கிக்கொண்டே சென்றோம். மூட்டை தூக்கிகளை இங்கே கூலிக்கு அமர்த்திக்கொண்டோம்.

## சுற்றுவழி :

மந்தாகினியின் கரை ஓரமாகிய நேர்வழியிலே சாலைச் சீரமைப்பு நடப்பதால், சாலையில் பல அடைப்புக்கள் இருப்பனவாகச் சொல்லப் பட்டதால் நாங்கள் சுற்றுவழியாக அலகநந்தாவின் கரை ஓரமாக நடக்க ஆரம்பித்தோம். மலையில் முதல்முதலாக நடப்பதால் நாங்கள் மிக எச்சரிக்கையோடு நடந்தோம். எதிரே, குதிரைவரும்; ஆடுகள்வரும்; அவற்றுக்கு மலை ஓரத்திலே ஒதுங்கியும், மூட்டை தூக்கிகளுக்கு வழி விட்டும் வழிநடந்தோம். எங்களோடு சத்திரத்தில் தங்கியிருந்த மற்ற வர்கள் பலரும் முன்னும் பின்னுமாக வந்து கொண்டிருந்தார்கள். இரண் டொரு கல் தொலைவு நடப்பதற்குள்ளாகவே சிலருக்கு அயர்வு உண்டா யிற்று. அவர்களிடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் ‘போலோ கேதார்நாத் பாபாகி ஜே! போலோ’ என்று உற்சாகத்தோடு சொல்வார்கள். அந்தச் சொல்லிலே ஒரு உயிர்நாதம் இருக்கும். சோர்ந்து உட்கார்ந் திருக்கும் கிழவிகளும் துள்ளி எழுந்து கேதார்நாத் பாபாகி ஜே! பதரி விசால்ஜிகி ஜே! என்று முழங்குவார்கள். நடையும் விறுவிறுப்புள்ளதாக இருக்கும். இவ்வாறு வழியெல்லாம் சிவமுழக்கத்தோடு நாலேமுக்கால் கல் தொலைவில் வரவேண்டியதை ஆறேமுக்கால் கல் தொலைவில். ஆறு மணிக்கு எட்டிப்பிடித்தோம். காரணம் ஒருமலை ஏறி இறங்கி வரவேண்டிய ஒரு சுற்று வழி. சதோலி ஒருகல் தொலைவில் இருக்க நாங்கள் வந்தவழி மந்தாகினிக்கரையை அடைந்தது.

## சதோலி :

சதோலிச்சட்டி மிக அழகான சூழ்நிலையில் அமைந்துள்ளது. நாங்கள் தங்கியிருந்தஇடம் மனம்நிறைந்த காட்சி அளிக்கவல்லது. பக்கத்திலே சிற்றருவி; தண்ணீர் ஓடியவாறே இருக்கும். பின்பக்கத்தில் மிக ஆழமான இடத்தில் மந்தாகினி ஆறு மெல்லத் தவழ்ந்துசெல்லும்.

அக்கரையிலே அடுக்கடுக்காகத் தெரியும் கோதுமைவயல்களினூடே ஒரு சிறு கிராமம். இந்தப்பக்கத்திலே பசுமையான மரங்கள் அடர்ந்த ஒரு பெருமலை. நாங்கள் கண்ட காட்சி இது.

## தேள் :

எங்களுக்கு ஆற்றங்கரையிலே மிக உயரமான இடத்திலே ஒரு மேல் தளத்திலே தங்க இடவசதி செய்யப்பெற்றிருந்தது. மலைவழியில் முதல் இரவு. மேடையில் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களுக்கு ஓய்வெடுக்கப் படுக்கையை விரித்துப்போட்டோம். மேலேயிருந்த ஒரு நல்ல சினைத்தேள் அதில் விழுந்தது. எல்லோர்க்கும் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. அதை அடித்துவிடச் சிலர் முயன்றனர். ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களின் கவனத்துக்கு இது சென்றது. 'தேள் வருவது நல்ல சகுனமாயிற்றே; அதைக் கொல்லாதீர்கள். அதை எடுத்துச்சென்று தொலைவிலே விட்டுவிடுங்கள்' என்று பணித்தார்கள். அவ்வாறே செய்தோம். இருந்தாலும் எங்களுக்கு இரவில் நல்ல தூக்கம் வரவில்லை; அதனோடு ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் 'மலைவழியிலே வந்து விட்டோம். இரவு 10 மணிக்குமேல் கரடிகள் முதலிய வனவிலங்குகள் இப்பக்கம் வரவும்கூடும். ஆகையால் யாரும் வெளியே இரவு நேரத்தில் தனியே செல்ல வேண்டாம்' என்று சொல்லிச் சென்றார்கள். இது ஒரு புறம் எங்களுக்கு அச்சத்தை விளைத்தது. மழை இலேசாகத் தூறத் தொடங்கியது. நாங்கள் யாரும் இரவிலே வெளியில் செல்லவே இல்லை. இரவை அங்குக் கழித்தோம்.

## கரடி :

இரவு உணவுக்குப்பின் எல்லோரும் படுத்துக்கொண்டோம். எங்கள் சிந்தனை சுழன்றது. ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் சொன்ன கரடி எங்கள் மனத்திலே சுற்றிச் சுற்றிவந்தது. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் அருமையாக ஒரு சித்திரம் எடுத்துச்சொல்லி அருள்வார்கள். மிக இனிமையான வருணனை.

நல்லதொரு பூஞ்சோலையிலே ஒரு அழகிய உயரமான தழைத்த கொன்றை. அதிலே சரஞ்சரமாக மஞ்சள்நிறப்பூக்களும், மொட்டுக்களும். கீழேயிருந்து ஒரு மிளகுக்கொடி. கொன்றையைச் சுற்றிச் சுற்றி ஏறித் தழைந்து நின்றது அந்தக்கொடி. கீழே அடிமரத்தைச்சுற்றி முல்லைப் புதர்; அதன் நிழலிலே படுத்திருக்கிறது ஒரு கரடி. ஒரு சிவனடியாரின் சிந்தனையைத் தூண்டியது இந்தக்காட்சி. அவர் அங்கே கண்டார் கயிலைக் காட்சியை. அவர்கண்டகாட்சி: பரம்பொருள், பராசக்தியுடன் கயிலை மலையிலே வீற்றிருக்கிறார். அந்த மலையைப் பெயர்த்தெடுக்க இராவணன் அடிவரையில் உந்துகிறான். இப்படிக்கண்டது அவருடைய

ஞான இதயம்; அங்கே கொன்றைமரம் அப்பனுகவும், மிளகுக்கொடி அம்மையாகவும், முல்லைப்புதர் கயிலைமலையாகவும், கரடி இராவண னுகவும் இப்படியே ஒப்பிட்டது அவருடைய திருவுள்ளம். இந்தக் காட்சியைக் கண்ட பெரியார் மாதவச் சிவஞான சுவாமிகள். கண்டது காஞ்சிப்புராணத்தில்; உண்டாகிய கரடி பயம், இப்படி இலக்கியச் சிந்தனையில் எங்களைக் கொண்டுவந்து ஆழ்த்திவிட்டது.

## இரண்டாம் நாளில் :

மறுநாள் மாலை விடியல் 4 மணிக்கு எழுந்து நியமங்களை முடித்துக் கொண்டு மேலே சென்றோம். பொழுது விடிய விடியப் புறக்காட்சிகள் மிகமிக அழகாக எங்களுக்கு இருந்தன. இது இரண்டாம்நாள் பயணம். வந்தநாளை விட இந்தநாள் காணும் காட்சிகள் எங்களுக்கு மிகமிக அழகிய தாகத் தோன்றின.

## 'எண்ணிச்சாப்பிடுக, எண்ணிச்செலவு செய்க' :

வழியிலே மிக உற்சாகமாகப் பேசிக்கொண்டு சென்றோம். எங்களுக் கெல்லாம் படிப் பணம் கொடுத்தார்கள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள். 'இது சொக்கன் காசு; இதை எண்ணிச் செலவு செய்யுங்கள். (எண்ணி இரண்டு பொருள் தொனிக்கிறது) அவசியம் வேண்டியவற்றை வாங்கிக் கொள்ளுங்கள். வீண் செலவு செய்யாதீர்கள்' என்றார்கள். பிறகு உணவு நியமம் பற்றிப் பேச்சு வந்தது. 'எண்ணிச் சாப்பிடுங்கள்' என்றார்கள். மனிதனுக்கு உயிர் வாழ்க்கைக்குச் சாப்பிடவேண்டுமே ஒழிய உண்டு களித்திருப்பது கூடாது; அது வெறும் ஊன்வாழ்க்கை; 'உண்டுகளித்திருப்போரை நிந்தனை செய்வோம்' என்றார் பாரதியாரும்; ஆதலால் பசி எடுக்கும்படியாக உழையுங்கள். நாக்குக்கு உருசி தேடாதீர் கள். உடலுக்கு இன்றியமையாது வேண்டிய அளவு உணவைச் சாப்பிடுங்கள்; மிதமான வாழ்க்கை சுகந்தரும்' என்று சொன்னார்கள். இப்படி எங்களுக்கு உபதேசம் நடந்தது.

## "உயிரை ஓம்புக, உடலையும் ஓம்புக" :

எங்களிற் சிலர் தலையில் துணிகட்டிக்கொள்ளாமல் செல்வதைக் கண்டார்கள். 'இது உங்களுக்கு ஊறு விளைக்கும்; நடையிலே உங்கள் தலையிலும் வேர்க்கும்; பருத்தித் துணியைத் தலையிலே கட்டுங்கள்; அது வியர்வையை நன்றாக உறிஞ்சிவிடும். வெயிலின் வெப்பமும் தாக்காது. தங்குமிடங்களைச் சேர்ந்ததும் காலைச் சுத்தமாக்கிக் கொள்ளுங்கள். டெட்டால் போன்ற கிருமிநாசினிகளைக் காலிற் பூசுங்கள். காற்றடிக்கு

மிடத்திலே ஓய்வெடுத்துக்கொள்ளுங்கள். வியர்வை மறைந்ததும் ஆற்றிலே நீராடுங்கள். அதற்குமுன்பு உடம்பெல்லாம் எண்ணெய் தடவிக்கொள்ளுங்கள். ஆற்றிலே வரும் தண்ணீர் இனி மேலேபோகப் போகக் குளிர்ச்சி அதிகமாக இருக்கும். எக்காரணத்தைக்கொண்டும் அதிலே அமர்ந்திருந்தோ அல்லது நீந்தியோ விளையாடாதீர்கள். நீச்சல் எப்போதும் ஆபத்தானது இங்கே. அதிக நேரம் தண்ணீரில் தங்குவதால் மிக உஷ்ணப் பிரதேசத்திலிருந்து வந்த நமக்குப் பனி உருகிவரும் ஆற்று நீர் ஊறுவிளைக்கும்; ஆகையால் ஒரு குறிப்பிட்ட கால அளவிலே எல்லாவற்றையும் முடித்துக்கொள்ளுங்கள். யாத்திரை வழியிலே யாரோ ஒருவர்க்கு உடல்நலம் கெட்டுத் தங்கும்படி நேர்ந்தால் யாத்திரை செய்யும் கோஷ்டிமுழுதும் அவருக்காக உடல்நலம் பெறும்வரை எங்கேயாவது தங்கும்படி நேரும். ஆகையால் உடம்பையும் பார்த்துக்கொள்ளுங்கள்' என்று கூறியருளினார்கள்.

## ஒரு காட்சி :

நாங்கள் செல்லும் வழியிலே குழந்தைகள், இளைஞர்கள், வாலிபர்கள் கிழவியர்கள் பலரும் ஜே முழக்கம், ஆடல், பாடல முதலியவைற்றை அவரவர் மொழிகளில் நிகழ்த்தி வந்தனர். உற்சாகமாகச் சென்றனர். மலைசாதிக் குழந்தைகள் யாத்திரிகர்கள் செல்லும் வழியில் நின்று கேதார நாதர், பதரி விசால்ஜி இருபெருந் தெய்வங்களைக் குறித்து மங்களகீதம் இசைத்து, ஆடியும் பாடியும் மகிழ்ச்சி யூட்டுகின்றார்கள். இது திருமுறை நினைப்பிலே எங்களை இழுத்துச்சென்றது. திருஞானசம்பந்தர் காட்சியளித்தார். காணும் காட்சியெல்லாம் திருவருட்காட்சியாக, செல்லும் பக்தர்கள் எல்லாம் பெருமான் விருத்தனுகி பாலனுகிச் செல்லும் காட்சியாக, அருவியோடு சேர்ந்த அடவி கருத்தனுகிக் கங்கையாளைக் கமழ் சடைமேல் கரந்த வேதமோர் நான்குணர்ந்து அருத்தனுய ஆதிதேவனுகவும், பாடியாடிச் செல்லும் குழந்தைகளும் அடியிணையே பரவும் நிருத்தர்களாகவும் கீதர்களாகவும் காட்சி வழங்கியது.

இவ்வாறு ஆடியும் பாடியும் அமைந்துசெல்லும் அன்பர்களுக்குத் துன்பம்என்பதே இல்லை. அவர்களுடைய இடர் களைவான் நெடுங்களம் மேயபெருமான் என்று நமக்கு அறிவுறுத்துகிறுர். மேலும் சொல்லுகிறுர்; இவ்வாறெல்லாம் செய்வதற்கு என்னபுண்ணியம் நீ செய்தனை, நெஞ்சமே! இதற்கு முற்பிறவியிலே செய்த புண்ணியமும் வேண்டும்; எதனுல்? பெருமானை வாயாரப் பன்னி ஆதரித்து ஏத்தி வழிபடுகிற அதனுலே! நல்வினை என்று சொன்னேமே! நல்வினைசெய்த நெஞ்சம், நன்னெஞ்சம். நிலையில்தடுமாருது இருக்கவேண்டுமே! அதற்கும் ஒரு அறிவுரை. யாரறிவார் உன் வாழ்நாளை சாநாளை? ஆகையினுலே நீ நாளும் நினைகண்டாய்.

வெறும்நினைப்புப்போதாது. தொண்டும் வேண்டும். தலை பூசுமப்ப, உன் செவிஅவன் புகழையும் நாமத்தையும் கேட்ப, நாளும் நாவின்றேத்த நல்வினை இருக்கிறது; அது உனக்குப் பரமேட்டியின் பாதத்தைக் காட்டும். திருவடி கண்டவரை ஓங்கினர்! ஓங்கினர்!! என உரைக்கும் உலகம்.'' வழிநெடுக அன்று எங்களுக்கு சம்பந்தப்பெருந்தகையார் அருளிய அருளுரை இது. (எங்கே நீங்களும் திருமுறையைப் புரட்டுங்கள்.) இவ்வாறு சிந்தனை சிறக்க நடுவழியிலே பாலகேதாரம் (தலம்) காட்சியளிக்க வந்தவழி எங்களை அகஸ்திய முனிச்சட்டியிற் கொண்டு சேர்த்தது.

## அகஸ்திய முனிச்சட்டி :

பாபாகாலா கம்பளிவாலா சத்திரத்தில்வந்து தங்கினோம். அகத்தியன்-சந்தனப் பொதியந் தடவரைச் செந்தமிழ்ப் பரமாசாரியனாகிய அப்பெருமான் இங்கு தவமிருந்து தமிழேயானான். தமிழென்றால் உயிர் முருகன். அகத்தியனுடைய வழிபடு தெய்வம் முருகன். முருகன் கார்த்திகேயன் என்ற மூர்த்தமாக எழுந்தருளியிருக்கிறான்* மலை மேலே. இதுவரை வந்த வழியிலும் இனிப் போகும் வழியிலும் கோழியை நாங்கள் பார்க்கவில்லை. ஆனால் இங்கே ஒரு அழகான வெள்ளைச்சேவல் கூவிக் கொண்டிருப்பதைக் கண்டோம், கேட்டோம். முருகன் கோழிக் கொடியோனல்லவா? ஆகவே எல்லாம் தமிழ் மயமாகவே எங்களுக்கிருந்தது. தமிழ் அங்கே எவ்வளவு இனித்தது என்பதை அநுபவத்தாலேயே அறிய முடியும்.

## வடக்கும் தெற்கும் :

சொல்வார்கள் வடகோடுயர்ந்தென்ன தென்கோடு தாழ்ந்தென்ன என்று. ஆனால் வடகோடுயர்ந்து தென்கோடு தாழ்ந்து உலகம் இருக்க சமமாகவே இருக்கவேண்டும் என்று நம் முன்னோர்கள் கருதினர். இதுவே ஒரு தெய்வ வாக்காகத் திகழ்ந்தது. பெருமான் எழுந்தருளிச் செய்யக்கூடிய ஒரு செயலைத் தமிழ் முனிவர் அகத்தியர் செய்யமுடிந்தது; வடகோடு தாழ்ந்து தென்கோடு உயர்ந்தது அன்று. நேர்படுத்தத் தமிழ் முனிவர் இறைவன் ஆணைக்கிணங்கத் தென்கோடி சென்றார். உலகம் சமநிலை அடைந்தது என்கிறது புராணம். அடியவர் பெருமை இதனினும் பெரிதோ?

*மலையில் உருத்திராட்சக் காடு உள்ளது.

## பெருமிதம் :

"ஆண்டவன் செய்யவேண்டும். அடியவர் செய்யவேண்டும். வேறு எவராலும் இத்தகு செயற்கரிய செய்கைகளைச் செய்ய முடியாது. செயற்கரிய செய்வோர் பெரியர். அவர் ஒரு தமிழர்." இவ்வாறு எண்ணி எண்ணிப் பெருமிதம் கொண்டோம் நாங்கள். இதனால் கயிலைச் சார்பு வரையும் அக்காலத்திலே தமிழ் வழங்கிற்று என்பதும் உள்ளுறையாக நமக்கு விளங்குவதாயிற்று.

மந்தாகினியில் நீராட்டும், நடுப்பகல் உணவும்முடித்துக்கொண்டோம். சற்று ஓய்வெடுத்துக்கொண்டு மாலை 4 மணிக்கு யாத்திரையைத் தொடங்கினோம்.

## 'பனிமலைச் சிகரம் கண்டோம் :'

அகஸ்திய முனிச்சட்டியிலிருந்து சவுடியாசட்டி தாண்டினோம். எங்களுக்குத் தொலைவிலே பனிமலைச் சிகரங்கள் காட்சியளித்தன. உடன் வந்தவர் சொன்னார், "கேதார மலைச்சிகரம் நமக்குத் திருக்காட்சி நல்குகிறது" என்று. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் அந்த இடத்திலே சிறிதுநேரம் நின்று கேதாரநாதரை நினைந்து பரவசப்பட்டார்கள். ஓதுவாரும் (கேதாரம்) தொடங்கிவிட்டார் "தொண்டரஞ்சு" என்று. அந்தச் சூழ்நிலை எல்லோரையும் உணர்ச்சி வசத்தில் ஆழ்த்தியது. ஆசைப்பட்டுக் காணச்செல்லும் ஐயன் எங்களுக்கு அங்கே ஆனந்தக் காட்சியளித்தான். எல்லோர் மனமும் ஒன்றுபட்டது. பாட்டிசைக்கத் தொடங்கிவிட்டது.

"பனிமலைச் சிகரம் கண்டோம்
பார்வதி பாகன் கண்டோம்
பரமனைக் கண்டோம் கண்டோம்
கண்டறி யாதன கண்டோம்"

இதில் செய்யுளிலக்கணம் காணமுடியாது. ஆனால் எங்கள் உணர்ச்சியினுடைய ஆழத்தைக் காண முடியும். இவ்வாறு இதே உணர்ச்சியிலே சென்றுகொண்டிருந்தோம். மாலை 5-30-க்கு இயற்கை எழில்மிக்க சந்திரபுரியை அடைந்தோம். உண்மையிலேயே சந்திரன் எவ்வளவு தண்மைமிக்கவனோ அதுபோலச் சந்திரபுரியும் தண்ணளி சுரந்து நிற்கிறது ஊர் என்னவோ சிறிதுதான்; ஆனால் முல்லை மொட்டுப்போல. ஊரிலே. இரண்டு அருவிகள். இரண்டு வாய்க்கால்கள். சோலையும் வயலும். ஒரு சிறு கடைத்தெரு. மருத்துவச்சாலை உண்டு ஊர் நடுவே சிறு கோவிலும் உண்டு. மாலை நேரத்திலே மக்கள் பக்தி பரவசத்தோடு பாடி ஆடி நிற்கும் நேரத்திலே அது ஒரு சிறு கந்தர்வலோகம் போலக் காட்சியளிக்கிறது.

கேதாரயாத்திரை: (அகஸ்தியமுனிச்சட்டியில்)



அகஸ்தியராலயம்



அகஸ்தியர்

கேதாரயாத்திரை: (குப்தகாசியில்)



ஸ்ரீ விஸ்வநாதராலயம்

கேதாரயாத்திரை : (அகஸ்தியமுனிச்சட்டியில்)



திருமண ஊர்வலம்



காலாகம்பளிவாலா சத்திரம்



கருடியசட்டியில்



பியாஸிச்சட்டி

## பாவாடைராயர்கள் :

வடநாட்டு யாத்திரை கோஷ்டி ஒன்று அவர்களுடைய குல தெய்வத்தையும் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு தாரை தப்பட்டை சாம்பிராணிச்சட்டி முன்னேவர வந்து சேர்ந்தது. ஆணும் பெண்ணும் சிறுருமாக நூற்றுக்குமேல் இருக்கும் அந்தக்கூட்டம். பாவாடைராயர் பலர் அவர்களுடைய தெய்வத்தைச் சுற்றி அணிவகுத்து வந்தார்கள். ஆலயத்தின் முன்னிடத்தில் தங்கினர்கள். இரவு முழுதும் பஜனையும் பாட்டும் ஆட்ட முமாக இருந்தன. ஒருவர் ஆவேசம் வந்தவர்போல ஒரு அடியைப்பாடி முடிக்கிருர்; மற்றவரெல்லோரும் அந்த அடியை அதே இசையில் பாடுகிருர்கள். இவ்வாருக இராப்பொழுது எங்களுக்கு அங்கே கழிந்தது. நாங்கள் தங்கியது ஒரு கடையின் மேல்தளத்தில். பெரிய கடைகள் இரண்டு இருக்கின்றன. யாத்திரைக்கு வேண்டிய ஆடை உணவுப்பொருள்கள் வாங்கிக்கொள்ளலாம்.

மறுநாள் விடியற்காலம் : எங்கள் யாத்திரையைத் தொடர்ந்தோம், விடியற்காலம் 4 மணிக்கே. பீரிச்சட்டிவரை மந்தாகினியின் இடதுகரை வழியே வந்து பிறகு ஒரு கம்பிப்பாலம் வழியாக ஆற்றைக் கடந்து அக்கரை வழியே செல்லவேண்டும். பீரிச்சட்டி சின்ன ஊர்தான். இங்கு ஒரு சிறு துர்க்கைக்கோயில் இருக்கிறது. எல்லாக் கஷ்டங்களும் அங்கே வழிபாடு செய்பவர்களுக்கு நீங்கி விடுமென்று சொல்லப்படுகிறது. குண்டுசட்டி அடையும்போது 10 மணி இருக்கும். குண்டுசட்டிக்குப் பக்கத்திலுள்ள சோனிபூர் என்னுமிடத்திலே பாணுசுரன் சிவபிரானைக் குறித்துக் கடுந்தவம் புரிந்து எவராலும் வெல்லமுடியாத வலிமையைப் பெற்ருன். அங்கே ஒரு கடைமாடியை எங்களுக்கு ஏற்பாடு செய்து கொண்டு சற்று இளைப்பாறிவிட்டு மந்தாகினியில் நீராடி வழிபாடுகளை முடித்துக்கொண்டோம். இங்கே உச்சிவேளையில் நாங்கள் ஆற்றி லிறங்கி நீராடியபோது, ஆற்றுநீர் பனித் தண்ணீராய் சில்லிட்டிருந்தது. கொஞ்சநேரம் நீர்க்குள் முழுகி எழுந்தாலே கைகால்கள் விறைக்கத் தொடங்கின. அங்கே இரண்டொரு சிறு மலை அருவிகள் வந்து மந்தா கினியில் கலக்கின்றன. எதிர்ப்புறத்தில் உள்ள மலையில் நல்ல அடர்ந்த காடு இருக்கிறது.

## மின்னுவதெல்லாம்...

ஆற்றங்கரையிலும் வழியிலும் உடைந்து சிதறிக்கிடக்கும் கற்கள் பல வண்ணங்களில் அமைந்து கிடந்தன. சூரிய ஒளியில் அவற்றில் ஒரு மினுமினுப்பு. வண்ணமும் மினுமினுப்புச் சேர்க்கையும் அவற்றைப் பொன்போல ஆக்கிவிட்டிருந்தன. அருகில் சென்று எடுத்துப் பார்த்த

போதுதான் மின்னுவதெல்லாம் பொன்னல்ல கற்கள் என்று தெரிய வந்தன. அந்த அழகைவிட்டு எங்கள் விடுதிக்குச் செல்வதற்கு மனம் இடம் கொடுக்கவில்லை. பாதிவழிகூட நாங்கள் வரவில்லை. யாத்திரை மேலே தொடங்கவேண்டும் என்ற எண்ணம்தான் எங்களை ஊரைப் பிரிந்து மேலே செல்லச் செய்தது.

## வேகம் கெடுத்தாண்ட வேந்தன் :

குண்டுசட்டிக்கு வரும் வழியில் ஏற்றமும் இறக்கமும் அதிகம். குண்டுசட்டியைத் தாண்டிய உடனே ஒரு பெரிய ஏற்றம். இரண்டு கல்லுக்குமேல் இருக்கிறது. குண்டுசட்டிவரை வேகமாக நடந்து வந்து கொண்டிருந்த நாங்கள் ஏற்றத்திலே சற்றுக் களைத்தோம். நின்று நின்று மூச்சுவாங்கிக்கொண்டு மேலே ஏறினோம். செல்லும் வழியில் இதுவரை ஏதாவது பேசிக்கொண்டே வந்த எங்களுக்கு இப்போது பேசிக் கொண்டே நடக்கமுடியவில்லை. வேகமும் குறைந்தது. ஓரிடத்திலே சற்று நின்றுவிட்டோம். நாங்கள் நின்றோம்; ஆனால் சிந்தனை ஓடியது. மெதுவாக 'வேகங்கெடுத் தாண்ட வேந்தன் அடிவெல்க' என்று என் வாய் முணுமுணுத்தது. பக்கத்தில்நின்ற வித்துவான் ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளவர்கள் உடனே சிவபுராணம் சொல்லத் தொடங்கி விட்டார்கள்.

## உயிர்வளிக் காற்று :

அங்கே எங்களுடன் வந்த ஒருவர், மூச்சுவிடுவதை வாயைத் திறந்துவிட்டார். ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளவர்கள் 'உனக்குக் கிடைத் திருக்கும் நல்ல வாய்ப்பை நழுவவிடாதே. பல்லாண்டுகள் செய்யும் பிராணயாமபலன் இங்கே ஒருமுறை ஏறி இறங்கினாலே கிடைத்துவிடும். மூச்சுவிட்டு உள்ளிழுப்பதை மூக்கினாலேவிடு. வாயை மூடிக்கொள்' என்றார்கள். கல்யாணசுந்தரம் பிள்ளை உடனே ஒரு விளக்கம் சொல்லத் தொடங்கினார். 'இங்கே பல அருவிகளும் ஒரு பேராறும் ஓடிக்கொண்டு இருக்கின்றன. உயிர் வெளிக்காற்று மிக மிகப் பரிசுத்தமான நிலைமையிலே இங்கு சுழன்று கொண்டிருக்கும். ஓசோன் (Ozone) என்னும் உயிர்வெளிக் காற்று அதிகாலையில் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஊரல்லாத வெளியிடங்களில் வருமென்று சொல்வார்கள். ஆனால் இங்கே இரவும் பகலும் எந்நேரத்திலும் சுழன்றுகொண்டே இருக்கும். இது கிடைப்பதற்கு அருமையாக உள்ளது. ஒரு ஆயுளுக்கு ஒரு சில நாட்களிலே இங்குக் கிடைக்கும் இந்த உயிர் வெளியே போதும்' என்றார். அவ்வரவர்களும் நடக்கலானோம்.



வழிநடை



கௌரிகுண்டத்துக்கு அப்பால் அருவி



தான்தனியன் என்றக்கால்



வழிநடையில்

## குழந்தை கிடைக்குமா ?

எல்லோருக்கும் கடைசியிலே நான் சென்றேன். 'பாதி வழி சென்றதும் சற்று நின்றேன். அங்கு ஒரு தேநீர்க்கடை. வாலிபன் ஒருவன் தேநீர் விற்றுக்கொண்டிருந்தான். மழையும் தூறியது. கடைக்காரனும் 'சேட்ஜீ ! சாபியோ, பைடியோ' என்றழைத்தான். (முதலாளி தேநீர் அருந்தவில்லையா ? வாருங்கள்.)

அப்பொழுதிருந்த நிலையில் அந்த வரவேற்பு ஏற்றுக்கொள்ள வேண்டியதாக இருந்தது. சென்று தேநீரை வாங்கிக் கையில் வைத்துக் கொண்டு அந்த வாலிபனிடம் பேச்சுக் கொடுத்தேன். அவன் இண்டர் மீடியட் வாசித்தவன். ஒரு சகோதரனும், சகோதரியும் அவனுக்கு உள்ளனர். தாய் தகப்பன் இருக்கிறார்கள். மலை ஜாதியில் ப்ரம்மன் (பிராமணன்). மற்றவர் கொள்கைபோல அங்கேயும் நான்கு வருணங்கள் உண்டு. பிராமணர்களும் ஏர் உழுவார்கள். அவர்கள் வீட்டுப் பெண் களும் வயல்வேலை செய்வார்கள். அவனுக்கு $ 3 பிகா நிலம் இருக் கிறது: அவர்கள் குடும்பத்துக்கு வேண்டிய கோதுமை முதலிய உணவு தானியங்கள் போக ஓரளவு விலைக்கு விற்கவும் வசதி இருக்கிறது. இந்த நிலையில் அங்கே ஒரு சிறு பெண்குழந்தை ஓடிவந்தது. அழகாகவும் இருந்தது. வேடிக்கைக்காக அந்த வாலிபனைநோக்கி 'இந்தக் குழந்தை அழகாக இருக்கிறது. இதைக் கொடுப்பார்களா? இதன் பெற்றோர்கள்? நான் எடுத்துச் செல்லுகிறேன், என்று கேட்டேன் 'நாங்கள் அப்படிக் கொடுக்க மாட்டோம். நான் மிகவும் ஏழை. குப்தகாசியில் வித்யா பீடத்தில்தான் படித்தேன். கல்லூரி வாசிப்பு இவ்வாண்டில்தான் முடிவு அடைந்தது. நான் உங்களோடு வேண்டுமானாலும் வந்துவிடுகிறேன். என்ன வேலையானாலும் செய்வேன். தாங்கள் உதவிசெய்ய வேண்டும் குழந்தை வேண்டாம்' என்று கேட்டுக் கொண்டதோடு என் விலாசத் தையும் வாங்கி வைத்துக்கொண்டான். இங்கு சற்று ஓய்வுக்குப் பின் மேலே நடந்தேன்.

## ரோஜாக்காடு :

குப்தகாசியை நாங்கள் அடையும்போது மணி 5-30. குப்தகாசி 1 கல் இருக்கும்போது எதிர்ப்புறத்தில் மலையில் சிறந்த அழகான பெரிய கட்டிடங்கள் கண்ணுக்குப் புலப்பட்டன. விசாரித்ததில் அவைகளில் ஒன்று ஊக்கி மடம் என்றும், மற்றொன்று பாபா காலா கம்பளிவாலா சத்திரம் என்றும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் சொன்னார்கள். அதற்குக் குப்தகாசி கடந்து நாலாச்சட்டி வழியே 4 கல் தொலைவு செல்ல

---

$ 1 வேலி சற்றேறக்குறைய 6 பீகா நிலம்; உத்தரப் பிரதேசத்து நில அளவை.

வேண்டுமென்றும் வழி ஏற்றமும் இறக்கமுமாக இருக்குமென்றும் சொன்ஞர்கள். கேதாரநாதராலயம் ஊக்கிமடத்தைச் சேர்ந்தது. கேதாரத்தில் தேவபூசை நடக்கும்போது கேதாரநாதர் வழிபாடு ஊக்கிமடத்தில் நடக்குமென்றும் சொல்லப்படுகிறது. வரும் வழி எல்லாம் ஒரே ரோஜாக்காடு. ஒற்றையடுக்கு வெள்ளைநிறமுள்ள ரோஜாக்கள் மிக அதிகம். மற்ற வண்ணங்களில் அடுக்கு ரோஜாக்களும் இருக்கின்றன. உடனே பீமபூஜைசெய்யத் தொடங்கி விட்டோம். எல்லாம் சிவார்ப்பணம்.

## தங்கினேம் :

காலா கம்பளி வாலா சத்திரத்தில் தங்கினேம். இங்கே இதுவரை இருந்ததைவிடக் குளிர் அதிகம். உச்சிவேளையில் கூட வெயில் அதிகம் உறைப்பது இல்லை. பெரிய கடைத்தெரு, தபால் தந்தி ஆபீஸ், மருத்துவச் சாலை, இண்டர்மீடியட் வரை ஒரு கல்லூரி, துவக்கப்பள்ளி, அரசாங்கத்தினர் கட்டியுள்ள இன்ஸ்பெக்ஷன் பங்களா, பல ஆசிரமங்கள் முதலிய எல்லா வசதிகளும் உள்ளன. ஊர் மலைச்சரிவிலே அமைந்திருக்கிறது. ஆகையால் காட்சி மிகமிக இனிமையாக இருக்கும். பகலில் மித சீதோஷ்ணம், மாலையில் மழை, இரவில் மிகக் குளிர். அங்குள்ள ஆலயத்துக்கு விசுவநாதர் ஆலயம் என்று பெயர். தலவிசேஷம்பற்றி முன்னேயே சொல்லப்பட்டிருக்கிறது.

மறுநாள் 2—5—55. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில் தீர்த்தத்தில் திருமஞ்சனம் முடித்துக்கொண்டு விசுவநாதரை வழிபாடு செய்தார்கள். இவ்வாருக இரண்டு நாட்கள் அங்கே தங்கியிருந்தோம். மேலே 24 மைல்கள் நடந்துசெல்லவேண்டும். இதுவரை வந்ததைவிட இனி ஏற்றமும் இறக்கமும் அதிகமாக இருப்பதால் இங்கு கொஞ்சம் ஓய்வு எடுத்துக்கொண்டோம். காலையிலும் மாலையிலும் திருமுறைப்பாராயணம் சிறப்பாக நடைபெற்றது.

சிந்தனையைத் தூண்டத்தக்கனவாக இரண்டு மூன்று திருப்பதிகங்கள் அமைந்திருந்தன. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில் இடையருது சொக்கநாதர் சிந்தனையே உடையவர்களல்லவா? ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அடியெடுத்துக் கொடுக்கக் குழுவினர், திருமுறையிலே ‘வீடலாலவாயிலாய்’ என்ற பதிகத்தை முதலும் கடையும் ஓதினுர்கள், சம்பந்தமூர்த்தி சுவாமிகளின் அற்புதமான வாக்கு. சொக்கநாதப்பெருமானுடைய திருவருள் அடியார்களுக்குப் பெரும் வெற்றியைக் கொடுத்தது. அதுவே ஞான வெற்றி! சமயவெற்றி; இதனைக்கண்டவர் திருஞானசம்பந்தப் பெருந்தகையார். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்கள் திருவுள்ளத்திலே இப்பதிகம் சென்று தோய்ந்தது போலும். திருமுறைப்பாராயணமாக பன்னிரண்டு

திருமுறையும் பாடி முடிவுசெய்வது வழக்கம். அன்று மாலையில் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்கள் மலைக்காட்சி கண்டுவரலாமென்று புறப்பட்டார்கள். அந்த இரண்டு நாட்களில் ஓதிய பதிகங்களின் கருத்துக்கள் வழியிலே ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தின் திருவுள்ளத்தில் இருந்து வெளிப்பட்டன.

## திருவடிச் சிந்தனை :

யாத்திரை செல்வது கேவலம் மலைக்காட்சியையும் அருவிகளையும், அடவிகளையும் காண அன்று. அங்கங்கேயும் கடவுட் காட்சியையும், பெருமான் கருணைத்திறத்தையும் காண்பதற்காகவே. காணும் காட்சியைக் கடவுட் காட்சியாகக் காணுவதற்கு ஒரு குரு வேண்டும். அந்த குருவே ஞானசாரியர். இவ்வளவு பெரிய ஞானநினத்தைக் கண்டு நமக்குக் கொடுத்துப்போன குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் நன்றியை நாம் நினைக்கக் கடவோம். நன்றி திருவடிச்சிந்தனை அல்லாது வேறு என்ன இருக்கிறது. திருவடி என்றாலே பெருமானுடைய பெருங்கருணை தான். அப்பெருங் கருணையினுடைய சிறப்பை இங்கு இரண்டு நாட்களில் பாடப்பெற்ற 'வீடலால வாயிலாய்' என்னும் 'திருப்பதிகம்' எடுத்துச் சொல்லுகிறது. இங்கே விழுமியார்கள் நின்கழல் பாடலால வாயிலாய் என்ற வரியை ஊன்றிச் சிந்திக்க வேண்டும். அதில் சொல்லி யிருக்கிற விழுமியோர்கள் திருஞானசம்பந்தர் போன்ற பெருமக்களே. இறைவனுடைய திருவடியைக்காண குரு உபதேசம் நமக்கு வழிகாட்டும். ஆகவே, அந்தக் குருவினுடைய திருவடியைச் சரண்புகுதல் வேண்டும். அந்தத்திருவடி திருஞானசம்பந்த சுவாமிகள் திருவடியல்லாது வேறு எது? அது என்றென்றைக்கும் அடியவர்களுடைய உள்ளமாகிய கோயிலிலே இனிது வீற்றிருப்பது; அடியார்கள் மட்டுமல்ல, உலகிலுள்ள அவ்வளவு பேரும் மலரிட்டுத் தூப தீபம் காட்டித் தொழுது துதிக்கும் பெருமை வாய்ந்தது. திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளும், குன்றமெறிந்த குமர வேளும் இருந்து ஆய்ந்த தமிழ்ச் சங்கத்திலே உள்ள பொய்யடிமை இல்லாத புலவர்களும் பாடுகின்ற பாடல்களுக்கு உரிய தகுதி வாய்ந்தது. வறுமையை ஒழிக்கும் வள்ளலாக உள்ளார் அந்த ஞானசாரியர். சைவ சிகாமணியாக விளங்குகின்ற அப்பெருமானின் பொன்னார் திருவடியின் சிறப்பை இப்படிப் போற்றியுள்ளார் நம்பியாண்டார் நம்பிகள்.

## தருமையும் காழியும் :

திருஞானசம்பந்த சுவாமிகளும், குருஞானசம்பந்த சுவாமிகளும் வேறுவேறானவர்களா? இல்லை இல்லை. குமரகுருபரசுவாமிகள், பிள்ளைமை விடுத்துத் தள்ளரும் பருவம் எய்தி, 'அமண்மாசறுத்த கவுணியர் பெருந்தகையே' என்று குருஞானசம்பந்தப் பெருமானைப்

பண்டாரமும்மணிக்கோவையில் விளித்து வணங்குகிறார்கள். திருஞான சம்பந்தப்பெருமானைச் 'சைவ சிகாமணி' என்று நம்பியாண்டார் நம்பி அருளியவாறே குருஞானசம்பந்தப்பெருமானையும் 'சைவசிகாமணி' என்று அழைக்கிறார் இன்னொரு அனுபஞானி. மானைக்காட்டி மான் பிடிப்பது போல மானிடரையாள்வதற்கு மனம் கொள்கிறார் சிவபெருமான். மானிடரைப் போலவே வருகிறார். நெற்றிக்கண், மழு, மான், பாம்பு, தீ, திருநீலகண்டம் என்னுமிவற்றைத் தெரியாமல் மறைத்து வந்தார் மகாதேவர். அத்தகைய 'சைவ சிகாமணி' என்று அகம் உருகி அழைக்கின்றார் அப்பெரியார். அவர் யார்? குமரகுருபரரிடம் பாடம் கேட்ட சீடர்தான் அவரும்! குருஞானசம்பந்தப்பெருமான் சரண மலர் களையே ஆலயமாகக்கொண்டு வழிபடும் சம்பந்த சரணாலயர். அழைத்தது கந்தபுராணச் சுருக்கத்திலே இவ்வாறு, திருஞானசம்பந்தப்பெருமானும், குருஞானசம்பந்தப் பெருமானும் வேறல்லர் ஆதலினாலே அந்த இரண்டு ஆசாரியப் பெருமக்களுடைய திருவடிச்சிந்தனையும் யாத்திரையிலே நாம் மறவாமல் மனத்திலே கொள்ளவேண்டும். அந்தத் திருவடிச் சிந்தனையை இடையறாது கொள்ளாததனாலேயே மனக்குரங்கின் சேட்டையால், காலையிலே கேள்விப்பட்டோமே.

## மீண்டு மனத்தார் போகட்டும்:

குப்தகாசிவரை நடந்து வந்தவர்கள், எத்தனையோ கல் தொலைவு இருப்புப் பாதையில் வந்தவர்கள், பின் பல கற்கள் உந்தூர்தியிலே ஏறி மலை வழியிலே வந்தவர்கள். ஆனால், இனிமேல் கேதாரம் செல்லும் வழி மிக அரியவழி. குளிர் மிகுந்தது. மனிதர் இயங்கத் தகுதியற்றது என்று ஆரோ சொல்ல அதைக்கேட்டு மேலே செல்லாமல் மீண்டும் திரும்பி விட்டார்கள் என்று. பாருங்கள். இடையறாத திருவடிச் சிந்தனை இல்லாத தன் விளைவல்லவா இது! 'சிந்தனை நின் தனக்கே யாக்கி' என்ற மாணிக்கவாசக சுவாமிகள் கட்டளையை மறந்தனாலல்லவா அவர்கள் கொண்ட குறிக்கோளை மறந்தார்கள்! அத்தகைய 'மீண்டு மனத்தவர்கள் போகட்டும்' என்றார் ஒரு பெரியார்! மற்றொரு செய்தி, அக்ஷய திருதியையில் - கேதாரத் திருக்கோயில் திறக்கும் முதல் நாளிலேயே பனிப்பாறைகளினூடே விறைக்கச்செய்யும் கடும் குளிரையும் எதிர்த்துச் சென்ற மெய்யடியார்களை விரைந்து வம்மின் என்று அழைக்கிறார் கேதாரேசுவர்! அந்த மெய்யடியார்களுடைய கூட்டம் கொண்டும் கொடுத்தும் குடி குடி ஈசற்கு ஆட்செய்யும் கூட்டம். அவர்கள் காணச் சென்ற பொருள் அண்டங்கடந்தது. அண்டங்கடந்தால் ஆனந்தம் காண முடியாதே என்றது மனம்; இல்லை; இல்லை; அது அளவில்லதோர் ஆனந்த வெள்ளப்பொருள் என்றார் பெரியார்! பொருள் என்றாலே நிலைக்காதே, அதுவும் அங்கே ஆநந்தமும் சேர்ந்துவிட்டால்.........?

என்று மயங்கியது மீண்டும். ‘அது, பண்டும் இன்றும் என்றும் உள்ள பொருள்’ என்றார் பெரியார். இப்படிச் சிந்தனை ஓடிக்கொண்டிருக்கும் பொழுது ஒரு பெரும் பக்தர்கள் கூட்டம் ‘கேதார்நாத் பாபாகிஜே’, ‘கங்காபாயிகி ஜே’, ‘பாரதமாதாகி ஜே’ என்று முழங்கிக்கொண்டேவந்தது. “நம்முடைய மனமும் சொல்லுகிறது; அந்த பேரானந்த வெள்ளப் பொருளுக்குப் பல்லாண்டு கூறுதுமே என்று”. இப்படி ஒரு சிறு சித்திரமாக எங்கள் சிந்தனையிலேயும் பதியக்கூடிய முறையிலே ஒரு சொல்லோவியத்தை ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில் எழுதிக் காட்டினார்கள். இவ்வாறு பேசிக்கொண்டே மலைக்காட்சிகளைக் கண்டு திரும்பினோம்.

4—5—55 புதன்கிழமை அன்று வழியிலே நளன்சட்டி, (நாலாச்சட்டி) நாராயணகோட்டி, வியூங் சட்டி, பீம் சட்டி, மைகண்ட சட்டி வழியே பாட்டா சட்டி அடைந்தோம். பீம் சட்டிவரை கடுமையான ஏற்றமும் காலை மணி 10; வழி வரவர ஏற்றமாகவே இருந்தது. நடுவிலே பெரிய ஏற்றமும், வியூங் சட்டிப்பக்கம் இறக்கமும் எங்களுக்குக் கொஞ்சம் துன்பம் கொடுத்தது. ஆனால் நளன்சட்டியிலே நளனும், லலிதாவும், மைகண்ட சட்டியிலே துர்க்கையும், ஆக அம்மையினருள் அப்பனை அடைய இழுத்துச்சென்றது. மைகண்டசட்டி என்றதுமே அது எங்களுக்கு மெய் கண்டார் சட்டியாகவே தோன்றியது. துன்ப இருளைப்போக்கி இன்ப ஒளி காட்டும் இடமல்லவா இது? இப்படி ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளவர்களின் சிந்தனை சிறக்க வழிநடந்தோம்.

## *சிரிப்பார் களிப்பார் :*

குப்த காசியிலிருந்து திருக்கேதாரம் செல்லும் பாதை. செல்லும் யாத்திரிகர்களில் வயதானவர்கள், பலஹீனமானவர்கள் அங்கங்குத் தங்கி தங்கி உட்கார்ந்து இளைப்பாற்றிச் செல்லுவார்கள்; அப்போதெல்லாம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள்பால் செல்வார்கள்; ‘போலோ கேதார்நாத் பாபாகிஜே’ என்று மகிழ்ந்துகொண்டே ஆவேசத்தோடு உரக்கக் கோஷமிடுவார்கள்; சோர்ந்துகிடந்த அவர்களையும் கோஷமிடச் செய்வார்கள். எங்களைப்பார்த்துக் கூறுவார்கள், ‘சிரிக்கவேண்டும்; அதுவும் மனம் நிறைந்த சிரிப்பாக இருக்கவேண்டும். அது களித்தல்,’ இப்படிச் சொல்லிக்கொண்டிருக்கும்போதே எங்களுக்கு முன்னால் செல்லும் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தோடு சென்று சேர்ந்துகொள்ளுவோம்.

ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களோடு செல்லும் ‘கேதாரத்தைப்’ பாடச்சொல்லுவார்கள். பக்கத்திலுள்ள தொண்டர் சிவஞானத்தையும் பாடச்சொல்லுவார்கள். ஆதீன அடியார் ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான்

சுவாமிகளையும் பாடச்சொல்லுவார்கள். தாமும் மகிழ்ந்து பாடத்தொடங்கி விடுவார்கள். தாம்பாடுவதை நிறுத்திக்கொண்டு மற்றவர்கள் பாடுவதைக் கேட்டு மகிழ்வார்கள். மறுபடியும் வழிநடக்கத் தொடங்குவோம். சற்றுப் பின் தங்கி 'ஹரஹர சிவசிவ' என்று சிவநாம சிந்தனை செய்வார்கள். இவ்வாறாகவே அவர்களுடைய யாத்திரை சென்றுகொண்டிருந்தது. ஓரிடத்திலே ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில் எங்களைப் பார்த்துக் குறிப்பாக ஒரு தேர்வு வைத்தார்கள். அது 'சிரிப்பார்களிப்பார்' என்னும்திருவாசகத் துக்கு இலக்கியம் காட்டவேண்டும்' என்பது. ஓதுவாரும் 'சிரிப்பார்' என்று தொடங்கும்பாடலை ஓதிமுடித்தார். இந்தப் பாடலுக்கு இலக்கிய மாக ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளை ஆக்கிக்காட்டியது எனது உள்ளம். ஒரு அச்சமும்கூட. 'நரிப்பாய் நாயேன் இருப்பேனோ? ஆண்டவனே! நம்பி! இனித்தான் நல்காயே என்ற இறுதியடியை என்வாய் முணு முணுத்தது. இதன் குறிப்பு ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தின் திருமுகத்தில் ஒரு புன்னகைக்கு வித்தாகியது.

## முதலுதவி :

குப்தகாசியிலிருந்து செல்லும் வழியிலே - மெய்கண்டசட்டிபோவதற் குள்ளே ஆந்திரநாட்டைச் சேர்ந்த கிழவி ஒருத்தியைக் கண்டோம். வழி யிலே முனகிக்கொண்டே நடந்தாள். கேதாரத்தில் முதல்நாள் தரிசனம் செய்யும்பேறு பெற்றவள் அவள். ஆனால் தன்னுடைய உடல் வசதிக்கு வேண்டியன செய்யாத நிலையிலே சென்று வந்திருக்கிறாள். காலுறை இல்லை. காலுக்கு மேற்சோடும் இல்லை. காலிலே கல்குத்தியிருக்கிறது. வீங்கிப் பெரிதாக இருந்தது. காய்ச்சலும் அடித்தது. கேதாரநாதன் பெயரைச் சொல்லிக்கொண்டே கிடந்தாள். அருகிலே சென்று விசாரித் தோம். அவள் தனக்குற்ற துன்பத்தைத் தடுமாறிக்கொண்டே சொன்னாள். முதலுதவிச் சிகிச்சைக்காகக் கொண்டு சென்றிருந்த மருந்துப் பெட்டியி லிருந்து சில மருந்துக்களை எடுத்துக்கொண்டு சென்றோம். அவள் மிக நன்றியுணர்வோடு எழுந்து உட்கார்ந்து, மருந்துகளைத் தன்னிடம் கொடுக் கும்படி வேண்டினாள்; நாங்கள் மிகவும் வற்புறுத்தி அவளுடைய காலைப் பிடித்துப் பழையகட்டை அவிழ்த்துப் பார்த்தோம்; கல் குத்திய இடத்திலே புண்; சீழ் பிடித்திருந்தது. பஞ்சினால் துடைத்து மருந்து தடவிக் கட்டுப் போட்டு குப்தகாசி மருத்துவச் சாலையில் சென்று உடலைக் கவனித்துக் கொண்டு போகுமாறு சொன்னோம். புண்ணியாத்மாக்களாகக் காட்சி யளித்த நாங்கள் தன் கால்களைத்தொட்டால் அபசாரம் தனக்குவருமென்று நினைத்தாள் அவள். நாங்கள், கேதாரம்சென்றுவந்த திருப்பாதமாயிற்றே தொட்டால்வது நமக்குத் தொடும் புண்ணியமாவது கிடைக்கட்டுமே என்று நினைத்தோம். அவள் எங்களை மனமார வாழ்த்தினாள்.

கேதாரயாத்திரை: (பாட்டாசட்டி)



வேட்டைநாய் சடைநாய்



## பீமதரிசனம் :

அன்று இரவு ராம்பூர் சட்டிக்குப் போய்ச் சேர்ந்தோம்; தங்கினேம்; செல்லும் வழியிலே ஒரு குண்டுக்கல் கோபுரம்போல அமைந்திருந்தது. அதன் அடியிலே பத்தடிக்கு எட்டடியுள்ள ஒரு சிறு குகை. அந்த குகைக் குள்ளே அந்த ஊர்க்காரர் ஒருவர் எருமைமாடு கட்டிவைத்திருந்தார். இந்தக் காட்சிக்கு அண்மையில் மந்தாகினியும் ஓடிக்கொண்டிருக்கிறது. இது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுக்குப் பீமன் கண்ட கேதார தரிசனத்தை நினைப்பூட்டியது. அந்தக்கல் கோபுரமாகவும், குகை கருப்ப இல்லாகவும், எருமைமாடு பெருமானுடைய திருவுருவக் காட்சியாகவும் அந்தத் திருவுள்ளம் எண்ணிப்பார்த்தது.

## சோலை வழியில் சோர்வு ஏது ?

ராம்பூர் காலா கம்பளி வாலாச் சத்திரத்தில் தங்கியிருந்து, மறுநாள் குருவாரம் காலை 4 மணிக்கே புறப்பட்டோம்; செல்லும் வழியிலே திரியுகி நாராயணன் என்ற பெயர்ப் பலகையைக் கண்டோம். கங்கோத்ரி யமுனேத்ரி சென்று வருவோர் திரியுகிநாராயண் வந்து சோன்நதி மந்தா கினியிற் கலக்குமிடத்திலே நாங்கள் செல்லும் வழியை எட்டிப் பிடிப்பர். திரியுகிநாராயண் என்றதுமே கௌரி கல்யாணம் எங்களுக்கு நினைவுக்கு வந்தது. செல்லும் வழியிலே முண்டகாட்யா விநாயகர் தரிசனம்; கௌரி குண்டம் போகும்போது காலை மணி 9. வழியில் உயரமான மரங்களும், சோலைகளும், வெயில் தெரியாத அடர்ந்த காடுகளும், நடப்பால் வரும் களைப்பை மாற்றி இன்பத்தை விளைத்தன.

## மௌனத் தவம் :

கௌரிகுண்டம் நமக்கு அநேகதங்காவதம். ஒருபுறம் வெந்நீர் ஊற்றும், எதிர்ப்புறம் மந்தாகினியும், பின்புறம் கேதார வழியும் இப்படி நல்ல சூழ் நிலையிலிருந்தது நாங்கள் தங்கியிருந்த சத்திரம். ஒரு ஆசிரமம் அமைய வேண்டிய நிலையிலே இருந்தது அந்தச் சூழ்நிலை. யாத்திரை அமைப்பும் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் கேதாரதரிசனம் செய்யும் முதல்நாள் உபவாசமிருந்து, மௌனத்தவம் புரிந்து கேதாரநாதரை எட்டிப் பிடிப் பதுபோல அமைந்துவிட்டது. எங்களுடைய வழிநடையில் உண்டாகிய உடற்சோர்வு நீங்க எல்லோரும் ஆநந்தமாகத் தப்தகுண்டத்தில் நீராடி அநேகதங்காவதம், கௌரி ஆலயம் முதலியவற்றைத் தரிசனம்செய்து, தங்கிக் களைப்பாறினேம்.

வெந்நீர் ஊற்றில் நாங்கள் எண்ணெய் தடவிக்கொண்டு நீராடி வெளியேறினோம். உடம்பில் ஈரம் காய்ந்ததும் வெளுத்துப்போயிற்று. மறுபடியும் மினுக்கெண்ணெய் போடவேண்டிய நிலை உண்டாயிற்று. வெப்பதட்ப நிலைக் கருவி வெந்நீரின் வெப்பம் 120டிக்ரி என்றும் பக்கத்தில் 10, 15 அடி தூரத்தில் செல்லும் மந்தாகினி 30 டிக்ரி என்றும் எடுத்துக் காட்டியது.

## வெந்நீர் ஊற்றில்......

வழி நடந்துவந்த களைப்பால் உடம்பு முற்றும் வலி எடுத்திருக்கும் யாத்திரிகர்களுக்கு வெந்நீர் எங்காவது கிடைக்காதா என்ற வேட்கை உண்டாவது இயற்கை. மேலும் இரவிலும் பகலிலும் கடுங்குளிர். இந்நிலையில் வெந்நீர் ஊற்றைக் கண்டதும் அதிலே குதித்து வேண்டிய மட்டும் அந்நீரிலேயே கிடந்து அயர்வைப் போக்கிக்கொள்ள வேண்டும் என்ற ஆசை அதிகரிக்கும். அவ்வாறு செய்வது கூடாது. செய்தால் மயக்கம் வரும். வெந்நீர் ஊற்று வந்துவிழும் இடத்தில் வெப்பம் அதிகம். கீழே தேக்கிக் கட்டியிருக்கும் சிறு குளத்தில் விழும் வெந்நீர் கொஞ்சம் கொஞ்சமாக ஆறிப் படிப்படியாக வெப்பம் தணிந்தநிலையில் இருக்கும். அவரவர் உடல் வளத்துக்கு ஏற்ற பகுதிகளில் கரையிலமர்ந்து பாத்திரத்தினால் முகந்து மேலே கொட்டிக்கொண்டு, ஊற்றிலிறங்கி நீராடுதற்கேற்றதாக ஆக்கிப் பிறகு ஊற்றில் இறங்கி எவ்வளவுநேரம் வேண்டுமாகிலும் அமிழ்ந்து ஆநந்தமாக நீராடலாம். இது உடம்புக்கு நல்லதும் கூட என்று மருத்துவர்கள் சொல்லுகிறார்கள். முடக்குவாதம், சருமநோய்கள் சில் வாதம் போன்ற நோய் உடையவர்கள் இந்த ஊற்றில் நீராடினால் நலம் பெறலாம். நிலத்தின் அடிப்பகுதியிலுள்ள கந்தகத்தின்மேல் பாய்ந்து வருவதால் இதில் ஒரு வெப்பம் உண்டாகிறது என்று வல்லார் கூறுவர்.

## திருக்கோயிற் காட்சி :

'கேதாரம்' இது அநேகதங்காவதம் என்னும் பாடல் பெற்ற தலம் என்று சொன்னார். திருஞானசம்பந்தர் திருப்பதிகம் இதற்கு உண்டென்றும் சொன்னார். மூர்த்தியைத் தரிசிக்கச் சென்றோம். மூர்த்தி சுயம்பு. உள் நுழையும்போது ஒரு பெரிய திரிசூலம் நட்டுவைக்கப்பட்டிருக்கிறது. மூர்த்தியின் திருமுடிமேல் பாம்பு தலை வைத்துப் படுத்திருப்பது போன்ற அடையாளம் இருக்கிறது. எதிர்ப்புறத்தில் கௌரி அம்மன் கோயில். பக்கத்தில் கடல்போன்ற பேரிரைச்சலோடு மந்தாகினி ஓடிக்கொண்டிருக்கிறது. அந்த ஊரிலே பக்கத்தில் இரண்டொரு அருவிகளும் விழுந்து கொண்டிருக்கின்றன. குளிர் அதிகம். சோலை சூழ்ந்த இடம் என்று சொல்லத் தேவையில்லை.

கேதாரயாத்திரை : (கௌரிகுண்டம்)



திரு அநேகதங்காவதம்



தப்தகுண்டம்

இவ்வளவையும் கண்டு ஆனந்தம் கொண்டிருக்கும்போது திரு முறையைப்புரட்டினேம்; என்ன ஆச்சர்யம்! பார்த்தவை அத்தனையை யும் படிக்க நேர்ந்தது:- பதிகம் சொல்லுகிறது.

## தேயமிடை யிட்டவற்றைக் காணும் ஞானக்கண் :

'சூலம் உண்டு. நீலம் உண்ட கண் உமைபாகம் நிலாயதோர் கோலம் உண்டு. ஆரம் பாம்பது அணிவான்றன் அநேகதங்காவதம். தந்தத்திந்தத் தடமென்று அருவித் திரள் பாய்ந்துபோய்ச் சிந்தும் பசும் பொன் அசும்பர் அணியார் புனல் அறையும் ஓசை பறைபோலும் அநேக தங்காவதம். இறை எம் ஈசன் எம்மான் இடமாக உகந்ததே' என்று, இவ்வளவையும் அருளிச்செய்யும் திருஞானசம்பந்தர் திருக்காளத்தியி லிருந்தே திருவருள் உணர்த்தத் தெரிந்து பாடியிருக்கிருர் இவ்விதமாக. அதனேடு அல்லாமல், 'நம்பன் நாமம் நவிலாதன நா எனலாகுமே' என்றும் இடித்துக் கூறியிருக்கிருர் நம்மை நல்வழிப் படுத்துவதற்கு.

## இனந்தெரியாத இன்பம் :

அதிகாலையில் நான்கு மணிக்கே ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில் வழி நடக்கத் தொடங்கிவிட்டார்கள். நாங்களும் பின் சென்றேம். கௌரி குண்டத்திலிருந்து ஆறுகல் தொலைவு மேலே மேலே உயர்ந்து உயர்ந்து கடுமையான ஏற்றமாகவே அமைந்திருக்கிறது. கல்லுக்கு ஆயிரம் அடி உயரம் நாம் உயர்ந்து கொண்டே செல்கிறேம். வழிமட்டும் உயர்ந்து செல்லவில்லை. நாமும் மேலே உயர்ந்து கொண்டு போகிறேம் என்ற உணர்ச்சி நம்முள்ளே இனந்தெரியாத இன்பத்தை எழுப்புகிறது. அந்த இன்ப உணர்ச்சியில், நம்முடைய உடலுக்கேற்படும் வலியும் தெரிய வில்லை. ஆனல் வேகமாகவும் செல்ல முடியவில்லை. மெல்ல மெல்ல நின்று நின்றுதான் போகமுடிகிறது.

## பனிப்பாறை :

கௌரிகுண்டம் தாண்டியதுமே தரையெல்லாம் பனிப்பாறை. அருவி யெல்லாம் பனி உறைந்த பாலருவி. போகும் வழிகளிலே அந்தப் பனியாறு பனிப் பாலத்தின் கீழே பாய்ந்துவருகிறது. இது நாம் இது வரை காணுத ஒரு இன்பக் காட்சி. மூச்சு விடுவதில் மேலே போகும்போது, இதய வலிமையற்றவர்களுக்குக் கொஞ்சம் துன்பமாகவே இருக்கும். மூச்சில் எரிச்சலும், உதட்டில் வெடிப்பும் ஏற்படுகின்றன.

அதற்கு முன்னதாக ஆலிவ் எண்ணெய் அல்லது தலைக்குத் தடவும் கிளிசரைன் (Glycerine) இவற்றில் ஏதாவது ஒன்று மேற்பூசிக்கொண்டு, மூக்கிலும் முகந்து சென்றால் அந்த எரிச்சலும் இல்லை; வெடிப்பும் உண்டாவதில்லை. கையுறை இல்லாமல் சென்றால் கை குளிரில் விறைத்துவிடுகிறது. ஆகவே கேதாரம் செல்லும்வரை உள்ள ஏழு மைலும் ஏறி இறங்கும்வரை உடலுக்கு வெப்பம் தரக்கூடிய உல்லன் (கம்பளி) சட்டைகள், தலைக்கட்டு, பனிக்குல்லாய், கால் உறை, மேற் சோடு, பருத்தி அல்லது கம்பளி ஆடைகள், உட்சட்டை, மேலே கம்பளி சட்டை, கையில் தடி இவற்றுடன் செல்வோரை அப்பனி ஒன்றும் அதிகம் செய்ய முடியாது. இருந்தாலும் குளிர் அதனுள்ளும் புகுந்து தன் வேலை யைச் காட்டத்தான் செய்யும். இவ்விதமாக எங்களைத் தயாரித்துக் கொண்டோம். மனத்திலே கேதாரநாதரின் பாதாரவிந்தத்தை நினைத்துக் கொண்டோம். வழி என்னவோ எங்களுக்கு இன்பமாகத்தான் ஓடியது.

## சீரான உணவு :

வழியிலே ராம்பாடா என்னும் சட்டியில் பசியாறினோம். வெறும் வயிற்றோடு பனிப் பிரதேசங்களில் செல்வது கூடாது என்று அநுபவ சாலிகள் கூறுகிறார்கள். அதற்காக அதிகமாக வயிறு புடைக்கவும் உண்ணக்கூடாது. வயிற்றிலே மந்தம் தங்கக்கூடாது. அப்படித் தங்கினால் அதுவும் நமக்கு நீண்ட துன்பத்தைக் கொடுக்கும் என்றும் சொல்கிறார்கள். ஆகவே எல்லாம் சீராக - மிதமாக நாம் வைத்துக்கொள்ளவேண்டும்.

## நனைந்தோம் :

ராம்பாடாவிலிருந்து நாங்கள் புறப்பட்ட சமயம் மழைத் தூற்றலும் வந்துவிட்டது. பலரும் நனைந்துவிட்டோம். சிறு கைக்குட்டையோ அல்லது எண்ணெய்த்துணியோ (ஆயில் ஷிட்) இரண்டில் ஏதாவது ஒன்று கட்டாயம் கையில் இருத்தல்வேண்டும். வெப்பதட்பக் குப்பியில் சூடான தேநீரோ, காப்பியோ இருத்தலும் நல்லது.

## பாகுபாடு உண்டோ?

கருடிய சட்டி என்னும் கடைசித் தங்கலுக்கு வந்தோம். மணி முற்பகல் 11. மழை அதிகரித்தது. அங்கே இரண்டொரு தேநீர்க் கடையும் கருடபகவான் கோயிலும் உள்ளன. அந்தக் கடைகளில் ஒன்றில் நாங்கள் புகுந்து கொண்டு மழைக்குத் தப்பினோம். ஆனாலும் கைகால்கள் சுதந்திரம் பெற்றுவிட்டன. விறைத்துக்கொண்டன. நெருப்பு

மூட்டி அதில் காய்ச்சிக்கொள்ள வேண்டியதாயிற்று. நாங்கள் எல்லோரும் கூலிகளும், மற்ற யாத்திரிகர்களும் அந்த நெருப்பைக் கண்டவுடன் ஒருவரோடொருவர் போட்டிபோட்டுக்கொண்டு அனல் காய்ந்தோம். அங்கே கூலி என்றும் தலைவர் என்றும், இந்த நாட்டவர் அந்த நாட்டவர் என்றும், ஆண் என்றும் பெண் என்றும் வேறுபாடுகள் இல்லை. எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓர் இனம், எல்லோரும் ஓர் நிறை இப்படியிருந்தது அந்தநிலை. உண்மைதானே! 'பேணுதத்துவங்கள் என்னும் பெருகுசோபானம் ஏறி, ஆணையாம் சிவத்தைச் சேர' அணைபவர்களல்லவா? 'முன்புசெய் தவத்தின் ஈட்டம் முடிவிலா இன்பமான அன்பினை எடுத்துக்காட்ட, அளவிலா ஆர்வம் பொங்கி, மன்பெருங் காதல்கூர வள்ளலார் மலையை நோக்கி என்பு நெக்குருகி உள்ளத்து எழுபெரும் வேட்கையோடு' வந்தவர்களல்லவா அவர்கள்? அங்கே எப்படிப்பாகுபாடு இருக்கமுடியும்?

## *பனி! பனி!! எங்கும் பனி!!!*

மழைத் தூற்றலும் நின்றது. மறுபடியும் எங்கள்யாத்திரை தொடர்ந்தது. கொஞ்சதூரம் ஏறினோம். அங்கே நாங்கள் நாற்பத்தேழுகல் தொலைவு நடந்திருக்கிறோம் என்பதைக் காட்டிநின்றது தொலைவுக்கல். மேலேபார்த்தோம். ஒரு பனிமலைத்தொடர். பலப்பல பனிமலைச் சிகரங்கள் படர்ந்து ஒன்றோடொன்று போட்டிபோட்டு நிற்பதுபோல ஒரு காட்சி. முக்கால்மைல் அகலத்துக்கு ஒருமைல் நீளத்துக்குள்ள ஒரு சமதளம். செடி கொடிகள் கூட இல்லாத ஒரு பனித்தோற்றம். தரையெல்லாம் பனி, சுற்றுப்புறமெல்லாம் பனி, பனி, பனி, எங்கும் பனி.

## *'கண்டறியாதன கண்டோம்:'*

உச்சிவேளை. மந்தமான வெயில். கண்ணைக் கூசும் பனி ஒளி. பனிச் சிகரங்களிலிருந்து பனி உருகி ஓடிவரும் அருவிகள். அதன் நடுவே - தொலைவிலே - ஒரு திருக்கோயிற் காட்சி. வெள்ளந்தாழ் விரிசடையான், அன்னையோடமர்ந்து நம்மை அருளாசி கூறி அழைக்கிறான் என்றது. பரவசமுற்றோம்; எங்கள் உள்ளம் 'கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்' என்று சொல்லிற்று. ஓதுவார் தன்வசமற்றார். உச்சிமேற் கைகுவித்து, 'மாதர்ப்பிறைக் கண்ணியானை மலையான் மகளொடும் பாடி, போதொடுநீர் சுமந்தேத்திப் புகுவாரவர் பின் புகுவேன் யாதும் சுவடுபடாமல் ஐயாறடைகின்றபோது, காதல் மடப்பிடியோடு களிறு வருவனகண்டேன், கண்டேன் அவர்திருப்பாதம், கண்டறியாதன கண்டேன்' என்று உணர்ச்சியோடு கூறிக்கொண்டே, 'எழுந்த பேருவகை அன்பின் வேகமானது மேற்செல்ல, மிக்கதோர் விரைவினோடு மோகமாய் ஓடுகின்றார். எங்களுடைய உணர்ச்சியைத் தூண்டியது.

## இன்ப அனுபவம் :

" நெடிதுபோ துயிர்த்து நின்று நிறைந்தெழு மயிர்க்கால் தோறும் வடிவெலாம் புளகம் பொங்க மலர்க்கண்ணீர் அருவிபாய அடியனேற் கிவர்தாம் இங்கே அகப்பட்டார் அச்சோ என்று, படியிலாப் பரிவுதானோர் படிவமாம் பரிசு தோன்றக் " கண்ணப்பர் நின்றாரே காளத்தியப்பனைக் கண்டு, அந்த நிலையில் நாங்கள் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களையும், ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களையும் கண்டோம். சிறிதுநேரம் மௌனம்; முதனுள் தவத்தின்பயன் இன்று கைகூடிற்று என்ற உவகையை ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தின் திருமுகத்திற் காண முடிந்தது. இந்தநிலையிலே மெய்ம்மறந்து நின்ற எங்களை மலையெழு கொழுந்தாயுள்ள கேதாரேசுவரன் இழுக்கிருன்; அந்த வேகத்திலே உந்தப்பட்டு நாங்களும் சென்றோம்.

இவையெல்லாம் சொல்லாலே, எழுத்தாலே சொல்லிக்காட்ட முடியாத ஒரு **இன்ப அனுபவம்.**

## நேபாளக்கோட்டி ;

ஊரை நெருங்கினோம். மந்தாகினியைக் கடந்தோம். நேபாள மகாராஜா கட்டிவைத்திருக்கும் **நேபாளக்கோட்டி** என்னும் கட்டிடத்தில் எங்களுக்குத் தங்கவசதி செய்யப்பெற்றிருந்தது. பிரும்மகபாலம் என்னும் சிறந்த பிரசாதம் அணிவித்து ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் வரவேற்றார்கள். மணி 1-30; அங்கே தங்கினோம்.

## ஏகாந்த சேவை :

திருக்கோயிலுக்கு மாலையிலே புறப்பட்டோம். கோயிலிலே சந்நிதி அடைந்ததும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளும் ஓதுவார் கேதாரமும் ஆதீன அடியார் வித்துவான் ஸ்ரீமத் சோமசுந்தரத்தம்பிரான்சுவாமிகளும் திருமுறை ஓதினார்கள்; ஓதும்பொழுது உணர்ச்சிமிருந்துகொண்டே இருந்தது. பாடிக்கொண்டே இருந்தார்கள். வெளியில் கடுங்குளிர்; எங்களையும் **பண்டாக்களையும்,** ஈசனையும் தவிர வேறொருவரும் இல்லை அங்கே. மற்றவர்கள் தரிசனம் முடித்துக்கொண்டு போய்விட்டார்கள். **ஏகாந்த சேவை;** பண்டாக்கள், நேரம் ஆயிற்றே; நீங்கள் போகலாம்; சலியே சலியே என்று சொல்லிக்கொண்டிருந்தார்கள். ஆனால் எங்களுக்குச் சலிக்கவில்லை. சந்நிதியைவிட்டுப்போக மனம் இல்லை. ஒரு வழியாக தரிசனம் முடித்துக்கொண்டு திரும்பினோம். வரும் வழியிலே ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் திருவுளத்தில் 'இதுவன்றே ஈசன்திருவுருவம்

கேதாரயாத்திரை: (நேபாளக்கோட்டியில்)



வரவேற்பு



சொர்க்காரோகணப் பாதையில்

ஆமாறு! இதுவன்றே என்றனக்கோர் சேமம் - இதுவன்றே, மின்னும் சுடருருவாய் மீண்டாய் என் சிந்தனைக்கே, இன்னும் சுழல்கின்றது இங்கு' என்ற அம்மையார் திருவாக்கு தோன்றி நின்றது.

நல்ல நிலவொளியிலே பனிமலைக் காட்சியை நாங்கள் பார்த்தோம். அது எங்களுக்குப் பரவசம் ஊட்டக்கூடியதாக அமைந்திருந்தது. இரவிலே வழிபாடுகளை முடித்துக்கொண்டு நித்திரைக்குப் போனோம்.

மறுநாள் 7—5—55 அதிகாலையிலே எழுந்திருந்து மந்தாகினியிலே நீராடிக் கேதார தரிசனத்துக்குப் போனோம்.

## மந்தாகினியில் நீராட்டு :

மந்தாகினியிலே நீராடுதல் விசேஷம். அதுவும் கேதாரத்திலே நீராடுதல் மிக்க விசேஷமாகும். ஆகவே கேதாரத்தில் மந்தாகினியில் நீராட அனைவரும் ஆவல் கொள்ளுதல் இயல்பேயாகும். ஆனால் ஆற்றில் இறங்கி நீராடுதல் ஒவ்வாது. நம் உறுப்புக்கள் விறைத்துப் போய்விடும். பிறர் உதவியினால் தான் மேலே வரமுடியும். ஆகவே பாத்திரத்தை எடுத்துச்சென்று மூன்று நான்கு வாளிகள்தான் முகந்து மேலே ஊற்றிக் கொள்ளலாம். முதல்வாளி ஊற்றியவுடனே உடலிலுள்ள நரம்புகள் எல்லாம் புடைத்துக்கொண்டு நெருப்பைவாரிக் கொட்டிக்கொண்டது போன்றிருக்கும் உணர்ச்சி. அடுத்து ஊற்றிக்கொள்ளும்போது நமக்கு உணர்ச்சி இருக்காது. அதிகநேரம் ஊற்றிக் கொள்ளவும் முடியாது. அதற்குள்ளாகவே கால் கைகள் விறைத்துவிடும். கனல் சட்டியில் நம் உறுப்புக்களை உடனே காய்ச்சிக்கொண்டு, மேலே உடைகளை அணியவிட வேண்டும். பிறவெல்லாம் பிறகுதான்.

## 'நெய்யாடிய பெருமான்' :

கேதாரேசுவரர் வழிபாட்டுக்கு ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்திலும், ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளும் எழுந்தருளினார்கள். நாங்களும் உடன் சென்றோம். விநாயக பூசை முடித்துக்கொண்டு, கேதாரேசுவரரை வழிபடச் சென்றோம். அபிஷேக ஆராதனைகள் நிகழ்ந்தன. விபூதி அபிஷேகத்துப்பின் மகாமேரு யந்திரம்போலக் காட்சியளித்தார் எம் பெருமான். விபூதி அபிஷேகம் அந்நாட்டார் பார்த்ததில்லை. எல்லோரும் ஆசையோடு அள்ளிக் கொண்டார்கள். நாங்களும், ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானத்தின் திருவருளால் பெருமான் திருமேனியைத் தொட்டு அபிஷேகித்து ஆராதிக்க புண்ணியவாய்ப்பு இருந்தது. அபிஷேகமெல்லாம் முடிந்த பிறகு, உரிய வழக்கப்படி, பெருமானுக்கு நெய்வாங்கித் திருமேனி

முழுதும் சார்த்தினோம். "நெய்யாடிய பெருமானிடம் நெய்த்தான மெனீரே" என்ற திருஞானசம்பந்தப் பெருமான் திருவாக்கு எங்களுக்கு நினைப்பில் வந்து நின்றது. வழிபாடு முடிந்தபின் கேதாரப் பதிகம் முழுதும் பாடப்பெற்றது.

## முடிசாய நின்றார் :

அந்தப் பதிகத்திலே, 'ஆழ்ந்து காணார் உயர்ந்து எய்தகில்லார் அலமந்தவர்' தாழ்ந்து தத்தம் முடிசாய நின்றார்க்கு இடம் என்ற பகுதி அப்படியே அங்கே நடைபெற்றதைக் கண்டோம். பெருமானை எல்லோரும் அன்பு முதிர்ச்சியினாலே அணைத்துக்கொண்டு தலையைத் திருமேனியிலே சேர்த்து வைத்து அப்படியே உருகி நிற்பர். அப்படியே நாங்களும். வழிபாடுகளை முடித்துக்கொண்டு திரும்பினோம். ஆனால் எங்கள் கால்கள் செல்ல மறுத்தன. 'போதுவர்; மீண்டு செல்வர்; புல்லுவர்; மீளப் போவர்; காதலின் நோக்கி நிற்பர்' என்ற சேக்கிழார் வாக்குக்கு இலக்கியமாக இருந்தது அன்பர்களின் தோற்றம். எங்களுடையஉணர்ச்சியும் அவ்வயத்ததே.

## திருச்சுற்றுப் புறத்தில் :

திருக்கோயிலை வலம் வந்தோம். கூடவந்த திரு. கணேச சங்கர பண்டா; இது இந்திர நீலப்பர்ப்பதம்; இது வாசுகி பருவதம்; இது விசுவ பருவதம்; வாசுகி பர்ப்பதத்துக்கப்பால் வாசுகி தளம்; அதோ அந்த முகட்டிலே இறங்குகிறதே அது மந்தாகினியாறு. இது தேன் கங்கா, அதோ தெரிகிறதே அதுதான் சொர்க்காரோகணம், பஞ்சபாண்டவர்கள் சொர்க்கம் சென்றவழி; சங்கரரும் அவ்வழியே சென்றார்; இன்னும் பலர் அவ்வழியே செல்கிறார்கள். ஆனால் அழைப்பு வேண்டும். அருளிப்பாடு இல்லையேல் எவ்வளவு உறைப்புடையவர்களாக இருந்தாலும் அவர்களுடைய சடலத்தை இந்த மந்தாகினியாறு வெளியேகொண்டுவந்துவிடும் என்றார். அழைப்புள்ளவர்கள் நிலை எப்படியோ இங்கிருந்து சொல்வதற்கில்லை என்றார். இவ்விதமாக ஒவ்வொரு காட்சிகளாக விளக்கிக் கொண்டே நேபாளக்கோட்டி வரை வந்தார்

## சித்திரைச் சுவாதி :

பெருமான் எங்கள் பூசையை ஏற்றுக்கொண்ட நாள் சித்திரைச் சுவாதி நட்சத்திரம்; சுந்தரர் கயிலைக்கு எழுந்தருளிய நாள். எங்களுக்கும் அந்தக் காட்சியை - அநுபவத்தை அநுபவிக்கும் வாய்ப்பு புண்ணிய வாய்ப்பாக அமைந்தது.

திருவருளால் அமைந்த ஒன்று. பெருமானிடம் பிரியா விடைபெற்று அன்று ஆகாரத்தை முடித்துக்கொண்டு பகல் 12-30 மணிக்குத் திரும்பினோம்.

### சொல்ல முடியுமா? :

காரைக்காலம்மையார் ஆண்டவனைப் பார்த்து வினா எழுப்பத் தொடங்கி விட்டார்.

'அன்றும் திருவுருவம் காணாதே ஆட்பட்டேன்; இன்றும் திருவுருவம் காண்கிலேன் - என்றும்தான், எவ்வுருவோன் நும்பிரான் என்பார்கட்கு என் உரைக்கேன் எவ்வுருவோ நின்னுருவம்? 'ஏது?'

இதன்மேல் ஒரு தெளிவு; 'எது ஒக்கும்? எது ஒவ்வாது? எது ஆகும்? எது ஆகாது? எது ஒக்கும் என்பதனை யாரறிவார்?' என்றது. இப்படியிருக்கிறது எங்கள் உணர்ச்சி; இதை அநுபவிக்க முடியும்; உரையாற் சொல்ல முடியாது.

## திரும்புகையில்

### மௌன நடை :

திருக்கேதார தரிசனத்தை முடித்துக்கொண்டு மேட்டுப்பாதையிலே வந்துகொண்டிருக்கிறோம். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் சிறிது தூரம் நடந்ததும் நின்று நின்று, திரும்பிக் கோயிலைப் பார்க்கிறார்கள். பின் மெல்ல நடக்கிறார்கள். கொஞ்சதூரம் வந்ததும் மீண்டும் அந்தநிலை; திருக்கோயில் தரிசனம். மேட்டுப்பாதையும் முடியும் நேரம். ஒருகல் தொலைவுக்கப்பால் கேதாரநாதர் திருக்கோயில் பனிமலைகளுக்கு நடுவில் தெரிந்தது. கருநிடியசட்டி, இதற்குள் மழையும் வந்தது; பெய்தது. அருள் மழையில் சொட்டச்சொட்ட நனைந்த நாங்கள் இப்போது நீர் மழையில் நனையத் தொடங்கினோம். முதல் இறக்கம். கீழே இறங்க ஆரம்பித்தோம். இதுவரைக்கும் மௌன நடையாகவே இருந்தது. இப்பொழுது ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் அனுபவத்தைச் சொல்லால் சொல்ல முற்பட்டார்கள்.

### தரிசன அனுபவம் :

கேதாரத்திலே பிர்மா, விஷ்ணு, இந்திரன் முதலிய தேவர்கள் பலரும் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகள் நின்று தவம் செய்தும் காணாது இன்னும் தவம் செய்வதாகச் சொல்லப்படுகிறதல்லவா? அவர்களுக்கும்

காண்பரிய பெருமானாக விளங்கும் கேதாரநாதர் நம்மைத் தாயாகி வந்து அழைத்தேகியிருக்கிறார். இங்கே காட்சி நம்முடைய உடம்பிலே ஒரு புத்துணர்ச்சியை உண்டாக்குகிறது. உரோமங்களும் சிலிர்க்கின்றன. அந்த தரிசன அநுபவம் தேனாய் இன்னமுதாய்த் தித்திக்கிறது; சொல் லிறந்த தொல்லோனாகும் பெருமானுடைய காட்சி சொல்ல முடியாத தாகவே இருக்கிறது. பக்குவப்படாத, பண்பாடற்ற மனமும் அங்கு பண் பட்டு விடுகிறது. கல்மனமும் கனியாகிறது; கருணைவெள்ளத்தில் ஆழ்த்தி, வினைமாசு போக்குகின்றான் பெருமான். முனைப்புநீங்கி, முதல்வன் திருவடியின்பத்தை மோனநிலையில் சுவைக்கும் பேறு உயிர்க்குக் கிடைத்துவிடுகிறது. மாணிக்கவாசகசுவாமிகள் இதுபோன்ற அநுபவத்தை,

வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே யெனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தா ழுறுபுனலிற் கீழ்மே லாகப்
பதைத்துருகு மவர்நிற்க என்னை யாண்டாய்க்
குள்ளந்தா ணின்றுச்சி யளவு நெஞ்சாய்
உருகாதா லுடம்பெல்லாங் கண்ணா யண்ணா
வெள்ளந்தான் பாயாதால் நெஞ்சங் கல்லாம்
கண்ணிணையு மரமாந்தீ வினையி னேற்கே.

என்கிறார்கள். இப்படி ஆசாரிய மூர்த்திகளாகிய மணிவாசகப் பெருமானுக்கே ஆவல் அடங்கவில்லை. உள்ளந்தாள் முதல் உச்சிவரை நெஞ்சாக இருக்காதோ? என்கிறார்கள். உடம்பு முழுதும் கண்ணாகாதா என்று கருதுகிறார்கள். இப்படியில்லையே; நெஞ்சம் கல்லாகவும், கண்ணிணை மரமாகவும் இருக்கிறதே என்று ஏங்குகிறார்கள். திருவடி இன்பத்தை ஆரா அமுதை - சுவைத்துக் கொண்டேயிருக்கச் சுவாமி களுக்குத் திருவுள்ளம். அவர்கள் இன்னும் வேண்டுகிறார்கள்.

புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலாம் உருக்கி எளியையா யாண்ட
ஈசனே மாசிலா மணியே
துன்பமே பிறப்பே யிறப்போடு மயக்காந்
தொடக்கெலாம் அறுத்தநற் சோதீ
இன்பமே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

'உன்னை என்னுளே பிணித்துவிட்டேன்; நீ எங்கே இனிப் போகமுடியும்' என்ற ஒரு தெளிவும் கொண்டார்கள். அந்தத் தெளிவும் பிணைப்புந்தான் நம்மைத் தேற்றும். கேதாரநாதர் திருவடி வாழ்க'. என்று திருவாய் மலர்ந்துகொண்டே வந்தார்கள்.

'வழங்குகின்றாய்க்கு உன் அருளாரமுதத்தை வாரிக்கொண்டு விழுங்குகின்றேன்; என் விதியின்மையால் விக்கினேன்' என்று ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் முணுமுணுத்ததும் எங்கள் காதில் விழுந்தது.

## அயர்வு நீங்கிற்று :

தரிசன அநுபவத்திலே திளைத்துக் கொண்டே கௌரி குண்டம் வந்து சேர்ந்தோம். இருட்டிவிட்டது. இரவு அங்கேயே தங்கல். விடியற்காலம் புறப்பட்டு ராம்பூர் வந்து காலா கம்பளிவாலா சத்திரத்தில் தங்கி இரவு பாட்டா சட்டிவந்து சேர்ந்துவிட்டோம். போகும்போது இருந்த உற்சாகத் துடன் சிவநாம சிந்தனையுடனுமே மீளும்போதும் இருந்தோம். வரும் வழியிலே ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களுக்குக் கொஞ்சம் அயர்வு. அது நீங்க ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளவர்கள் 'திருமுறைப் பாராயணம் செய்வோம் ; ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களின் அயர்வு நீங்கும்' என்றார் கள். அவ்வாறே திருமுறைப் பாராயணம் செய்தோம். அயர்வும் நீங்கிற்று.

## கல் பைத்தியம் ;

கேதாரத்தை விட்டு வரும்போது வழக்கம்போல நானே கடைசியில் வந்தேன். வரும்வழியிலே ஒரு பைத்தியம். கௌரிகுண்டத்தைவிட்டு வரும் போது சூரியோதயம் ஆயிற்று. சூரியனின் இளங் கதிர்கள் சிறுசிறு மலைக்கற்களின் மீதுபட்டன. ஒவ்வொரு கல்லும் ஒவ்வொரு விதமான வண்ணச் சேர்க்கையோடு இருந்தது. மினு மினுப்பு இருந்தது. அவற்றில் இருந்த மினுமினுப்பும், வர்ணஜாலமும் சேர்ந்துகொண்டு 'என்னை எடுத்துக்கொள் ; என்னை எடுத்துக்கொள்' என்று என்னிடம் சொல்வது போல இருந்தது. பெரிய கற்களைப் பொறுக்கினால் தூக்கிக்கொண்டு வரமுடியாதே என்றிருந்தது. ஆனால் இவற்றை விட்டுவிட்டால் இனிப் போகுமிடங்களில் இவற்றைப்போல அகப்படுமோ அகப்படாதோ என்ற கவலையும் எனக்கு. சிறு கற்களாக இருந்தால் சுமையாகவும் இருக்காதே என்று எண்ணினேன். பார்த்துப் பார்த்துப் பொறுக்கலானேன். மின்னிக் கிடந்த பொன்னைப் போன்றிருந்த அவை ஒவ்வொன்றாக என் பையில் ஏறின.

நடுவழியில் என்னைப் பார்க்கும் யாத்திரிகர்கள் அருகில் வந்து 'க்யா புராண்' இந்தக் கல்லுக்கு என்ன மகிமை? என்றெல்லாம் கேட்கத் தொடங்கினார்கள். நான் எப்படி அதனைச் சொல்லு வேன் ? அந்தக் கல்லின் கண்கவர் வனப்பைச் சுவைக்கும்

கண்டோட்டமில்லை அவர்களுக்கு. பேசாமல் என் வேலையில் ஈடுபட்டுக் கொண்டே நடக்கலானேன். வர்ணரேகைகளும், பலவித சிறு வடிவங்களும் உடைய கற்கள் என்பார்வையில் படும்போதெல்லாம் ஓடி ஓடிச் சென்று பொறுக்குவேன். இந்நிலையில் எங்கள் கோஷ்டியினரெல்லாம் என்னை விட்டுத் தூரத்தில் போய்விட்டார்கள். அவர்களைவேறு நான் எட்டிப்பிடிக்க வேண்டும். இந்த சமயத்தில் போய்க்கொண்டிருந்த யாத்ரீகர்கள் சிலர் என்னருகில் வந்தார்கள். நான் கற்களைப் பொறுக்குவதையும், சிலவற்றைத் தூக்கி அப்பாற் போடுவதையும், சிலவற்றைச் சேமித்து வைத்துக் கொள்வதையும் கண்டார் ஒருவர். என்னை ஒரு மாதிரியாகப் பார்த்தார். அந்தப் பார்வையில் இலேசாகப் பயம் கலந்திருந்தது. மெதுவாக நழுவினார். திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே நடையைக் கட்டினார். ஆம், நான் ஒரு பைத்தியந்தானே! அந்த வண்ணச் சேர்க்கையிலே, வனப்பிலே, மினுமினுப்பிலே நெஞ்சைப் பறிகொடுத்து நின்ற நிலை இயற்கைப் பித்துத்தானே! உண்மைதான். இயற்கையைச் சுவைக்கும், அழகைச் சுவைக்கும் எவரையுமே அது அவ்வாறு பைத்தியமாக்கத்தான் செய்யும். இதுவும் ஒரு அநுபவம்தான். நடையை எட்டிப்போட்டு எங்கள் கோஷ்டியினரை அடைந்துவிட்டேன்.

## தருமை திரும்பினோம்;

செவ்வாய்க்கிழமை அன்றிரவு உருத்திரப் பிரயாகை வந்து சேர்ந்தோம். உருத்திரப்பிரயாகை வந்தவுடன் எங்கள் கோஷ்டி இரண்டாகப் பிரிந்தது. ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் பதரிக்குச் சென்றார்கள். நாங்கள் சென்ற வழியிலேயே மீண்டும் ஹரத்துவாரம் வந்து சேர்ந்தோம். ஹரத்துவாரத்தில் சாதுக்களுக்கு அன்னம் பாலிப்பு நிகழ்த்தத் திருவுளங் கொண்டார்கள் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள். ஸ்ரீ ஸ்ரீபோலானந்த சந்நியாச ஆசிரமத்தில் அன்னம் பாலிப்பு நடந்தது. அந்த ஆசிரமத்தை நிறுவிய பெரியார் சாது ஸ்ரீ போலாகிரி என்னும் பஞ்சாபியால், சில இலட்ச ரூபாய் செலவில் அக்கட்டிடம் கட்டப்பட்டிருக்கிறது. கங்கைக்கரை; ஐம்பது அறைகள்; நல்ல வசதி. சாதுக்கள் தங்கியிருக்கிறார்கள். பிருமசாரிகள் அவர்களுக்குத் தொண்டு செய்கிறார்கள். அந்த ஆசிரம வாசிகள் நாடோறும் சாத்திர ஆராய்ச்சி செய்கிறார்கள். நல்ல ஒழுக்கம்; தவத்திலும் சிறந்த கோலம்; வீணைசைகொண்டு வெளியே அலைவதில்லை. இரண்டு நாட்கள் தங்கிய பிறகு காசி புறப்பட்டுவந்தோம். காசியிலிருந்து விமான மூலமாக டில்லி வழியாய்ச் சென்னை வந்து சென்னையிலிருந்து தருமை திரும்பினோம்.

## உருத்திரப் பிரயாகையிலே பிரிந்தோம்:

பிரிந்தோம்; ஆனால் பின்னே கூடுவதற்கு. இந்த யாத்திரை ஒரு பெரிய யாத்திரை என்று சொல்லத் தேவையில்லை. அதிலும் தென்னாட்டு இரு

பெரும் மடாலயங்களில் இதுவரை செய்யாத-செய்யநினைக்காத ஒருபெரும் யாத்திரை இது. முன்னேயே சொன்னோம். ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் தென்னாட்டிலும் வடநாட்டிலும் உள்ள எல்லாத் தலங்களையும் தரிசித்திருக்கிறார்கள் என்று. திருமுறையில் உறைப்புடையவர்களாக இருத்தலாலும், சிவ சிந்தனையை மறவாத மனத்தினராய் உள்ளதனாலும், எங்கெல்லாம் சிவதலங்களுண்டோ அங்கெல்லாம் அவர்களும் சென்று இருப்பார்கள். தென்னாடுடைய சிவன் எந்நாட்டவர்க்கும் இறைவன் என்ற முழக்கம் வாயொலியாக இல்லாமல் தென்னாடுடைய சிவன் பரதகண்டத்திலே உள்ளொலியாக, ஒவ்வொருவர் உயிர்ப்பிலேயும் உலவி நிலவுவதைக் கண்டு கண்டு களித்திருப்பார்கள். இமயத்திலும் யாத்திரை விரிவாகச் செய்தவர்கள். இமயம் ஒரு தவபூமி; சிவபூமி, என்பதைக் கண்டு அநுபவித்தவர்கள். அத்தவபூமியிலே, மலைமெழு கொழுந்தாயுள்ள கேதாரநாதனைத் தரிசித்து மனங்கசிந்தவர்கள். 'தொண்டர் அஞ்சு களிறும் அடக்கி' என்ற தெய்வத்தமிழுக்கு இலக்கியமானவர்கள். கேதாரம், முந்நி வந்து புரோதாயம் மூழ்கி முனிகள் பலர் எந்தை பெம்மான் என்று இறைஞ்சுமிடம்' என்பதையும்; 'ஊழி ஊழி உணர்வார்கள் வேதத்தின் ஒண்பொருள்களால் வாழி எந்தை எனவந்து இறைஞ்சும் இடம்' என்பதையும், 'நீறுபூசி நிலத்து உண்டு நீர்மூழ்கி நீள்வரை தன்மேல், தேறுசிந்தை உடையார்கள் சேருமிடம்' என்பதையும் கண்டு தெளிந் தவர்கள். இவ்வளவு பீடுசான்ற பெருந்தலத்தைத் தம்முடைய குரு பீடத்தை அலங்கரிக்கின்ற ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களும் வந்து தரிசிக்கவேண்டும். தாம் பெற்ற பேற்றைக் குருமூர்த்திகளும் பெற வேண்டும் என்ற பெருவிருப்பினால் ஒவ்வொரு யாத்திரையை முடித்துக் கொண்டு வந்தபோதும், தங்கள் அநுபவங்களையும் தாங்கள் கண்ட காட்சிகளையும் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களிடத்தில் தெரிவித்துக் கொள்வார்கள். இவ்வாறு உண்டான தூண்டுகோல் ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் இந்த யாத்திரையைச் செய்வதற்கு வாய்ப்பளித்தது.

## இமய யாத்திரை எளிது :

பொதுவாக இமய யாத்திரை சென்று வருவோர் பலரும் பல புத்த கங்கள் எழுதியிருக்கிறார்கள். அவற்றில் அவரவரும் கண்ட காட்சி களையும் விளக்கி இன்னல்களைப் பெரிதாக்கி எழுதிவைத்திருக்கிறார்கள். அவற்றைப் படிப்போர் இமய யாத்திரைக்கெனப் புறப்படுவதை மிக்க துன்பம் தருவதாக நினைத்து விடுவார்கள். அதனால் உறைப்புடைய தொண்டர்கள் சிலரைத்தவிர மற்றோர் இமய யாத்திரை செய்தல் அரிது. ஆனால் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் அநுபவத்தில் அது எளிதாக - இனிமை உடையதாக இருந்தது; இருக்கிறது. ஆகையால் அந்த அநுபவத்தைக்கொண்டு ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களும் இந்த

பிரிகிறோம் என்ற உணர்ச்சி உருத்திரப்பிரயாகையில் எங்கள் ஒவ்வொருவருக்கும் உண்டாகியது. பிரிகிறோம் என்ற கவலை. ஆனால் அதுவும் மற்றொரு பெரிய யாத்திரையை மேற்கொண்டு செல்கிறார்கள் என்ற மகிழ்ச்சியும் ஒருபுறம். இரண்டு உந்தூர்திகளும் இரு திசைகளிலும் பிரிந்து சென்றன. அவர்களுடைய அந்த யாத்திரையின் அந்தப் பகுதியும் மிகவும் வெற்றிகரமாக நிறைவேற வேண்டுமென்று எம்பெருமானை உளமார வாழ்த்தி நின்றோம். கேதார்நாத் பாபாகிஜே! பத்ரி விசால்கிஜிகிஜே! கங்காமாயிகிஜே! பாரதமாதாகி ஜே!.

## கல்லும் சொல்லாதோ கவி :

ஆறு, மலை, அருவி, அடவி எல்லாம் அறிவுரைகள் வழங்குகின்றன. தன்பால் வரும் மனிதனுக்கு நல்லுரை சொல்கின்றன. பேசுகின்றன. ஆனால் கேட்கவேண்டும், புரிந்துகொள்ள வேண்டும் என்ற முயற்சிதான் வேண்டும். ஊன்றிய நோக்கு வேண்டும்; ஒன்றிய உள்ளம் வேண்டும்; அங்கேயும் உள்ளம் உண்டு; உள்ளக் கனிவும் உண்டு; உண்மையும் உண்டு. காணலாம்; பேசலாம்.

## ஆறு :

கரையோரத்திலுள்ள வழியே வந்துகொண்டிருந்தேன். எட்டிப் பார்த்தேன். பயமாக இருந்தது. பாதாளத்திலே ஓடியது தண்ணீர். ஆனால் ஆற்றின் அகலம் அதிகம். ஆழமும் அதிகம். தண்ணீரின் ஓட்டம் வெளித் தோற்றத்தில் தெரியவில்லை; ஆனால் ஓடுகிறது; சிந்தித்தேன். பேசுகிறது :- ‘மனிதனே! என்னைக்கண்டு அஞ்சாதே! தேங்கி நிற்கிறேன் என்று நினைக்கிறாயா! இல்லை; நிற்க நேரம் ஏது எனக்கு? தேக்கத்தின் பின்னால் ஓட்டம் இருப்பதையும் காண்பாய்; என் ஆழம் அறிவின் ஆழம். என் அகலம் பரந்து விரிந்த அறிவின் பரப்பு; தெளிவு ஞானத் தெளிவு-உண்மை உணர்ந்தவர்களின் உள்ளத் தெளிவு. இங்கே பெரியோர்களைக் காண்பாய்; அவர்களுடைய கூட்டுறவும் உனக்குக் கிடைக்கும். என்னைக்கண்டு கலங்கியதுபோல அவர்களைக்கண்டு கலங்காதே. நெருங்கி உறவாடு. என் ஆழத்தில் நீந்தாதே; அந்த ஆழத்திலே நீந்து. பண்படலாம்; உண்மை தெளிவாகும்; நேரமாகிறது; போய்வா’.

மேலே சென்றேன். அதே ஆறு. அதே தண்ணீர். ஆனால் அகலம் இல்லை. ஆழமும் இல்லை. வேகம் அதிகம்; சலசலப்பு உண்டு. என் மனம் நினைத்தது; அறிவின் ஆழம் இல்லாதவர்கள் செய்கை இப்படியிருக்கும், வேகமாகப் பேசுவார்கள்; சலசலப்பு மிகுந்திருக்கும், விஷயம்



ஆறும் வழியும்



திரும்புகையில் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் வந்த வானூர்தி

கேதாரயாத்திரை: (கௌரிகுண்டம்)



வெந்நீர் ஊற்று



மலைவழி

இருக்காது என்று. ஆனால் அங்கேயும் ஒரு குரல் கேட்கிறது; 'தம்பி! நீ நினைப்பது மனிதப் பண்பாடு! நாங்கள் எல்லாம் அதற்கு விதிவிலக்கப்பா. நான் ஓடினேன்; ஓடுகிறேன்; ஓடுவேன். பல்லாயிரம் ஆண்டுகளாகத் தொண்டு தொண்டு தொண்டுதான் என் குறிக்கோள். ஒரு கணம் தாமதித்தால் உலகம் ஒரு யுகமாக எண்ணும் அதை. என் அன்புச் செல்வங்களாகிய உங்களுக்காகவே ஓடுகிறேன். உங்கள் உயிர் வாழ்க்கை என்னிடம் உள்ளது என்பதைத் தெரிந்திருப்பாய்; அறிவுடையவர்களுக்கு என்னைப் பயன்படுத்திக் கொள்ளத் தெரியும். இவ்வழியிலே உன் சிந்தனையைத் திருப்பு, பேசாதே; செயலாற்று!' என்று.

திகைத்தேன்; வழிநடந்தேன். மீண்டும் அதே ஆற்றங்கரை; ஆற்றின் நடுவிலே குண்டு குண்டாகக் கற்கள். அவற்றைக் கிழித்துக் கொண்டு தண்ணீர் வேகமாக ஓடுகிறது. வேடிக்கையாக இருந்தது எனக்கு. விழிகளை அகல விரித்து நோக்கியபடியே நின்றேன்.

'வேடிக்கை பார்க்கிறாயா? என்செயல் உனக்கு விளங்கவில்லையா? நடுவிலே கிடக்கும் குண்டுக் கல்லைப் போல உன்வாழ்க்கை நடுவிலேயும் பெருந்தடைகளும் உண்டு. அதைக்கண்டு அஞ்சாதே! எதிர்த்து முன்னேறு! நான் என்ன செய்கிறேன் தெரியுமா? இந்தக் கற்கள் எப்படி வந்தன என்பது உனக்குத் தெரியுமா? இவை பெரும் பெரும் பாறைகளாக இருந்தவை. என்னை எதிர்த்தவை. என் ஓட்டத்தைத் தடுத்ததாகப் பெருமை சொல்லிக்கொண்டவை. என் தொண்டு தடைப்படுமோ? புரட்டினேன்; இப்பொழுதும் புரட்டுகிறேன்; தேய்க்கிறேன்; பொடியாக்குகிறேன்; வெற்றி! எனக்கே வெற்றி! இது செய்வதற்காக நான் நிற்க முடியுமா? ஓடுகிறேன். அவற்றின் மீதே தாவி ஓடுகிறேன். அந்தக் குதிப்பிலே - ததும்பலிலே என் ஆனந்தத்தைக் கண்டாயா? உன் துன்பத்தைக்கண்டு நீ அஞ்சாதே; எதிலும் **முயற்சி உடையோர் வெற்றி காண்பார்.** அவ்வாறு காணும் வெற்றியில் ஒரு இன்பம் இருக்கிறது. இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை'

மீண்டும் நடந்தேன். என் நடையிலே ஒரு விறுவிறுப்பு. இன்னொரு ஆறு இந்த ஆற்றிலே வந்து கலக்கும் ஒரு கட்டம் வந்தது. வேகமாக வெண்ணுரையோடு ஒன்றோடொன்று தழுவிக் கலந்தது. அங்கே ஒரு ஆரவாரம். மந்தாகினியும் அலகநந்தாவும் சேருங் காட்சி இது. மந்தாகினி கேதாரத்தில் உற்பத்தி. அலகநந்தா பதரியிலிருந்து உற்பத்தி. கேதாரம் அன்புருவாம் சிவம். பதரி அருளுருவாம் சத்தி. ('அரியலால் தேவியில்லை' யல்லவா?) அன்பிலிருந்து பெருகி வரும் கடலும், அருளிலிருந்து பொங்கி வரும் கடலும் கலக்கின்ற காட்சி. சேக்கிழார் கண்ட கவிக்காட்சி; காணுங்கள், அக்காட்சியை அறிவுக்கண்ணால்!

அருள்பெருகு தனிக்கடலும் உலகுக்கெல்லாம்
அன்புசெறி கடலுமாம் எனவும் ஓங்கும்
பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற
புண்ணியக்கண் இரண்டெனவும் புவனம் உய்ய
இருட்கடுவுண்டவர் அருளும் அகிலம் எல்லாம்
ஈன்றாள்தன் திருவருளும் எனவும் கூடித்
தெருட்கலைஞானக் கன்றும் அரசும் சென்று
செஞ்சடை வானவர் கோயில் சேர்ந்தார் அன்றே.

## மலை :

பனிமலை அடிவாரம் சென்றேன்; கண்டு நின்றேன். தலை நிமிர்ந்து பார்த்தேன். நீண்ட பெருமூச்சொன்று வெளிப்பட்டது. எனக்கு ஒரே மலைப்பு. எங்கிருந்தோ ஒரு குரல்.

'மலைக்கிருயே, மனிதா! இந்த அடவியும் அந்த வனவிலங்குகளும் தேளும், பாம்பும் உன்னைப் பயமுறுத்துகின்றனவா? பனி – உறைபனி - உன்னை அச்சுறுத்துகிறதா? காற்று - வேகமாகச் சுழன்றடிக்கும் இப்புயல்- அதுவும் பனிப்புயல் உன்னை வருத்துகிறதா? அந்த இடியின் குரல் உன் இதயத்தைப் பிளக்கிறதா? மின்னல் ஒளி உன் கண்ணைப் பறிக்கிறதா? அந்த ஆற்றின் முழக்கம் உன்னைச் செவிடுபடச் செய்கிறதா? கலங்காதே! இவைகள் என் கணங்கள். இந்தச் சீற்றமும், பாய்ச்சலும் என்னை ஒன்றும் செய்யமுடியாது. என் பெருமையைப்பற்றிச் சிந்திக்கிருயா? 'அடிபேரின் பாதாளம் பேரும்; முடிபேரின் மாமுகடு பேரும்; கைபேரின் வான்திசைகள் பேரும்' என்று.

'உன்னுள்ளே நினைத்துப்பார், அங்கே சிவபரம் பொருளைக் காண வில்லையா? இல்லையேல் புறத்திலே என்னைப்பார். தீயபொருள்களைத் தன்னிடத் தடக்கிக் கருணை வழிந்து ஆண்டவன் நிற்கும் கோலம் என்னில் தெரியவில்லையா? பொல்லாத நாகமும், பொசுக்கிவிடும் ஆலகால விஷமும், பாய்ந்துவரும் புலியும், முழங்கி வரும் யானையும், அடர்ந்தோங்கிய சடைக்காடும், ஆரவாரித்து வரும் கங்கையாறும் ஆண்டவனைச் சார்ந்து அழகுபெறவில்லையா? ஒன்றேடொன்று பகைமை மறந்து அன்பாக வாழ வில்லையா? இவ்வளவும் தான் ஏற்றுக்கொண்டு ஆண்டவன் நமக்கு இன்காட்சி வழங்குவது இப்போதாவது உனக்கு விளங்குகிறதா? ஊன்றிப்பார்.'

## அருள் வெள்ளம் :

என் மனம் வேலைசெய்யத் தொடங்கியது. கல்லும் ஆறும் கருத்து மழை பொழிகின்றனவே என்று. அங்கே ஆநந்தக்காட்சி கண்டது.

மலையிலே தங்கமும், வெள்ளியும், நவமணிகளும், சிதறிக் கிடப்பதைக் கண்டேன்; லிங்கமும், அபிரகமும் மற்ற மருந்துகளும் மன்னிக் கிடப்பதைக் கண்டேன். பயன்தரும் மரங்களைக் கண்டேன். உயிர்வெளிக் காற்று உலவக்கண்டேன். தண்ணளி சுரந்து நிற்கும் தெண்ணீர் அருவிகளைக் கண்டேன். அங்கே எல்லாம் நமக்கு அருள் வெள்ளமாகப் பொங்கி வழிவதைக் கண்டேன். ஆண்டவனைக் கண்டேன் அங்கே. அதுதான் திருக்கேதாரம்.

௳

## கேதாரநாதா!

கேதார நாதா! இளவாத பேரொளிஉன்
பாதார விந்தம் பணிந்தெழுந்தோம்—காதாரத்
தேவே!உன் சீரே தெளிந்தோம்;என்றும் முரைக்கும்
நாவேஉன் நாமம் நயந்து.

# புண்ணியத்தின் புண்ணியம்

"பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியம்" —

பத்து ஆண்டுகளுக்கு முன்பு, தருமபுர ஆதீனத்தில் 24-ஆவது குருமகாசந்நிதானமாக அருளாட்சி செலுத்திவந்த ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் தமது திருமேனி ஆரோக்கியமாக இல்லை என உணர்ந்தார்கள். யாக்கை நிலையாமையும் அவர்கள் திருவுளத்தில் தோன்றியிருக்க வேண்டும். ஆதீனத்தின் கண்மணியிற் சிறந்த நன்மணியாகிய திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீமத் அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களை அழைத்துவர ஆணைபிறந்தது. அவர்களும் வந்து சேர்ந்தார்கள். அப்பொழுது ஒடுக்கத்திலே சொக்கநாதர் பூசை முதலிய நற்றொண்டுகளைச் செய்து பண்பாட்டுடன் விளங்கிய சிவகுருநாதத்தம்பிரான் சுவாமிகளை அழைத்து வருக எனப்பணித்தார்கள். ஸ்ரீமத் காசிவாசி சுவாமிகளவர்கள் உடனிருக்க ஸ்ரீமத் சிவகுருநாதத் தம்பிரான் சுவாமிகளவர்களுக்கு அபிஷேகம் செய்துவைத்து ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் என்ற தீட்சா நாமத்தையும் சூட்டி அருளினார்கள். அதிலிருந்து தருமபுர ஆதீனத்தின் 25-வது குரு மகாசந்நிதானமாக அவர்கள் அருளாட்சி ஏற்று நடத்தி வருகிறார்கள் என்பது எல்லோரும் அறிந்த ஒன்று.

## தவம் பலித்தது :

ஆட்சிக்கு வந்த சில நாளைக்கெல்லாம் இந்த ஆதீனத்து குரு மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஆனந்த பரவச தேசிக பரமாசாரிய சுவாமிகளுடைய குருமூர்த்தத்தை ஆலயமாகக் கட்டி வழிபட வேண்டும் என்று திருவுளம் கொண்டார்கள். முன்னே பட்டத்திருந்த ஞான மூர்த்திகள் சிலர் இவ்விதமே செய்ய நினைத்துத் தரைமட்டத்துக்குக் கட்டியிருந்தார்கள். ஆனால் பலரும் பலமுறை முயன்றும் அது கூடிவரவில்லை. இப்பொழுதும் முதல் முயற்சி தடைப்பட்டது. இதில் ஏதேனும் தவறு இருக்க வேண்டும் என்று ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில் உணர்ந்தார்கள். பழைய கட்டடத்தைச் சோதித்துப் பார்க்கலாம்; தவறுண்டானால் திருத்திக்கட்டி விடலாம் என்று உறுதி கொண்டார்கள். சோதனை செய்ததில் ஆலயம் அமையவேண்டிய இடத்தில் இல்லாமல் இருந்தது. அதனோடு சில அருட்காட்சிகளும் அங்கே ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களுக்குத் தோன்றியிருக்க வேண்டும். பழைய கட்டிடத்தைப் பிரித்துவிட்டுப் புதிதாக அமைய வேண்டிய இடத்தில்-அமைய வேண்டிய முறையில் - ஆலயம் எழுந்தது ; அதனோடு அந்தக் குருமூர்த்தத்தின் இருபுறத்திலும் அமையப் பெற்றிருந்த 18-வது

குரு மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாணிக்கவாசக தேசிகர், 24-வது குரு மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிகர் என்ற இரு பரமாசாரிய சுவாமிகளுக்கும் ஆலயங்கள் எழுப்பப் பெற்றன. இவ்வாறாக ஆனந்த பரவசர் ஆலயம் கட்டி முடிந்து விளங்குவதாயிற்று. ஆதி முதல்வர் ஸ்ரீலஸ்ரீ குருஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகளவர்களாலேயே 'ஆனந்த பரவசனைக் கண்டும் கண்டும்', என்று போற்றப் பெற்ற பெருமை உடைய அந்த பரமாசாரிய சுவாமிகளின் குருமூர்த்தத்தில் வழிபாடு செய்பவர் வேண்டிய வேண்டியாங்கு எய்துவர். இது இன்றும் உண்மை. ஆனந்த பரவசர் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களுக்கு அருளிய அருட்காட்சி - அருளாசி தவமேன்மையை மேலும் ஓங்கச் செய்வ தாயிற்று. தவமும் தவமுடையார்க்கே அல்லவா ?

காசியிலிருந்து கன்யாகுமரிவரை என்று சொல்வார்கள். அதுவும் விரிவடைந்தது இவர்கள் ஆட்சியிலே. இமயத்திலிருந்து கன்யாகுமரிவரை என்று திருத்தியது ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் பல பெரிய யாத்திரைகளின் தரிசன விரிவு. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்கள் பெரிய தலங்கள், (கேதாரம், காசி, காஞ்சி, மதுரை, இராமேசுவரம், திருச்செந் தூர், கன்யாகுமரி முதலிய பல) தீர்த்தங்கள் (கங்கை, யமுனை, மந்தாகினி, அலகநந்தா, காவிரி, குமரி, தாமிரபரணி, தனுஷ்கோடி முதலியன) ஆடு தலும் அவர்களுடைய ஆட்சிச்சிறப்பு. பாடல்பெற்ற தலங்களுக்கு எழுந் தருளி திருமுறை ஓதி முறையாக வழிபாடுசெய்து வருவார்கள். உத்தர வாகும்: "மனிதன் தன் வாழ்நாளிலே நல்ல வாலிபப் பருவத்திலே முயன்று முயன்று ஓடிப் பொருள் தேடுகிறான். அது செல்வந்தானே! (செல்வோம்) அவன் ஆயுட் காலத்திலேயே அருள் இருக்கிறபடி கூடியும் குறைந்தும் போகலாமல்லவா! அது இன்ப துன்பத்துக்கு அடிப்படையாக நிற்ப தல்லவா! நாமும் அருட் சேமிப்பு தேடி வைத்துக்கொள்ளவேண்டும். நிறைவான பேரின்பத்தையே அது நமக்குக் கொடுக்கும். ஆசாரியப் பெருமக்கள் சிறப்பித்த - திருவடிபட்ட - சிந்தனைதோய்ந்த திருத்தலங் களில் நமக்குப் பருவம் இருக்கும்போதே ஓடி ஓடி சிவபுண்ணியப்பேறு தேடுவோம். இது ஒன்றுனும் குறையாது; நிறைவேயன்றிக் குறைவே இல்லை. வாருங்கள்! உடனழைத்துப் போகிறேன். நீங்களும் தேடிக் கொள்ளுங்கள்" என்று.

ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் இவ்விதமே திருவடிச் சேமம் சேர்த்து வருகிறார்கள். தேடிக் கொள்ளும்படி மற்றவர்களையும் உடன் அழைத்துச் செல்கிறார்கள். வர இயலாதவர்களுக்கு வழிகாட்டியாகவும் நிற்கிறார்கள். குருவாரம் தோறும் மௌனத் தவமிருந்து அருள்பெருக்கி வருகிறார்கள். கந்தர்சஷ்டி ஆறு நாட்களிலும் தவம் பெருக்குகிறார்கள். வாழ்வு தவவாழ்வாகத் திகழ்ந்தோங்குகிறது.

## அடியவர் சேர்க்கை:

சைவம் உலகப் பெருஞ்சமயம். அது எந்த சமயத்தையும் மறுப்பதில்லை. பரந்துபட்ட சமரசக் கொள்கை. எல்லா மதங்களையும் ஒப்புக் கொண்டு தன்னுடைய சிறப்பை வெளியிட்டு நிற்கும் விழுமிய சமயம். இதேபோன்று, தவவாழ்விற் சிறந்தவர்கள், ஞானபீடத்து அமர்ந்திருக்கும் பெரியார்கள் எந்தச் சமயத்தைச் சார்ந்தவர்களாய் இருந்தாலும் அவர்கள் எல்லோரையும் வருக என அழைத்து ஒன்று கூட்டிய சிறப்பு ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களுக்கு உண்டு. அத்வைதியான ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகள் அவர்கள், விசிஷ்டாத்வைதியான வானமாமலை ஸ்ரீமத் ஜீயர் சுவாமிகள் அவர்கள், வீர சைவ மதத்தைச் சேர்ந்த மயிலம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் அவர்கள், சமரச நோக்குடைய ரிஷிகேசம் ஸ்ரீமத் சிவானந்த சரஸ்வதி மஹராஜ் அவர்கள் முதலிய பல சமயத் தலைவர்களையும் உரிய மரியாதைகளோடு அழைத்து, உவந்து வரவேற்று அவர்களோடு அளவளாவித் தெய்வக்கொள்கை பரவுதற்குரிய ஆக்கத் திட்டங்களை அமைத்திருக்கிறார்கள். சைவமடங்களிலே, சிறப்பாகத் திருவாவடுதுறை ஆதீனம், திருவண்ணாமலை ஆதீனம், மதுரைத் திரு ஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனம், செங்கோல் ஆதீனம், முதலியவற்றின் தலைவர்களாக உள்ள ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களையும், திருப்பனந் தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களையும் அவ்வப்பொழுது அழைத்தும், அந்தந்த மடாலயத்துக்கு எழுந்தருளியும் எல்லோருமாகக் கலந்து பேசி உறவாடிக் கருத்தொற்றுமையை உண்டாக்கிய உயர்வும் உடையவர்கள்.

நாட்டிலே 'வைதிகர்கள் ஒன்றுகூடமாட்டார்கள். கூடினாலும் அங்கே ஒற்றுமை நிலவாது. அப்படியே இருந்தாலும் உருவான பயன் எதுவும் இராது' என்று சொல்லுவார்கள். அது பெருந்தவறு; ஞானதலைவர்கள் (வைதிக சிகாமணிகள்) ஒன்று கூடுவார்கள். உலகுய்ய - உயர்ந்த தீர்மானங்களை உருவாக்குவார்கள் அவர்கள் வழியிலே. அங்கே ஒரு நிலையான பயனை மக்கள் அடையலாம். அவர்கள் ஞான வழிகாட்டிகளல்லவா? வேற்றுமையில் ஒற்றுமை அங்கே நிலவிநிற்கும். வேற்றுமை காண்பதில் அல்ல. வெவ்வேறு கொள்கைகளையும் ஒன்றுகப் பிணைத்து அதிற்காணும் சாரத்தைச் சமுதாயத்துக்கு வாரி வழங்குவார்கள் அவர்கள் என்பதை நடைமுறையில் செய்து காட்டிய பெருமை ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானமவர்களுக்கு உண்டு. இந்த ஒற்றுமையில் அவரவர் சமயக் கொள்கைகளை அவரவர் வழியிலே பிரசாரம் செய்து கொள்ளலாம். ஆனால் அங்கே ஒரு நல்ல கருத்தொற்றுமையைக்காணமுடியும் என்பதை மக்களும் உணர்ந்து வருகிறார்கள். அதுவே ஒரு இந்து சமுதாய நலத் திட்டம்.

## சமய ஒருமை :

'யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே
மாதொரு பாகனுர்தாம் வருவர்'

என்கிறது சிவஞானசித்தியார். ஆகவே உலகச் சமயங்கள் எல்லாம் மக்கள் நலங்கோரி அருளால், கடவுளால் உண்டாக்கப் பெற்றவை. ஒவ்வொன்றும் கடவுளுண்மையை அந்தந்த சமய வழியிலே எடுத்து மொழிந்து மக்களுக்கு உணர்வு கொடுத்து வருவது என்பதையும் இவ்வாதீனம் நிலைநாட்டிவருகிறது. இந்த ஆட்சிக் காலத்திலே சமய வகுப்பு சமய மாநாடு என்ற எல்லா வழிகளிலும் அந்தந்தச் சமயத்தைச் சார்ந்தவர்களைக் கொண்டு அவரவர் கொள்கைகளை ஆதீன மடாலயத் திருநெறிய தெய்வத் தமிழ் மன்றத்திலே வந்து எடுத்து மொழியுமாறு வசதி செய்யப்பட்டிருக்கிறது. இங்கே உலக சமயங்களான இந்துமதம் (இந்தியாவிலுள்ள பல வைதிக சமயங்கள்) பௌத்தம், சைனம், கிறிஸ்தவம், மகம்மதியம், இன்ன பிறவும் ஆராயப்பெற்றன. எல்லாக் கொள்கைகளாலும் அடிப்படை ஒற்றுமை இருப்பது எடுத்துக் காட்டப்பெற்றது. 'ஆரா இன்ப அருங்கனி பிழிந்து சாரங்கொண்ட சைவ சித்தாந்தத்தின்' அரும்பெருங் கருத்துக்கள் தோன்றி பலருக்கும் எளிதிற் புரிய நூல் வெளியீடுகள் வெளியிடப்பெற்றன. ஞானசம்பந்தம் திங்கள் இதழ் ஆக்க வேலைசெய்து வருகிறது. அதிலே அறிஞர்கள் பலர் எழுதிச் சிறந்த கருத்துக்களை வெளியிட்டு வருகிறார்கள்.

## பல்கலைக் கழகம் :

தலைப்பே உள்ளுறை பொருளுக்கு விளக்கம். விரிக்கிற் பெருகும். படிப்பு வசதி ஆரம்பக் கல்வி முதல் உயர்நிலைக் கல்வி வரை எல்லாப் பகுப்பிலும் உண்டு. இசை உண்டு (வாய்ப்பாட்டு, கருவிப் பயிற்சி). மொழி வளம் காக்கக் கல்லூரி உண்டு (தென் மொழி, வட மொழி). பொதுக் கல்வி போதிக்கப் பள்ளிகள் உண்டு (ஆரம்பம், உயர்நிலை இரண்டும்). சமய பாடசாலைகள் உண்டு (தேவாரம், ஆகமம்). வெறும் படிப்பல்ல; உலகியலும் கலந்ததொரு படிப்பு. இவை அல்லாத சமய சாத்திர வகுப்புக்களும் உண்டு; கோடையிலே நிகழும், மாரியிலே நிகழும். எப்போதும் சிறுசிறு கால அளவிலே அன்பர்களைப் பயிற்றுவதும் உண்டு. இவ்வாறு இங்கே பல கலைகளும் மலிந்து கிடக்கும். இலக்கியத் துறையிலும், சமயத் துறையிலும் நாடகங்கள் பல மாணவர்களுக்குப் பயிற்றுவிக்கப்படுகின்றன.

## தீண்டாதார் இல்லை :

சொல்வார்கள் மகாத்மா காந்திஜி வந்தார், தீண்டாமை ஒழிந்ததென்று. ஆனால் சைவ வைணவ சமயங்கள் சொல்கின்றன தீண்டாதார்

இல்லை என்று. எங்கே பரிபக்குவம் உண்டோ அங்கே தீண்டாமை இல்லை என்கின்றன அடியவர்களின் வரலாறுகள். ஆண்டவன் படைப்பிலே எல்லோரும் சமம். இந்த வழியிலே இவ்வாதீனம் பல ஆண்டுகளாகத் தொண்டுசெய்து வந்திருக்கிறது. அது சிறப்பாக இந்த அருளாட்சிக் காலத்திலே பெரிய புரட்சிகரமான ஆக்கம் செய்திருக்கிறது. அரிசன ஆலயப் பிரவேசம் தானகச் செய்து வைத்தது. அப்போது சட்டம்கூட அனுமதி அளிக்கவில்லை. அரிசனங்களுக்குக் குடிதண்ணீர் வசதி, பாட்டை வசதி, குடிசை அமைப்பு, படிப்புக்குப் பொருள் உதவி, ஆடை முதலியன கொடுக்கின்றது. அன்னம் பாலித்து அரண் செய்கிறது. இவ்வாறு எவ்வெவ் வழிகளில் அவர்கள் அறியாமையைப் போக்க முடியுமோ அவ்வவ் வழியிலெல்லாம் போக்கி வருகிறது. சேரிகளிலே சென்று சமயப் பிரசாரம் செய்கின்றது. திருநீறு அணியச் செய்கின்றது. தரிசனத்துக்கு ஆலயத்துக்கு அழைத்துச் செல்லுகிறது. ஆக்க வேலைகள் இப்படிப் பல.

## கருத்தும் எழுத்தும் :

எழுத்து கருத்தால் உருவாவது. கருத்து சிந்தனையின் விளைவு. சிந்தனை தெளிவின் தோற்றம். தெளிவோ நூலாலும் குருவாலும் உண்டாவது. குரு கடவுளின் பிரதி பிம்பம். கடவுள் தெளிவு ஞானத் தெளிவு. ஞானத்தெளிவு எண்ணற்ற பிறவிகள் தோறும் தொடர்ந்து வருவது; எழுமையும் ஏமாப்புடைத்து என்பார் வள்ளுவர். இவ்வாறு கண்டு, சிந்தித்து, தெளிந்து உணர்த்திய பெருமக்கள் நமக்கு ஞானசாரியர்கள். தாம் கண்டு அநுபவித்த இன்ப அநுபவத்தைப் பிறரும் கண்டு அநுபவிக்கும் வண்ணம் செய்வதே அவர்கள் திருவுள்ளம். இது பெரியோர் செய்கை. தாம் இன்புறுதல், உலகு இன்புறுதல். இவ்வாறு நமக்கு நமது அறிவுடைப் பெருமக்கள் தந்து - கண்டு வைத்திருக்கிற அறிவுக் கருவூலங்கள் மிகப் பல. அவற்றின் நயங்களும் இன்ப அநுபவங்களும் புலப்படுத்திநிற்கும். அந்த இன்ப நலங்களை நல்ல புலவர்கள் நமக்கு ஆய்ந்து எடுக்கின்றனர். அவைகளைத் திரட்டி ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் நமக்கு வழங்குகிருர்கள். அந்தத் திருக்கைவழக்கம் ஆராய்ச்சியாகவும், அநுபவங்களாகவும், இலக்கியங்களாகவும், ஞான சாத்திரங்களாகவும், திருமுறைகளாகவும், விஞ்ஞானமாகவும், எல்லாமாகவும் வடிவெடுத்து உதவுகின்றது. இதுவரை சுமார் 350 வெளியீடுகள் வெளியிடப்பட்டுள்ளன. அறிவுத் தேட்டம் உள்ளவர்களுக்குச் சுவையான விருந்து. ஆங்காங்குள்ள புத்தக சாலைகளுக்கும் 'பெரும் உதவி.'

## ஆலயமும் அரனும் :

'ஆண்டவனது அருள் ஊற்றுக்கண்களே ஆலயங்கள்; ஆலயங்கள் வழியாகவே ஆண்டவன் அருளைப் பெறமுடியும். பயன் பெறவேண்டு

மானுல் சாதனம் வேண்டும். அந்தச் சாதனையிலே வெற்றிபெற்றவர்கள் அருள் உடையவர்களாவார்கள். அந்தத் 'தேறுசிந்தையார்கள்' கண்டு கட்டிவைத்த திருக்கோயில்களில் மூவர் முதலிகளாற் பாடல்பெற்ற சிறப்புடைய தலங்கள் பல இவ்வாட்சியின் கீழ் இருந்துவருகின்றன. திருப்புள்ளிருக்குவேளூர் (வைத்தீசுவரன்கோயில்.) சீகாழி, திருவையாறு, திருக்கடவூர், திருப்பனந்தாள், திருக்கோளிலி, திருஆரூர், சிராப்பள்ளி முதலிய பெருந்தலங்கள் 27 இவ்வாதீன ஆட்சியில் உள்ளன.

ஆலயம் மனத்தூய்மை உண்டாக்குவதற்கு ஒரு தூண்டுகோல்; அங்கே தூய்மை நிறைந்திருக்கவேண்டும்; அப்போதுதான் ஆலயமும் அங்குள்ள கடவுட் திருமேனிகளும், காண்போர்க்குக் கனிவை உண்டாக்கும். அழகும் அங்கே அரண்செய்யப்பெறவேண்டும்; அப்பொழுது தான் அங்கே கடவுட்காட்சியைக் காணலாம். ஐந்துபேரறிவும் கண்களே கொள்ளும். இவற்றுக்கு இலக்கியமாக ஆதீன ஆலயங்கள் இலங்குகின்றன என்று பலரும் பாராட்டிப் பேசுகிறுர்கள்.

கோபுரங்கள், விமானங்கள், மண்டபங்கள் எனுமிவற்றைப் புதுக்கித் திருப்பணிசெய்தல், கடவுட் திருமேனிகளையும், பரிவட்டங்களையும், பாத்திரங்களையும் தூய்மைப் படுத்தல், ஆகம முறைப்படி வழிபாடு நடத்துவித்தல், திருமுறைப் பாராயணம் விண்ணப்பிக்கச் செய்தல், வருகின்ற பக்தர்களுக்கு வசதிசெய்தல், வாகனங்கள், திருவாபரணங்கள், திருக்குளம் செப்பனிடுதல், சொத்துக்களை நல்லமுறையில் பராமரித்தல், திருக்கோயில்களை ஜீரணோத்தாரணமாகவும், அஷ்டபந்தனமாகவும் குடமுழுக்கு விழாக்கள் செய்தல், அர்ச்சனைகளை அழகுற நிகழ்வித்தல், உற்சவங்களை ஒழுங்குறச்செய்தல்-இவை நம் ஆதீனக்கோயில்களுக்கே உரிய சிறப்பியல்புகள்.

அடியிற்கண்ட ஆலயங்களில் குடமுழுக்கு விழாக்கள் நிகழ்த்தப் பெற்றிருக்கின்றன:- 1. புள்ளிருக்குவேளூர். 2. சீகாழி. 3. திருக்கடவூர் 4. தருமபுரம் - தருமபுரீசுவரர் ஆலயம். 5. ஞானபுரீசுவரர் ஆலயம். 6. மேலக்குருமூர்த்த ஆலயம். 7. தலைஞாயிறு. 8. கருங்குயில்நாதன் பேட்டை. 9. மணக்குடி. 10. திருநின்றியூர். 11. திருமுல்லைவாசல்.

## அன்பர் கூட்டம்:

அக்காலத்திலே மக்கள் ஞானவேட்கையால் திருமடங்களை நாடி வந்தார்கள். அப்போது உண்மை அவாவோடு ஓடிவரும் காரணர்க்கு உண்மை (ஞான உபதேசம்) தெளிய வைத்தார்கள் திருமடத்து ஞானுசாரியர்கள். மக்கள் மடங்களுடைய வளர்ச்சியிலே கண்ணுங் கருத்துமாக இருந்தார்கள். ஏதாவதொரு காணிக்கை செலுத்தி அதைப் பெருமையாக

நினைத்தார்கள். காலம் மாறியது. தேசம் மாறியது. அந்நிய ஆட்சியினர் - அந்நிய மதத்தினர் - ஆட்சியிலே புகுந்தனர். மக்கள் மனப்பாங்கும் மாறியது. அரசன் எவ்வழி குடிகளும் அவ்வழி அல்லவா? 'வரலாறு சுழன்று கொண்டே வரும்' என்பர் அறிஞர். அதுவும் நிகழ்ந்தது. அதுதான் நம் நாட்டுச் சுதந்தரம். சுதந்தரம் பெற்ற பிறகு பழைய பண்பாடு-சமயப்பண்பாடு - வளரவேண்டும் என்ற எண்ணமும் வளரலாயிற்று. அதற்கு ஒரு தூண்டுகோலும் வேண்டியிருக்கிறது. அதுவே திருமடங்கள் இப்பொழுது செய்துவரும் திருத்தொண்டு. மக்களை நாடி மடாலயங்கள் சேவை செய்ய முற்பட்டுள்ளன. சாத்திரமும் மர்க்கட நியாயம், மார்ச்சால நியாயம் என்று இரண்டு நியாயங்களைப் பேசும்; அக்காலத்தில் மர்க்கட நியாயமாக (குட்டி குரங்கைத் தழுவுவதாக) இருந்தது. நிலை மாறினாலும் உலகம் வாழவேண்டும் என்ற குறிக்கோளுடைய மடாலயங்கள் சும்மா இருக்க முடியுமா! அதன் விளைவுதான் இன்றைய சேவை. இனி மக்கள் மடாலயங்களை நாடிச் செல்லுகிறார்கள் என்று பெருமையோடு வரலாறு எழுதும் பேறும் நமக்குக் கிடைக்குமென்ற நம்பிக்கை வளர்கிறது. இது எழுதிப் பார்ப்பதல்ல, செயலாற் காண்பது. இப்பொழுது தருமை ஆதீன ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் பட்டமேற்ற பத்து வருஷங்களில் முன்பிருந்ததைவிட **அன்பர் கூட்டம்** பெருகிவருகிறது. நாட்டுமக்கள் எல்லோரும் இவ்வாதீனம் இயற்றும் தொண்டுகளைப் பாராட்டிப் பெருமை பேசுகிறார்கள். தலைவர்களும் அப்படியே. வருகிறார்கள்; காண்கிறார்கள்; புத்துணர்ச்சி பெறுகிறார்கள். இது ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தின் ஆட்சிச் சிறப்பு. காட்சிக்கு எளியராய் அன்போடு பழகும் இனிய குணம் படைத்தவர்களாய், இன்னும் கொடுப்பதற்கு இல்லையே என்ற அருங்கொடை உடையவர்களாய்த் திகழ்கிறார்கள் என்று அன்புலகம் பேசுகிறது; புலவர்கள் போற்றுகிறார்கள்.

## நடமாடுங் கோயில் :

நமது கோயில்களும் மடங்களும் ஒரு சமுதாய அமைப்பு. அன்றாட வாழ்விலே தன் உடம்பில் உண்டாகிற வளர்ச்சி தான்அறியமுடியாதது போல இந்தப் பெரிய ஸ்தாபனங்களும் நமக்கு என்ன செய்கின்றன என்பதை நாம் தெரிய முயற்சி செய்வதில்லை. அடுத்த வீட்டிலுள்ள பிள்ளையின் சாமர்த்தியத்தைப்பற்றி இந்த வீட்டுக்காரர் பெருமையாகச் சொல்வார்; இது உலக வழக்கு. இதுபோல நமது ஸ்தாபனங்கள் மக்களுக்குப் பொதுவாக எவ்வளவு தொண்டுகள் செய்கின்றன, என்ன பயன் அடைகிறோம் என்பதைப்பற்றிச் சிந்தித்தல் கிடையாது. ஆனால் அவ்வித மர்க மக்கள் தொண்டு நமது ஸ்தாபனங்களும் செய்யவேண்டும் என்று கூச்சல் மட்டும் மிகுதியாக இருக்கிறது. அந்த ஊர் மக்களுடைய அன்றாட வாழ்விலே ஒன்றியதாக இருப்பதே இதற்குக் காரணம். கோவிலுக்கு -

மானால் சாதனம் வேண்டும். அந்தச் சாதனையிலே வெற்றிபெற்றவர்கள் அருள் உடையவர்களாவார்கள். அந்தத் 'தேறுசிந்தையார்கள்' கண்டு கட்டிவைத்த திருக்கோயில்களில் மூவர் முதலிகளாற் பாடல்பெற்ற சிறப்புடைய தலங்கள் பல இவ்வாட்சியின் கீழ் இருந்துவருகின்றன. திருப்புள்ளிருக்குவேளூர் (வைத்தீசுவரன்கோயில்,) சீகாழி, திருவையாறு, திருக்கடவூர், திருப்பனந்தாள், திருக்கோளிலி, திருஆரூர், சிராப்பள்ளி முதலிய பெருந்தலங்கள் 27 இவ்வாதீன ஆட்சியில் உள்ளன.

ஆலயம் மனத்தூய்மை உண்டாக்குவதற்கு ஒரு தூண்டுகோல்; அங்கே தூய்மை நிறைந்திருக்கவேண்டும்; அப்போதுதான் ஆலயமும் அங்குள்ள கடவுட் திருமேனிகளும், காண்போர்க்குக் கனிவை உண்டாக்கும். அழகும் அங்கே அரண்செய்யப்பெறவேண்டும்; அப்பொழுது தான் அங்கே கடவுட்காட்சியைக் காணலாம். ஐந்துபேரறிவும் கண்களே கொள்ளும். இவற்றுக்கு இலக்கியமாக ஆதீன ஆலயங்கள் இலங்குகின்றன என்று பலரும் பாராட்டிப் பேசுகிறார்கள்.

கோபுரங்கள், விமானங்கள், மண்டபங்கள் எனுமிவற்றைப் புதுக்கித் திருப்பணிசெய்தல், கடவுட் திருமேனிகளையும், பரிவட்டங்களையும், பாத்திரங்களையும் தூய்மைப் படுத்தல், ஆகம முறைப்படி வழிபாடு நடத்துவித்தல், திருமுறைப் பாராயணம் விண்ணப்பிக்கச் செய்தல், வருகின்ற பக்தர்களுக்கு வசதிசெய்தல், வாகனங்கள், திருவாபரணங்கள், திருக்குளம் செப்பனிடுதல், சொத்துக்களை நல்லமுறையில் பராமரித்தல், திருக்கோயில்களை ஜீரணோத்தாரணமாகவும், அஷ்டபந்தனமாகவும் குடமுழுக்கு விழாக்கள் செய்தல், அர்ச்சனைகளை அழகுற நிகழ்வித்தல், உற்சவங்களை ஒழுங்குறச்செய்தல்-இவை நம் ஆதீனக்கோயில்களுக்கே உரிய சிறப்பியல்புகள்.

அடியிற்கண்ட ஆலயங்களில் குடமுழுக்கு விழாக்கள் நிகழ்த்தப் பெற்றிருக்கின்றன:- 1. புள்ளிருக்குவேளூர். 2. சீகாழி. 3. திருக்கடவூர் 4. தருமபுரம் - தருமபுரீசுவரர் ஆலயம். 5. ஞானபுரீசுவரர் ஆலயம். 6. மேலக்குருமூர்த்த ஆலயம். 7. தலைஞாயிறு. 8. கருங்குயில்நாதன் பேட்டை. 9. மணக்குடி. 10. திருநின்றியூர். 11. திருமுல்லைவாசல்.

## அன்பர் கூட்டம்:

அக்காலத்திலே மக்கள் ஞானவேட்கையால் திருமடங்களை நாடி வந்தார்கள். அப்போது உண்மை அவாவோடு ஓடிவரும் காரணர்க்கு உண்மை (ஞான உபதேசம்) தெளிய வைத்தார்கள் திருமடத்து ஞானாசாரியர்கள். மக்கள் மடங்களுடைய வளர்ச்சியிலே கண்ணும் கருத்துமாக இருந்தார்கள். ஏதாவதொரு காணிக்கை செலுத்தி அதைப் பெருமையாக

நினைத்தார்கள். காலம் மாறியது. தேசம் மாறியது. அந்நிய ஆட்சியினர் - அந்நிய மதத்தினர் - ஆட்சியிலே புகுந்தனர். மக்கள் மனப்பாங்கும் மாறியது. அரசன் எவ்வழி குடிகளும் அவ்வழி அல்லவா? 'வரலாறு சுழன்று கொண்டே வரும்' என்பர் அறிஞர். அதுவும் நிகழ்ந்தது. அதுதான் நம் நாட்டுச் சுதந்தரம். சுதந்தரம்பெற்ற பிறகு பழைய பண்பாடு-சமயப்பண்பாடு - வளரவேண்டும் என்ற எண்ணமும் வளரலாயிற்று. அதற்கு ஒரு தூண்டுகோலும் வேண்டியிருக்கிறது. அதுவே திருமடங்கள் இப்பொழுது செய்துவரும் திருத்தொண்டு. மக்களை நாடி மடாலயங்கள் சேவை செய்ய முற்பட்டுள்ளன. சாத்திரமும் மர்க்கட நியாயம், மார்ச்சால நியாயம் என்று இரண்டு நியாயங்களைப் பேசும்; அக்காலத்தில் மர்க்கட நியாயமாக (குட்டி குரங்கைத் தழுவுவதாக) இருந்தது. நிலை மாறினாலும் உலகம் வாழவேண்டும் என்ற குறிக்கோளுடைய மடாலயங்கள் சும்மா இருக்க முடியுமா! அதன் விளைவுதான் இன்றைய சேவை. இனி மக்கள் மடாலயங்களை நாடிச் செல்லுகிறார்கள் என்று பெருமையோடு வரலாறு எழுதும் பேறும் நமக்குக் கிடைக்குமென்ற நம்பிக்கை வளர்கிறது. இது எழுதிப் பார்ப்பதல்ல, செயலாற் காண்பது. இப்பொழுது தருமை ஆதீன ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் பட்டமேற்ற பத்து வருஷங்களில் முன்பிருந்ததைவிட **அன்பர் கூட்டம்** பெருகிவருகிறது. நாட்டுமக்கள் எல்லோரும் இவ்வாதீனம் இயற்றும் தொண்டுகளைப் பாராட்டிப் பெருமை பேசுகிறார்கள். தலைவர்களும் அப்படியே. வருகிறார்கள்; காண்கிறார்கள்; புத்துணர்ச்சி பெறுகிறார்கள். இது ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தின் ஆட்சிச் சிறப்பு. காட்சிக்கு எளியராய் அன்போடு பழகும் இனிய குணம் படைத்தவர்களாய், இன்னும் கொடுப்பதற்கு இல்லையே என்ற அருங்கொடை உடையவர்களாய்த் திகழ்கிறார்கள் என்று அன்புலகம் பேசுகிறது; புலவர்கள் போற்றுகிறார்கள்.

## *நடமாடுங் கோயில் :*

நமது கோயில்களும் மடங்களும் ஒரு சமுதாய அமைப்பு. அன்றாட வாழ்விலே தன் உடம்பில் உண்டாகிற வளர்ச்சி தான்அறியமுடியாதது போல இந்தப் பெரிய ஸ்தாபனங்களும் நமக்கு என்ன செய்கின்றன என்பதை நாம் தெரிய முயற்சி செய்வதில்லை. அடுத்த வீட்டிலுள்ள பிள்ளையின் சாமர்த்தியத்தைப்பற்றி இந்த வீட்டுக்காரர் பெருமையாகச் சொல்வார்; இது உலக வழக்கு. இதுபோல நமது ஸ்தாபனங்கள் மக்களுக்குப் பொதுவாக எவ்வளவு தொண்டுகள் செய்கின்றன, என்ன பயன் அடைகிறோம் என்பதைப்பற்றிச் சிந்தித்தல் கிடையாது. ஆனால் அவ்வித மாக மக்கள் தொண்டு நமது ஸ்தாபனங்களும் செய்யவேண்டும் என்று கூச்சல் மட்டும் மிகுதியாக இருக்கிறது. அந்த ஊர் மக்களுடைய அன்றாட வாழ்விலே ஒன்றியதாக இருப்பதே இதற்குக் காரணம். கோவிலுக்கு -

மடத்துக்குச் சொத்துக்கள் இருக்கின்றன. அவற்றிலிருந்து வரும் வருமானங்கள் வருஷா வருஷமும் செலவாகி வருகின்றன. பக்தர்கள் வருகிறார்கள். காணிக்கைகள் செலுத்திக் கொள்கிறார்கள். அவையும் திரும்ப மக்களுக்கே போய்ச் சேருகின்றன. கோவிலிலே அபிஷேகமாகும் பால், எண்ணெய் முதலியனவும், நிவேதனமாகும் பொருள்களும், படியே ஏழை மக்களுக்குப் போய்ச் சேரவில்லையா? எத்தனை க்கான குடும்பங்கள் நம்நாட்டில் இவற்றையே நம்பி வாழ்கின்றன! மேலும் மக்களில் முடவர்கள், குருடர்கள், நோயாளிகள், வேலைசெய்ய இயலாதவர்கள், அநாதைகள், அயலார்கள் இப்படியாக எத்தனை எத்தனை ஆயிரம் மக்களுக்கு இவை உணவளிக்கின்றன! இது நமது பழைய பண்பட்ட சமுதாயச் சேமிப்பல்லவா! இந்த நிலையிலே இவற்றைப்பற்றிச் சிந்திக்க வேண்டாமா? இத்தனையும் ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களின் திருவுளத்துத் தோய்ந்து நின்றன. அதன் பலன் தான் **நடமாடும் கோயில்கட்கு** அவர்கள் ஆற்றிவரும் அரும்பணிகள்.

அநாதை இல்லம், மருத்துவ நிலையம், பள்ளிப் படிப்புக்குப் பண உதவி, இலவசக்கல்வி, வயிற்றுக்குச்சோறு, தலைக்கு எண்ணெய், உடுந்த உடை, திக்கற்றூர்க்கு வழிச்செலவு இவ்வாறெல்லாம் உதவிசெய்து வருவது உலகம் அறிந்தது. நாட்டிலே பஞ்சம்வந்த காலத்தும், வெள்ளம் வந்த காலத்தும், போர் மூண்டகாலத்தும், சமாதான காலத்தும் ஆதரவு எனத் தேடி வருவோர்க்கு அன்பாக உதவியிருக்கிறார்கள்.

## *உலகம் வாழ்க!*

"உலகம் வாழ்ந்தால்தான் நாம் வாழமுடியும் என்ற உறுதி கொண்டவர்கள்; தான்மட்டும் வாழவேண்டும் என்ற நினைப்பையேவெறுப்பவர்கள்" ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள். இந்தக் கொள்கைக்கிணங்க இந்த ஆட்சியிலேயே எந்தத் தனியொருவனுக்கும் பயன்படக் கூடியதாக உதவி எதுவும் செய்ய மறுப்பார்கள். சமூக, சமுதாய வளர்ச்சியே அவர்கள் குறிக்கோள். நம்முடைய சமயக்கொள்கையே 'வாழ்க உலகெலாம்' என்பது; 'உலகெலாம் உவப்ப' என்பது; 'உலகெலாம் தானே' என்பது; 'வையகம் துயர்தீர்க' என்பது; அதுவும் மனிதவர்க்கம் மட்டும் வாழவேண்டும் என்பதல்ல; உயிர்வர்க்கமெல்லாம் வாழவேண்டும் என்பது. இவற்றை வாழ்க்கைக் குறிக்கோளாக வைத்து இயன்ற பணியெல்லாம் காலமறிந்து, இடமறிந்து செய்து வருகிறார்கள். இது பல பெரியவர்களும் சொல்லும் செய்தி. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் திருவுள்ளத்து விரிவே போல வாழ்க வையகம்! வாழ்க திருநெறி!

> ஆய்வார் பதிபசுபாசத்தின் உண்மையை; ஆய்ந்தறிந்து
> காய்வார் பிரபஞ்சவாழ்க்கை எல்லாம்; கல்விகேள்விஅல்லல்
> ஓய்வார்; சிவானந்த வாரியுள்ளேஒன் றிரண்டுமறத்
> தோய்வார் கமலையுள் ஞானப்பிரகாசன்மெய்த் தொண்டர்களே.

## என்னவேண்டும்?

எங்கள் அநுபவம் மூட்டைகள் அதிகம் தேவையில்லை என்பது. கேதாரம் வரையும் தென்னாட்டார்க்கு உணவுவகைகள் தயாரிக்க அரிசி, பருப்பு, காய்கறிகள் எல்லாப் பண்டங்களும் கிடைக்கின்றன. பெண்கள் 'உப்பிலிருந்து கற்பூரம் வரை' என்று சொல்லுவார்கள். அப்படியே இருக்கிறது அங்கே. நமக்கு மிக அவசியமாக வேண்டியவை:-

1. படுக்கை
2. கம்பளி விரிப்பு
3. கம்பளிப் போர்வை
4. வேண்டிய பருத்தி உடைகள்
5. காலுறை (Gloves)
6. கையுறை (Socks)
7. மேற்சோடு (Boots)
8. குடை
10. தட்பவெப்பக்குப்பி (Flask)
11. மெது கம்பளிச் சட்டை (Woollen Shirt)
12. சில்லறை அலுமினிய பாத்திரங்கள்
13. சாம்பார், ரசப்பொடி
14. பருப்புப்பொடி
15. சத்துமா
16. அவல்
17. ஹார்லிக்ஸ்

கால்சட்டை (Pant) இருந்தால் மிகவும் வசதியாக இருக்கும். May, June மாதங்களில் குப்தகாசி வரை சாதாரணநிலைகளில் அவரவர் ஊர்ப்பகுதியில் இருப்பதுபோல இருக்கமுடியும். அதற்குமேலே குளிர்ப் பகுதி தொடங்குகிறது. அங்கிருந்து கௌரிகுண்டம் வரையிலும் அதிகக் கஷ்டம் இராது. அதற்குமேல் உறைபனி, ஆகையால் வெப்பம் காக்கும் உடைகளும் மற்ற சாதனங்களும் மிகமிக அவசியமானது.

## முதலுதவி மருந்துகள் நாங்கள் எடுத்துச்சென்றது:

| நெ. | பெயர் | விபரம் |
|---|---|---|
| 1. | டிஞ்சர் ஐயோடின் (Tincture iodine) | |
| 2. | டிஞ்சர் பென்சாயின் (Tincture Benzoine) | |
| 3. | காஜ் (Gauze) | |
| 4. | காட்டன் (Cotton) | |
| 5. | பான்டேஜ் (Bandage) | |
| 6. | பிளாஸ்டர் (Plaster) | |

| | | |
|---|---|---|
| 7. | **A. B. C.** லினிமெண்ட். | வலி, விக்கம், உள்ள இடங்களில் தடவவும். |
| 8. | C. A. Q. | ஜலதோஷம் பிடித்தால் சாப்பிடவும். |
| 9. | தென்னலியன் ஜெல்லி | நெருப்புச்சுட்ட புண்ணுக்கு தடவவும் |
| 10. | அனலஜின் டாபலட் | உடம்புவலி, ஜுரம் முதலியவைகளுக்கு அரை மாத்திரை வீதம் நாள் 1-க்கு 3 வேளை சாப்பிடவும். |
| 11. | கார்பின்டெயின் மாத்திரை | சரிவர மலங் கழியாவிட்டால் இரவு படுக்கைக்குப் போகுமுன் 1 மாத்திரை சாப்பிடவும். |
| 12. | அமோனியம் காப்சூல்ஸ் | சளி பிடித்துத் தொண்டையில் வலி முதலியவைகளுக்கு நாள் 1-க்கு 3 காப்சூல்ஸ் சாப்பிடவும். |
| 13. | சுஜகனடின் மாத்திரை | பேதியானாலும் சீதம் போனாலும் நாள் 1-க்கு 4 மாத்திரை சாப்பிடவும். |
| 14. | ஆலிவ் ஆயில். | உடம்பில் தடவிக் கொள்ளலாம். |
| 15. | சல்பர்மேடின் பவுடர் | காயம்பட்டால் காயத்தின் மேல் போட்டு கட்டி விடவும். |
| 16. | அலில் மாத்திரை | உடம்பில் அரிப்பு, சில்விஷம்போலிருத்தல், உடம்பில் தடிப்பு முதலியவைகளுக்கு நாள் 1-க்கு அரை மாத்திரை வீதம் 3 வேளை சாப்பிடவும். |
| 17. | காலடிசில் | வேர்க்குரு, அரிப்பு முதலிய இடங்களில் சந்தனம் தடவுதல்போல் தடவிக்கொள்ளலாம். |
| 18. | டர்மோமயின் ஆயின்ட்மெண்ட் | கண் சிவப்பு, கண் எரிச்சல் முதலியவைகளுக்கு கண்ணுக்குள் தடவிக் கொள்ளலாம். |
| 19. | லைவட்டாஸின் | பசி இல்லாமை, புளித்த ஏப்பம் முதலியவைகளுக்கு கால் அவுன்ஸ் எடுத்து 1 அவுன்ஸ் தண்ணீரில் கலந்து நாள் 1-க்கு 3 வேளை சாப்பிடலாம். |

| | | |
|---|---|---|
| 20. | ஹிலட்ஸ் மிக்சர் | வயிற்றுவலி, பேதிமுதலியவைகளுக்கு 1 ட ஸ்பூன் எடுத்து 1 அவுன்ஸ் தண்ணீரில் கலந்து நாள் ஒன்றுக்கு 3 வேளை சாப்பிடலாம். |
| 21. | டெட்டால் | கிருமி நாசினி. |
| 22. | ஜெயின் ஆஸிடன் | தொண்டைவலியாயிருந்தாலும் எச்சில் முழுங்க முடியாமல் இருந்தாலும் பஞ்சுக் குச்சியால் எடுத்து தொண்டையில் தடவவும். |
| 23. | கோரமின் டாப்லட் | பலஹீனம், மார்வலி முதலியவைகளுக்கு அரை மாத்திரை முதல் 1 மாத்திரை வரை நாள் 1-க்கு 3 வேளை சாப்பிடவும். |
| 24. | கிராப் பாண்டேஜ் | முழங்காலில் வலியிருந்தால் பட்டி கட்டிக் கொள்வதைப்போல் கட்டிக் கொள்ளலாம். |
| 25 | ஸ்பிரிட் அம்மோ அரோமாட்ஸ் | மயக்கமாயிருந்தால் பஞ்சில் நனைத்து முகந்து பார்க்கவும். 10 சொட்டு தண்ணீரில் கலந்து சாப்பிடவும். |

## செலவைப் பாருங்கள் :

தனியொருவர் தருமையிலிருந்து புறப்பட்டுக் கேதாரம் எய்துதற்கு, மூன்றுவது வகுப்புப் பிரயாணத்தில் விளையும் செலவு சுமார் ரூபாய் 75 ஆகலாம்; அன்றாடப் படிச்செலவு தனி; விவரத்தைக் கீழேகாணலாம்.

| | ரூ. அ. பை. |
|---|---|
| மாயூரம்—சென்னை | 5—9—0 |
| சென்னை—காசி | 46—0—0 |
| காசி—ஹரத்துவாரம் | 14—2—0 |
| ஹரத்துவாரம்—ரிஷிகேசம் | 0—9—0 |
| ரிஷிகேசம்—கீர்த்திநகர் | 6-14—0 |
| கீர்த்திநகர்—ஸ்ரீநகர் | 0—4—0 |
| ஸ்ரீநகர்—உருத்திரப் பிரயாகை | 1—1—0 |
| | 74—7—0 |

(போல்டாக்ஸ்) முதலியவற்றையும் இணைத்தால் சற்றேறக்குறைய ரூபாய் 75 ஆதல் காண்க. உருத்திரப்பிரயாகைக்குமேல் சாமான் தூக்கி வரும் கூலிக்கு மைல் ஒன்றுக்கு இரயில்வே மணங்கு 1 க்கு ரூபாய் 1 விதம் கொடுக்கவேண்டும். கேதாரத்துக்குக் கண்டியில் போவதாக இருந்தால் உத்தேசம் ரூ 75ம். தண்டியில் ரூ 200. குதிரையில் ரூ. 100ம் ஆகும் இது கூட்டமில்லாத காலத்தில் ஏற்படக்கூடியது.

## *கற்றுக்கொள்ளுங்கள் : தமிழுக்கு இந்தி.*

அரிசி – சாவல்
துவரம்பருப்பு - அரஹர்-கா-தால்
உளுத்தம்பருப்பு - உடத்-கா-தால்
பாசிப்பருப்பு - மூங்-கா-தால்
முந்திரிப்பருப்பு – காஜு
திராக்ஷை – கிஸ்மிஸ்
மிளகாய் – மிர்ச்
மிளகு – கோல் (Gole.) மிர்ச்
ஜீரகம் – ஜீரா
உப்பு – நிமக்
புளி – இம்லி
வெந்தயம் – மெத்தி
கடுகு – சரஸ்
கொத்தமல்லி – தன்யா
வெங்காயம் – பியாஜ்
பூண்டு - லஸூங்
பெருங்காயம் – கீங் (இங்க்)
வெல்லம் – கூடு (Gude)
ஜீனி – ச்சீனி
கல்கண்டு – மிஸ்ரி
பால் – தூத் (Dhoodh)
தயிர் – தஹி
நெய் – கீ (Ghee)
வெண்ணை - மக்கன்
உறைப்பு - நீம்கி கட்டா
புளிப்பு - கட்டா
கசப்பு - கடுவா
தித்திப்பு - மிட்டா
கத்தரிக்காய் - பண்டா (Bhanda)
வெண்டிக்காய் - பிண்டி (Bindi)
பச்சைமிளகாய் - கச்சாமிர்ச்
பச்சைக்கொத்தமல்லி - தன்யா, ஹரமிர்சா
கருவேப்பிலை - கருகப்பத்தா
அப்பளம் - பப்பட்
வாழைக்காய் - கச்சா கேலா
வாழைப்பழம் - கேலா

வாழை இலை - பத்தா (Patha)
மாம்பழம் - ஆம்
ஆரஞ்சு - (குடகு) சந்திரா
சாத்துக்குடி - முசம்பி
கீரை - சப்ஜி
தேங்காய் - நரியல்
விறகு - லக்டி
கரி - கொய்லா
கொப்பரை - கொப்படா
குங்குமம் - ரோரி
விபூதி - (பஸ்மம்) பபூத்
சந்தனம் - சந்தன்
பூ - பூல்
நட - சலோ
நடவுங்கள -
போ - ஜாவ்
போங்கள் - ஜாயியே
வா - ஆவ்
வாருங்கள் - ஆயியே
திரும்பு - லவ்டோ
பார் - தேக்
பாருங்கள் - தேக்கியே
திரும்பிப்பார் - லவ்ட்-கர்-தேக்யே
நிறுத்து - டேரோ, ரெக்கோ
வேகமாகப்போ - ஜல்தி ஜாவ்
மெதுவாகப்போ-தீரே சலோ
உட்கார் - பைட்டோ
உட்காருங்கள் - பைட்டியே
எழுந்திரு - உட்டோ
எழுந்திருங்கள் - உட்டியே
வந்துவிட்டது - ஆகயா
ஆம் - ஹா, ஜி
இல்லை - நஹி, நை
நீ – தும்
நீங்கள் - ஆப் (Aup)
நான் - மை
நாங்கள் - ஹம்

என்னுடைய - ஹமாரே
பெண் - லடுக்கி
பையன் - லடுக்கா
அம்மா - மாயி
அப்பா - பாப் (Bhap)
ஐயா - பாபு
நடுத்தரவயது ஆண் - யுவக்
,, பெண் - யுவகி
கிராமம் - கிராம்
தங்குமிடம் - சட்டி
கோவில் - மந்திர்
மடம் - மட்
போஸ்டாபீஸ் - டாக்கானு
டாக்டர் - டாக்டர்
போலீஸ் - போலீஸ்
ரயில்வே ஸ்டேஷன் - ரயில்வே ஸ்டேஷன்
தண்ணீர் - பானி
சூடுஉள்ளது - கரம்
குளிர்ச்சி - டண்டா
பனி - பரப் (Baraf)
மழை - பாரிஸ் (Baris)
பச்சை - கச்சா
காற்று - அவா
திரும்பிக்கொள் - குமோ
திருப்பு - கும்கரோ
ஆறு - நதி
செருப்பு - சப்பல்
பூட்ஸ் - ஜூதா
பித்தளை - பீத்தல்
தாமிரம் - தாமிரத்
வெள்ளி - சாந்தி (Chandi)
தங்கம் - சோனு
சொல் - போலோ (Bolo)
மற - பூலோ (Poolo)
துண்டு - துக்கடா
வேட்டி - தோத்தி
துணி - கப்படா
கலர் - ரங்
கருப்பு - காலா
சிகப்பு - லெல்
வெள்ளை - சபேத் (Safate)
கம்பளி - கம்பல்
சட்டை - கமீஜ்
பனியன் - கஞ்சி (Ganji)
ஜமக்காளம் - பிஸ்த்ரா
தலையணை - தக்காயி

தடிக்கம்பு - லட்டி
சுக்கு - சுண்டிக் (சோண்ட்)
இஞ்சி - அதரக்
சிறிது - சோட்டா
பெரியது - படா
பருமன் - மோட்டா
மெல்லிய - துப்லா
அதிகமாக - பஹூத்
கொஞ்சம் - கூச், தொட
தெரியும் - மாலும்
தெரியாது - நஹி மாலும்
தெரிந்துகொள்வது - நூன்தா
நீயார் - தும்-கோன்-ஹை
நீ எந்ததேசம் - தும் கோன் தேஷ்-கா
படகு - நாஹா, படவா
வண்டி - காடி (Gadi)
குதிரை - கோடா (goda)
மாடு, காளை - பைல்
பசு - கயா (Gaya)
எருமை - பைஸ் (Bize)
மோட்டார் - மோட்டார்
ரிக்ஷா - ரிக்ஷா
கழுதை - கதா (Gata)
குரங்கு - பந்தர்
1 - ஏக்
2 - தோ
3 - தீன்
4 - சார்
5 - பாஞ்ச்
6 - சே
7 - சாத்
8 - ஆட்
9 - நௌ
10 - தஸ்
11 - கியாரஹ்
12 - பாரஹ்
13 - தேரஹ்
14 - சௌதஹ்
15 - பந்த்ரஹ்
16 - சோலஹ்
17 - சத்ர
18 - அட்டாரா
19 - உன்னீஸ்
20 - பீஸ் (Bees)
30 - தீஸ்
40 - சௌபீஸ்

50 - பச்சாஸ்
60 - சாட்
70 - சத்தர்
80 - அஸி
90 - நௌபீஸ்
100 - சௌ
1000 - ஹஜனர்
கால் - பாவ்
அரை - ஆதா
முக்கால் - தின்பரா

காலணு - பைஸ்
ரூபா - ருப்யா
சேர் - சேர்
சாதம் - பாத்
குடி - பியோ
சரி - டீக்கே
நன்றாக இருக்கிறது - அச்சா
கெட்டது - கராப் (f)
இடைபோடு - உஜன்கரோ
கொண்டுவா - லியாவ்; லாவ்
கொண்டுபோ - லே ஜாவ்
அயோக்யன் - பத்மாஷ்
யோக்யன் - அச்சாவாலா
முதலாளி, பெரியவர்-மாலிக், ஸாப்
குரு - மகந்த்
சந்நியாசி - சாது, மகாத்மாஜி
ஏழை - கரீப் (Karif)
ஏற்றம் - சடாயி
இறக்கம் - உத்தராயி
எத்தனை - கித்னு
என்ன - கியா

டீ - சா
காப்பி - காப்பி
எண்ணை - தேல்
நல்ல எண்ணை - தில்-கா-தேல்
கடலை எண்ணை - பாதாம் தேல்
தே. எண்ணை - கரிகால் தேல்
ம. எண்ணை - மட்டி-கா-தேல்
மட்டி - மண்
கல் - பத்தர்
மணல் - பாலு
மயிர் - ப்பாலு
வண்ணான் - தோபி
பரியாரி - அஜாம், நாயி
நாய் - குத்தா
ஆடு - பக்ரி
பண்டா - வைதிகன்
பண்டிட் -பிராமணன்
பெயர் - நாம்
எங்கே, எந்த - கிதர்
அங்கே, அந்த - உதர்
இங்கே, இந்த - இதர்
அந்தப்பக்கம் - இஸ்தரப்
துக்கான் - கடை
ஜன்னல் - கிடுக்கி
ரோடு - ரஸ்தா
பெரிய தெரு - சடக்
சந்து - கல்லி (Gally)
கக்கூஸ் - தட்டிகானு
ஒன்றுக்குப்போ - பிசப்கர்னு
வெளியே போ - பார் ஜானு
வெளியே போதல் - பார்கயா



## அடைவுத் திருத்தாண்டகம்

கந்தமாதனம் கயிலைமலை கேதாரம்
காளத்தி கழுக்குன்றம் கண்ணார்அண்ணா
மந்தமாம்பொழிற் சாரல்வட பர்ப்பதம்
மகேந்திர மாமலைநீலம் ஏமகூடம்
விந்தமாமலை வேதம்சையம் மிக்க
வியன்பொதியின் மலைமேரு உதயமத்தம்
இந்துசேகரன் உறையும் மலைகள் மற்றும்
ஏத்துவோம் இடர்கெடநின் றேத்துவோமே.

—அப்பர்.